ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணஸகாயம்.

---

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்களியற்றிய

# பெரிய எழுத்து

# பஞ்சபாண்டவர் வனவாசம்.

சுத்தப்  பதிப்பு

இதில் ஆங்காங்கு ஐதீகப்படி
அரும்படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன

---

டி. எஸ். ராமாநுஜஅய்யங்கார்
அவர்களது

சென்னை திருவொற்றியூர்
ஸ்ரீ ராமானுஜம் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப் பெற்றது

1925

இதன் விலை அணா-8

கெ-89, வடவண்டைமாடவீதி திருவொற்றியூர்

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# பஞ்சபாண்டவர் வனவாசம்



### விநாயகர் தோத்திரம்.

ஐந்துகரத்தோனே அரனார் திருமகனே
அறுமுகற்குமூத்தவனே ஆனைமுகப்பிள்ளையாரே
தொந்திவிநாயகரே தொப்பைக்கணபதியே
பானைவயிற்றோனே பழமேந்துங்கையோனே
மூலமுதலேநீர் முன்னடக்கவேணுமையா

### சரஸ்வதி தோத்திரம்.

நாவிற்சரஸ்வதியே நான்முகனார்தேவியரே
சதுர்முகனார்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய் மறையவனார்தேவியரே
இந்தக்கதைசொல்வதற்கு என்கருத்தில்வாருமம்மா
தப்புகளில்லாமல் தாயேநீவாக்கருள்வாய்
பஞ்சவர்கள்தன்கதைக்கு பார்வதியேமுன்னிருந்து
குற்றமதுவாராமல் கொண்டணைத்துக்காருமம்மா

### கதையின் வரலாறு.

## முதலாவது சூரியவனம்

காரானைக்கண்ணே கணபதியேமுன்னடவாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனபின்பு
தேசத்தழகுமன்னன் திரிபோதிரப்பெருமான்
வனவாசம்போனபின்பு மகாராஜனென்னசெய்தான்
அம்மான்சகுனியை அருகாகத்தானழைத்து
மாமன்சகுனியின் மதிமுகத்தைதான்பார்த்து
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுசொல்வான்

சபைகள் நிறைந்திருக்கச் சர்ப்பக்கொடியோனுரைப்பா
ஐவர்வனவாசம்போ யஞ்சாறுமாதமுண்டு
செத்தாரோபிழைத்தாரோ சேதிதெரியவில்லை
வனம்போனபஞ்சவர்கள் மாண்டாரெனவறியேன்
அம்மான்சகுனியை அரவத்துவஜன்கேட்கையிலே
மாமன்சகுனியுந்தான் மருமகனுக்கேதுரைப்பான்
தூதரைப்போகவிட்டு தொலைதூரமேதேடில்
வனமாய்வனங்களிலே வனவாசஞ்செய்கிறதும்
செத்ததுவும்பிழைத்ததும் சேதிதெரியவில்லை
என்றதுகேட்டவுடன் எழுந்தான்துரியோதரனும்
அங்கிருக்குந்தூதர்களை அரசமன்னன்தானழைத்து
ஐவர்வனம்போய் அநேகநாளாச்சுது
எந்தவனத்தி லிருக்கிறாரென்றறிந்து
ஐவர்கண்காணாமல் அதிசீக்கிரம்வாருமென்றார்
காற்றாய்ப்பறந்து கடுகியேவாருமென்றான்
தாம்பூலம்வாங்கித் தானடந்தார் தூதுவர்கள்
கோட்டைகடந்தார்கள் கொத்தளமுந்தான்கடந்தார்
பட்டணமுந்தான்கடந்து பாரவனம்போகலுற்றார்
செந்நாய்புலிகரடி சிறும்வனங்கடந்தார்
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனங்கடந்து
சூரியவனந்தனிலே போய்ச்சேர்ந்தார் தூதுவர்கள்
பர்ணசாலைக்குள்ளிருக்கும் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்குமிடமறிந்து வகிநடந்தார்கள்
வனமாய்வனங்கடந்து வாரார்களம்பலத்தே
திரியோதிரனிருக்கும் சிங்காதனத்தின்முன்போய்
சாஷ்டாங்கமாகவேதான் சரணமிட்டார் தூதுவர்கள்
மகாராஜாமெச்சுகின்ற மன்னவரேநீர்கேளும்
சூரியவனத்திலைவர் சுகமாயிருக்கிறார்கள்
பணர்சாலைக்குள்ளிருக்கும் பஞ்சவரைக்கண்டோமென்றா
அவ்வார்த்தைகேட்டு அரசமன்னனேதுசொல்வான்
மாமாசகுனி மன்னவரேநீர்கேளும்
[illegible] இறவாமல் பஞ்சவர்கள்

தங்கியிருக்கிறார்தரணியிலே
வனவாசந்தீர்ந்து வந்தார்களாமானால்
பங்குள்ளபிரகாரம் பாதிராஜ்ஜியங்கேட்பாரே
வாராமல்பஞ்சவரை வனத்திலேகொல்லுகைக்கு
ஆலோசனைசொல்லுமையா அம்மானெனவுரைத்தான்
மாயன்சகுனி மருமகனுக்கேதுரைப்பான்
செல்வமருமகனே திரியோதிரா அஞ்சாதே
ஐவரைக்கொல்லவென்றால் ஆலோசனைசொல்லுகிறேன்
தேவலோகத்திருக்கும் சினமுற்றதுருவாசர்
அவரை-வருந்தித்தபசுபண்ணால்வந்திடுவாரிப்பொழுதே
வந்தபொழுதில் வருந்திச்சரணம்சொல்லி
அடிசில்சமைத்து அமுதுபடைத்தீரானால்
போஜனமிட்டு புகழ்வேந்தேபொற்பாதத்தில்
சரணமடைந்தால் சந்தோஷப்பட்டிடுவார்
துருவாசர்தன்மகிமை சொல்லமுடியாது
தேவராலாகாது செயிக்கமுடியாது
ஆராலுமாகாது அந்தரிஷியைஜெயிக்க
அப்படிக்கொத்தவரை அழைத்துநீரன்னமிட்டால்
சந்தோஷப்பட்டிடுவார் தபசில்பெரியவரும்
ஐவரைக்கொல்லுதற்கு அவரைமனுகேட்டால்
நல்லதென்றுசொன்னால் இராஜ்ஜியமுன்னுதடா
யாராலேயாகும் ஐவரைகொல்லவென்றால்
என்றுசொல்லகேட்டு இராஜன் திரியோதிரனும்
உள்ளங்குளிர்ந்து உடனேகத்தானெழுந்தார்
அங்கொருவர்தானறியார் அரவக்கொடிபோனடந்தான்
மூத்துமிதியடியை தொட்டுநடந்தசைந்தான்
பூங்காவனம்புகுந்து புதுக்கங்கைநீராடி
ஸ்தானங்கள்செய்து சபதபமும்தான்முடித்து
நினைந்துசிவனை நெற்றியில்வெண்ணீரணிந்து
அரகராவென்று அள்ளியிட்டான்வெண்ணீறு
ஜலங்களைகொண்டு நிலங்களைசுத்திசெய்து
தெற்பாசனம்போட்டு திரியோதிரராஜன்
துருவாசமகாரிஷியை அரிகில்வரத்தானினைந்து
கண்ணிரண்டுமூடிக் கருதில்நினைந்தானே
அருந்தபசுபண்ணானே அரவக்கொடியோனும்
அப்போதுஅந்தரிஷி ஞானதிருஷ்டியால்தானறிந்து

சர்ப்பக்கொடியோன் தபசு நிலையறிந்து
சந்தோஷமாகி தான்வருவாரந்தரிஷி
சடையுஞ்சடைமுடியுந் தம்பிரானைப்போல
கையில்கமண்டலமுங் காசாம்பரமணிந்து
கொண்டுகமண்டலமுந் திருநீறுங்கோபியுடன்
வருகிறாரந்தரிஷி வானுலகந்தான்கடந்து
வனமாய்வனங்கடந்து வாய்மலையுந்தான்கடந்து
துரியோதிரன்தபசு நிலைசேரவந்தரிஷி
கண்டவுடன்மன்னன் கடுகியேதானெழுந்து
முக்காலுமன்னன் முடிவணங்கிதெண்டனிட்டு
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றான்
சிறந்ததுருவாசரிஷி சித்தமகிழ்ந்தேகுளிர்ந்து
என்னையழைத்ததுதானேதுகாருமமென்றார்
மனதில் நினைத்ததெல்லாம் மன்னுவுரையுமென்றார்
அஞ்சிபயந்தவனும் அரசமன்னனேதுசொல்வான்
அமுதுபடைக்கவென்று அநேகநாளென்மனதில்
எண்ணியிருந்தேன்காண் இதுவேகருமமல்லால்
வாரும்மகாரிஷியே வருவீர் அமுதுசெய்வீர்
வருந்தி அழைத்துவந்தான் மாளிகைவாசலிலே
வட்டபணைபோட்டு வந்திருமென்றுசொல்லி
கைக்குச்சலங்கொடுத்தான் கட்டழகன்கோமானும்
தலைவாழையிலைபோட்டு தண்ணீருந்தான்தெளித்து
முக்கனியுஞ்சர்க்கரையும் முன்படைத்தான்துரியோதிரன்
கட்டுவர்க்கமுடனே காவலனுந்தான்படைத்தால்
உண்ணுமுண்ணுமென்று வுபசரணைபண்ணலுற்றான்
அத்தனைபோஜனமும் அருந்தினாரந்தரிஷி
உண்டுபொசித்தாராம் உள்ளங்குளிர்ந்தாரம்
கைபலம்பிக்கொண்டுமவர் கனிவாயுஞ்சுத்திபண்ணி
சிங்காதனத்தினிலே சேர்ந்தாரேயந்தரிஷி
தென்னமுடிவேந்தன் துரியோதிரராஜன்
பொற்றாம்பாளந் தனிலே புட்பமுஞ்சந்தனமும்
தங்கத்தாம்பாளத்தில் தாம்பூலம்தான்கொடுத்தார்
மெத்தமகிழ்ந்தாரே மேன்மைதுருவாசருமே
சர்பக்கொடிபடைத்த சதிமன்னனைப்பார்த்து
மனதில் நினைத்ததொரு வரங்களுந்தாரேனென்றார்
என்றுமவருரைக்க பேதுரைப்பான் துரியோதிரன்

கடுகிமுடுகியே காட்டுத்தரைபொடித்து
ஐந்தடுக்குமெத்தையாய் ஆசனம்போட்டார்கள்
இட்டசிங்காதனத்திலே எதிரிருவருமாய்
பச்சிலைமெத்தையிலே பதியக்கொலுவிருந்தார்
தக்கபுகழுடைய தருமராவர்கூறுவார்
திரிபோதிரன்செய்த சேதிதனைக்கேட்டீரோ
நாடோடிருந்தவென்ன ராஜமன்னன்தானழைத்து
விருந்தருந்தவாருமென்று விருந்தோலைதானனுப்பி
வருந்திபெண்ணயழைத்து வஞ்சனைகள்பண்ணினனே
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
வாரவழிதனிலே வசிகளைத்தான்புதைத்தான்
அதுக்கும்பிழைத்தோமே ஆருடபுண்ணியத்தால்
வசநாபித்தண்ணீர்பந்தல் வழியில்வைத்தான்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேஉன்னருளால்
பொற்குழிவெட்டியே பொற்சிங்காதனங்களிட்டு
கொல்லநினைத்தானே குடிகேடன்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆருடபுண்ணியத்தால்
எண்ணையிட்டுக்கொள்ளுமென்றுஎங்களையுந்தானழைத்து
கொல்லநினைத்தானே குடிகேடன்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆருடபுண்ணியத்தால்
நீரிற்கழுநாட்டி நீராடவாருமென்றான்
குளத்தில்வசிநாட்டி கொப்பெனவேபோங்களென்றான்
அதுக்கும்பிழைத்தோமே அரிராமர்புண்ணியத்தால்
உண்ணுகிறசாதத்திலே ஒருக்காலேநஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைகாரன்நஞ்சையிட்டான்
கொல்லநினைத்தானே குடிகேடன்சத்ராதி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேஉன்னருளால்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே
சொக்கட்டான்போட்டான்காண் சோழிவிளையாட
பகடைசாலைபோட்டு பந்தயங்கள்பேசினான்
நாடுகளுஞ்சீமைகளும் ராச்சியமுந்தான்பறித்தான்
தூயசீமைபெருந் துரைத்தனமுந்தான்பறித்தான்
பெருத்தவிலங்குமிட்டு பெருங்கிடங்கிலேயடைத்தான்
காற்றுநுழையாத கல்லறைக்கிடங்கிலிட்டான்
தள்ளியிழுத்துவந்து தாள்விலங்குபோட்டுவிட்டான்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே

அறையிலிருந்தபெண்ணை அப்பரத்தில் கொண்டுவந்து
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பாவையழகியவளை
அரசர்சபைநடுவே அம்பலமேற்றிவைத்தான்
சொல்லாததுஞ்சொல்லியல்லோ துகிலுரிந்தான்மாபாவி
வாய்வரிசையில்லாமல் வம்பாகப்பேசினனே
பாரவனவாசம் பன்னிரண்டுவருடம்வரை
ஆரணியம்போயிருந்து அப்பாலொருவருடம்
அஞ்ஞாதவாசம் யார்க்குந்தெரியாமல்
மறைந்துருமாறி வெளியிலிருந்துவந்தாக்கால்
நாடுதிரித்துவந்தால் காசிதர்தாரேனென்றான்
பங்குள்ளபிரகாரம் பாதிஞசிதரேனென்றான்
பாரவனவாசம் பரதேசம்வந்துவிட்டோம்
எங்கள் பொழுதுதொலையுமோ பூமிராசாளுவமோ
என்றுதொலையுமோ எக்காலம்சென்றிடுமோ
நாங்கள்சுகமாக ராச்சியத்தையாளுவமோ
உம்முடையதிருவுள்ளம் எப்படியோ நாமறியோம்
பாதஞ்சரணமென்று பணிந்தாரே தருமரவர்
மாயன்பெருமானும் வார்த்தையவர்யேதுசொல்வார்
தலையிலெழுத்தை தள்ளிவைப்பாரொருவருண்டோ
வருந்திவந்தாக்கால் மடியேந்தவேண்டாமோ
ஈசனெழுதியதில் எள்ளளவுங்குறையாது
என்று பிரியவசனத்தை பெருமானுரைத்தாரே
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
இந்திரியாரும் பேதுவனையாகவந்தார்
என்றுமவர்கேட்க யேதுசொல்வார்மாயவரும்
வந்தவருத்தத்தை மாயவரும்கேளுமென்றார்
என்றுசொல்லக்கேட்டு இராசதர்மரவர்
துருவாசமாமுனிக்குத் தெண்டஞ்சமர்ப்பித்து
சொல்லுவார்வாய்திறந்து சொற்பெரியதர்மரவர்
ஆதியே சோதியே ஆண்டவரேவந்ததென்ன
கால்பாதம்நொந்திடவே கால்நடையாய்வந்திரே
செந்தாமரைப்பாதம் செம்புண்ணாய்சிவந்ததுவே
தேடிவந்தகாரியத்தைச் செப்புமென்றார்மாமுனியே
துருவாசமாமுனியுஞ் சொல்லுகின்றார்வாய்திறந்து
குருகுலவங்கிஷத்தில் குந்தியார்புத்திரரே
பேர்ஜனங்கேட்கவர்க்கேன் புகழ்பெரியதர்மரேதான்

உண்மைதம்பியல்லோ உயிர்கொண்டுலாவுகிறோம்
நீரே துணையல்லால் வேறு துணையுமுண்டோ
நம்பினபேர்களையோ ரட்சிக்குந்தேவனல்லோ
அடியாரைக்காக்கின்ற ஆதிபரம்பொருளே
ஏழைகளைக்காக்கின்ற எம்பெருமானாண்டவரே
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரியுமட்டும்
வதுவினைவருமோ எம்பெருமானாண்டவரே
இன்னமென்னவஞ்சனையோ எம்பெருமான் நானறியேன்
வரும்வினையாவுக்கும் மாயவரே துணையாகும்
அரக்குமாமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்கு அட்சயந்துகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார் உலகளந்தமாயவரே
சரணஞ்சரணமென்று தாள்பணிந்தார்பஞ்சவர்கள்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்பஞ்சவர்கள்
மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
ஐவர்மேல்பட்சம் அதிகப்பிரியமுமாய்
சந்தோஷப்பட்டுசெவ்வாயி தன்னுடன்மனங்குளிர்ந்தார்
மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
இந்தவனந்தாண்டி இனியவனம்போங்களென்றார்
மற்றொருவனத்தினிலேதான் மன்னவரேபோங்களென்று
அந்தவனந்தனிலே ஐவரும் வாசம்பண்ணார் (ர்)
தெற்குமேற்குகிழக்கு சேனதூரஞ்சென்றாலும்
வடக்குந்திசையிலேதான் மன்னவரேபோகவேண்டாம்
வதுவினைவந்தாலும் என்னைநினைத்திடுங்கள்
என்றுமாயன்சொல்லி எம்பெருமான்தானெழுந்தார்
வைகுண்டமாங்கடலேறி மாயவனும்போய்நடந்தார்
காடுசெடிதாண்டி கிரிமலைதான்தாண்டி
அழகானதுவாரகைக்கு ஆண்டவரும்போய்நடந்தார்

முதலாவது சூரியவனம்

முற்றிற்று.

# ராமரிஷிவனம்

இரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்ருர்
இராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
முன்னைமுசட்டையும் முகிழ்விரித்ததா துவளை
பன்னைக்கரணையும் பறட்டைபுளிக்கரணையும்
தின்றுதிரிகிருர்கள் தேசாந்திரிபோலே
இராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
ஐந்துபேர்க்குபர்ணசாலை அவ்வனத்திலுண்டுபண்ணுர்
வழுதிக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணுர்
பர்ணசாலைமேலாகப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்த-வனத்திலேஐவர் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலேதான் அழகானராமரிஷி
தபசிற்பெரியவரும் தம்பிரானவரும்
சரணங்கள்பண்ணிஞல் சாதங்கறியிடுவார்
போசனங்களிட்டுமல்லோ புஷ்பங்கள்தான்கொடுப்பார்
சாலிகாசாம்பரமும் கைமணியுந்தான்கொடுப்பார்
புலித்தோலாசனமும் பொருந்தவேதான்கொடுப்பார்
சரணமடைந்து சாமிபோய்வாருமென்ருர்
நாதர்பெரியவர்கள் தப்பெடுத்துவந்தாலும்
அரிராமாவென்றுசொல்லி அனந்தம்பேர்வந்தாலும்
ராமாராமாவென்றசத்தம் இராமரிஷிகேட்டாலும்
அரிகரியென்றசத்தம் அந்தரிஷிகேட்டாலும்
கோவிந்தாவென்றசத்தம் குருமுனிகேட்டாலும்
கோபித்துகண்சிவந்து கொபமெனவேதானெழுந்து
சீறிவருப்புலிபோல் சிவ்வெனவேதானெழுந்து
கையிற்றடியெடுத்து கடுகியடிப்பானே
வாரிமடித்துமவர் வல்லுயிரைக்கொள்ளைகொள்வான்
அப்படியாகவே அநேகநாளிருக்கும்போது
மாயன்பெருமாளும் வார்த்தையதுவரித்து
தன்னாடுக்கிழவனைப்போல் தானேவடிவெடுத்தார்
பரந்தமுமம்நிறைந்த பழுத்தமுநம்போலே
தாதத்வடிவாக சாமிவருவாராம்

இராமரிஷி தானிருக்கும் நல்லவனந்தனிலே
அந்தரிஷியிருக்கும் ஆச்சிரமமுட் புகுந்து
ஹரிஓம்ஹரிஓமென்று அடித்தாரந்தப்பையகனை
சாரங்கபாணியென்று சங்குதனைத்தானூதினார்
அந்தசப்தம்தான்கேட்டு அரிபரிஷிகாளெழுந்து
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேதடியெடுத்து
ஆனையின்மேலேதான் ஆண்சிங்கம்புகுந்தாப்போல்
தாதனொருவனையும் தடியாலடிக்கலுற்றான்
மாரிபடித்தானே மதம்பெரியராமரிஷி
அந்த-அடிப்பட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
மருகாலொருதரமும் மாரிஹன்ராமாவென்றார்
அவ்வடியும்பட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
அவன்-மாரியடித்தானே மாயனென்றறியாமல்
சுழட்டியடித்தானே சுவாமியென்றறியாமல்
அவ்வடியும்பட்டவுடன் அரிராமர்கோபமாகி
கண்கள்சிவந்துமல்லோ காந்தாளமுமெழும்பி
ஆபாகமாகவே வளர்ந்தாரேஆபரங்கே
விஸ்வரூபமாகவே மேகவண்ணர் தாம்வளர்ந்தார்
கண்டானேராமரிஷ சால்கைதடுமாறி
அடித்தொடையுங்காலும் அதிரவிடவிடென்ன
மெத்தப்பயந்து விழுந்தானடிபணிந்தான்
சுவாமிசரணமென்று தாள்பணிந்தான்ராமரிஷி
முக்காலுந்தெண்டனிட்டு முடிவணங்கிபோற்றிசெய்தார்
அப்போதுமாபவரும் அருளாளரேதுசொல்வார்
மாயன்பெருமாளும் வார்த்தைபங்கேதுசொல்வார்
போஜனங்கள்போடுறதும் போதப்பணியுறதும்
மயேஸ்வரரடியார்க்கு வணங்குவதேயல்லாது
எந்தனடியாரை இகழ்ச்சியாய்பேசுறதும்
மாறியடித்துமே வாயாக்குப்பண்ணுறதும்
அநந்தைகள்பண்ணுறதும் ஆகுமோராமரிஷி
ஆகாதகாரியங்கள் அனர்த்தங்கள்தேடிக்கொண்டீர்
அவ்வார்த்தைகேட்டுமே இராமரிஷி
மெத்தபயமாகி விஷ்ணுவைத்தான்பணிந்து
கைகட்டிவாய்புதைத்து கடிகிபேவதுமொன்னான்
ஆதிசிவன்பாதம் ஒருகாலும்நான்பரியேன்
உன்னுடையபாதம் ஒருகாலும்நான் அரியேன்



நகுஷனுக்கு பிருகுபகவான் பாம்பாகப்போகும்படி சாபங்கொடுத்தது.

அவ்வனத்திலேயொருநாள் அடங்காதவீமனவன்
மெத்தவகங்காரமுடன் வீமனுமங்கேதிரிவாய்
கடிதிலெழுந்திருந்தான் கனிகள்பறிக்கவென்று
வடக்குதிசைதனிலே மாமன்போகாதேயென்றார்
காயுங்கனியுமங்கே கடுகிபேகிட்டாதோ
வேண்டியராட்சதர்கள் வேதமுனிகளுண்டோ
அவ்விடத்தில் திசையங்க வெல்லமறிவோமென்று
கடிதிலெழுந்திருந்தான் கட்டழகன்வீமனவன்
சல்லடங்கள்போட்டுமேலே தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
கையில்கதையெடுத்து கடுகியேதானடந்தான்
வடக்குதிசைநோக்கி வாரான்மகாரியான்
காயுங்கனியுமங்கே கடுகப்பழுத்திருக்கும்
அவ்விடத்திலேகனியும் அநேகம்பழுத்திருக்கும்
அருநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தைகளும்
நொக்சித்தமர்த்தையுடன் குடகுபலாப்பழமும்
மாங்கனியுந்தேங்கனியும் வன்னைப்பலாப்பழமும்
மட்டிலாப்பழங்களெல்லாம்வனத்திற்சொரிந்திருக்கும்
அளவில்லாகனிகளெல்லா மவ்வனத்திற்றானிருக்கும்
கண்டானேவீமனவன் கண்கள்மிகக்குளிர்ந்தான்
பார்த்தானேவீமன் பார்வைரெண்டுந்தான்குளிர்ந்தான்
அங்கேகனிகள் அனேகம்பழுத்திருக்க
மெத்தக்கனிகளிங்கே வேணதெல்லாந்தானிருக்க
உண்டுபிழைப்பார்களென்றல்லோஉலகளந்தார்
தின்றுபிழைப்பார்களென்று திருமாலும்
வடக்குதிசைபோகாதே யென்றுரேமாயவரும்
சாமிபெருமாளவர் சத்தியவைக்கண்டோமே
என்றுமனதிலெண்ணி யங்கிநடந்தானே
எண்ணாதுமெண்ணினான் இபலானவீமனவன்
அந்தவனத்திலேயுள் நுழைந்து
மரத்தின்மேலேறினான் மதவீமராஜனவன்
உச்சியிற்கனிபறித்து உண்டுபோசித்தான்காண்
காயுங்கனிபறித்து கடுகவேதான்போசித்தான்
வாயாரத்தின்றுமே வயிறாரத்தான்போசித்தான்
அண்ணருந்தம்பியர்க்கும் அனேகங்கனிபறிக்க
அறுநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தையுடன்

அருச்சுனன் கனிபரித்து அண்ணரண்டைவந்தாண்டு
வாய்திறந்துதருமரவர் மதிகலங்கியேதுசொல்வார்
வெற்றிமதயானை பீமன்கனிபறிக்க
மதபீமன்போயுமல்லோ மன்னுநெடும்போதாச்சு
போனவிடத்திலே புதுமையொன்றுநானறியேன்
மதபீமன்போனசெய்தி வார்த்தையொன்றும்நானறியே
அண்ணனைத்தேடியே அழைத்தோடிவாராயோ (ன்
கண்டு அழைத்துமே கடுகெனவேவாராயோ
ஓடியழைத்துமே ஒருநொடியில்வாராயோ
அப்போது அருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
அப்படியேபோய்வாறேன் அடியேன்சரணமென்று
சரணம்சரணமென்று சாய்த்தான் திருமுடியை
முக்கால்வலம்வந்து மூவொருகால்தெண்டனிட்டான்
போகவிடைதாருமென போர்விஜயன்தெண்டனிட்டான்
போய்வாருமென்றுசொல்லி போகவிடை கொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் விஜயபெருமாளும்
ஜல்லடங்கள்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பில்லைசமுதாடு பிகுவெடுத்தஒட்டியானம்
பட்டுதட்டிகட்டியல்லோ பாளாவுந்தான்சொருகி
அம்புவில்லுந்தானெடுத்து அருச்சுனன்வாரானே
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி பதிகளைந்தாண்டி
சில்லென்றகாடுஞ்செடியுமலைதான்தாண்டி
காலடியைத்தேடியல்லோ கடுகியேதான்வருவான்
பாரவனங்களிலே பார்த்தீபனும்வாரானே
அவ்வனத்திலேகனிகள் அனேகம்பழுத்திருக்கும்
கண்டானே அர்ச்சுனனும் காவலனுமேதுசொல்வான்
காலடியைக்கண்டோமே காவலனைக்காணோமே
எங்கிலும்காணோமே இபலானபீமனைத்தான்
கூவியழைப்போமோ வென்றல்லோசொற்றவனும்
அண்ணரேபீமாவென்று அழைத்தானேவாள்விஜயன்
கூவியழைக்கலுமே குரல்கேட்டுபீமனுக்கு
அருச்சுனன்தேடி அழைக்கிறரென்றுசொல்லி
மாலைமுடியான் மதபீமனேதுசொல்வான்
காளையருச்சுனரே நடுங்கானதூரத்திலும்

அஸ்திநபுரத்துக்கு அண்ணவைங்கூட்டிப்போய்
திரிபோதிரனுடனே செய்திகள்சொன்னாலே
அருச்சுனரைவீமரை அரவம்விழுங்கிற்றென்றால்
மெத்தமகிழ்ந்திடுவான் விஷநாகங்கொண்டவனும்
தருமாபுரமுள்ளதெல்லாம் தருமரைபாருமென்பான்
எப்போதும்போலங்க ளிராச்சியத்தையாண்டிடுங்கள்
நாங்கள் இனிப்பிழைப்போமென்று எண்ணாதேதம்பிய
போங்காணும்நகுலா நீ புத்தியுள்ளகண்மணியே (ரே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான்நகுலனுமே
அண்ணரேநீர்கேளும் அரவத்தைகொல்லுகிறேன்
வெட்டிபெறிகிறேன் வெளிப்படுங்களண்ணர்களே
உங்களைவிட்டெனக்குப் போகமனம்வருமோ
விட்டுப்பிரியவே வேறுமனம்வருமோ
அண்ணருடவயிற்றில் அனலைச்சொரிவேனோ
சிறுவன்போய்ச்சொன்னாலே சீவனைவிட்டிடுவார்
மாளநினைப்பாரே மதிகேடுவந்துவிடும்
போகமனம்வருமோ புண்ணியரேபெந்தனுக்கு
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
நீர்-தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறீரோ
நீர்-ஏட்டிலெழுதினதை எடுத்தெறியப்போறீரோ
வரும்வினைகள்வந்தாலே மடிபேந்தவேண்டாமோ
ஆயனெழுத்தவ்வளவு ஆணையால்மாண்டுவிட்டோம்
இனிநாம்பிழைப்போமென் றெண்ணாதேதம்பியரே
மற்றும்பிழைப்போமென்று மன்னவரேயெண்ணாதே
போடா நகுலாவென்று புகன்றானருச்சுனரும்
செப்புமொழிகேட்டு சீரானநகுலனுமே
இப்பாம்பைவெட்டி பெறிகிறேனிப்போது
பாம்புதனைக்கொல்வேனென்று பட்டாவுரிவிநின்றான்
பார்த்தது அப்பாம்பு பாரமுடிமன்னனை
கண்திறந்துபார்த்தது கடுமலைப்பாம்பு
வாயைத்திறந்தவனை வாரிவிழுங்கினது
பாம்பின்வயிற்றிலேதான் பரிநகுலன்போய்விழுந்தான்
அண்ணாவென்னையும் அரவம்விழுங்கிற்றென்றான்
என்னையுங்கூட எடுத்துவிழுங்கிற்றென்றான்
உங்களுடனே ஒருவனுஞ்சேர்ந்தேனென்றான்
மூவருக்கும் ஓரெழுத்தாய் முடிந்ததேயென்னசெய்வோம்

அண்ணரைத்தம்பியரை ஆரணங்கையைவிட்டோம்
என்றுபுலம்பியே இருக்கின்றவேளையிலே
வில்லாளிபார்த்தனுமே வீமனுமங்கேதுசொல்வான்
அப்போதேசொன்னேனே தப்புவருமென்றுசொல்லி
என்வார்த்தைகேளாமல் இங்கேவந்தீர்தம்பியரே
வந்தவிடந்தனிலே வல்வினையைக்கண்டீரோ
என்றுஅவர்கள்சொல்லி இருந்துவிசாரமிட்டார்
இப்படிக்காகவேதானிருக்கின்றவேளையிலே
அநேகநாழிசென்றபின்பு அப்போதானதர்மரவர்
மெத்தவிசாரப்பட்டு வெகுவாய்மனங்கலங்கி
சகாதேவனைப்பார்த்து தருமருரைக்கலுற்றார்
வீமன்கனிபறிக்கப்போய் வெகுநேரமாச்சுதப்பா
அழைத்தோடிவாருமென் றருச்சுனரைபோகவிட்டேன்
அருச்சுனன்தேடிப்போய் அநேகநெடும்போதாச்சு
போனதோரருச்சுனனும் பின்புவரக்காணேனே
நகுலனைப்போகவிட்டு ராசாக்களைப்பாருமென்றேன்
காளைநகுலனுமே சடுகவரக்காணேனே
செத்தார்பிழைத்தாரோ செய்திதெரியவில்லை
மாண்டாரோயானறியேன் மன்னவனேயென்னசெய்வே (ன்
ஆரோடேசண்டை அமரதுசெய்கிறாரோ
எவரோடேசண்டை.படாகூடங்களுண்டோ
அவர்களைப்பார்த்துநீ யழைத்தோடிவாராயோ
ஓடியழைத்துநீ ஒருநொடியில்வாராயோ
கண்டுஅழைத்துநீ கடுகெனவேவாருமோ
அண்ணருரைகேட்டு அழைத்துமேவாருமோ
அப்போசகாதேவன் ஆணழகன்தானெழுந்து
சல்லடங்களிட்டுமேல்சோமா தட்டிவரிந்து
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
கச்சைவரிந்துகட்டி சருங்கைச்சைதொங்கவிட்டு
ஆயுதந்தானெடுத்து அடைவாய்நடக்கலுற்றான்
காலடியைத்தேடியேதான் கடுகிநடக்கலுற்றான்
காடுஞ்செடியுங் கனத்தமலைதானதாண்டி
ஆறுஞ்சுனையு மடுநனைந்தான்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தாண்டி
தேடிப்போனானே திசைதோறுங்கானகத்தில்
எங்கெங்குந்தேடினானே இனியவிடமாராய்ந்து

நானுமடிந்திடுவேன் ராஜர்களே உங்களுடன்
அங்கமுறுகுதையோ ஆவிதணலாகுதையோ
நெஞ்சந்தனிலேயே நெருப்பாயெரியுதிப்போ
ஈரலுக்குள்ளே யிருந்து தணல்பத்துதடா
கும்பியினுள்ளேயப்போ சூடவிளக்காயெரியுதடா
மனதுதரிக்கவில்லை வயிற்றெரிச்சல் தீரவில்லை
உங்களைப்பறிகொடுத்து உலகத்திலிருப்பேனோ
நானுமடிந்திடுவேன் ராஜர்களே உங்களுடன்
உங்களைப்பொசித்தபாம்பு என்னைப்பொசியாதோ
உன்னைப்பொசித்தபாம்பு என்னைப்பொசியாதோ
என்றுமனந்தளர்ந்து எழுந்தாரே தருமரவர்
மலைப்பாம்புதன்னருகே வந்து தலைகொடுத்தார்
இரங்கினார் தருமரவர் என்னையும்விழுங்குமென்றார்
தாராமுக்கண்மலைப்பாம்பு தள்ளிவிடுது
எதிரேவந்தாலும் இடைந்துவிடுது
பக்கத்தில்வந்தாலும் பார்த்துமேபோய்விடுது
தக்கபுகழுடைய தருமரவரேதுரைப்பார்
சமர்த்துள்ளமலைப்பாம்பே தம்பிமாரைவிழுங்கிவிட்டாய்
என்னைவிழுங்குமென்று எதிரேநான்வந்தாலும்
என்னபாவஞ்செய்தேனோ என்னைவிலக்கிவிட்டாய்
எத்தாலும்பாவிநான் இருந்தாலுமாகாது
ஐயோவெனத்தருமர் அழுதுபுலம்புகிறார்
சூப்போமுறையோவென்று கூவிப்புலம்புகிறார்
தோராவடிவழகி துரோபதையுங்கூறலானாள்
ஆண்டவரேஐயாவே அழகுள்ள தருமரே நீர்
மாயவரை நீருமிப்போ மனதில் நினையுமென்றாள்
எம்பெருமாள்வந்தாலே எல்லாந்தெரியுமென்றாள்
அப்போது தருமருக்கு அந்தநினைவுவந்து
அவ்வார்த்தைதான்கேட்டு அழகான தருமரவர்
மாயனைத்தானினைந்து வருந்திப்புலம்புகிறார்
மாயன்பெருமாளே வந்தருளவேண்டுமையா
ஆலிலைமேற்பள்ளிகொண்ட ஆதிமூலம்வாருமையா
பாற்கடலிற்பள்ளிகொண்ட பாரளந்தார்எம்பெருமாள்
மச்சவடிவுகொண்ட மாதவரே நின்சரணம்
கூர்மவடிவுகொண்ட கோபாலா நின்சரணம்
கல்லான அகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தீர்

கல்லைபனத்திரே எதிர்க்கிலையென்றீரே
ஆதிராமென்றதுஞ்சரத்தை முகில்வண்ணராத்திரே
இராமராய்ப்பிறந்து இராவணனைச்சங்கரித்தீர்
இலங்கையழித்தீரே இராக்ஷதரைவென்றீரே
அரக்குமாமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பாலாயிலே ஐவரையுங்காத்தீரே
அபயமென்ற துரோபதைக்கு அட்சயாத்துகில் கொடுத்தீர்
உம்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறிவார்
தஞ்சமென்றபஞ்சவரைத் தற்காக்கவேணுமல்லோ
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோறோமையா
கையில்செபமாலை களங்குலைந்துபோறோமையா
உள்ளங்கைதெள்ளிப்பமும் உருக்குலைந்துபோறோமையா
இத்தனைநாள்காத்தீரே இன்றைக்கோமாண்டுவிட்டோம்
வளையாழக்கண்ணீர் கூரியவாள் தப்பாது
தாளமூரகண்ணீரும் ரம்பங்கொண்டறுக்காதா
வாரிபோகிருஷ்ணனென் மனத்துயரந்தீராபோ
என்று அபயம் அபயமென்று அழுதுபுலம்புகிறார்
தோராவடிமயிலே துரோபதையாளே துரோசிவாள்
அன்னைபணிவண்ண அடியேனுக்காவிசெய்வாய்
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன் பூவிழந்தேன்
காலிற்சரடிழந்தேன் தலைவிரிக்கநாளாச்சே
ஐயாறிட்ட மங்கிலியம் அழிவில்லையென்றிருந்தேன்
மங்கிலியத்தாளிழந்து மண்ணில்விழநாளாச்சே
ஆரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுத்தியானேனே
செல்வங்குலைந்து நான் சீருமழிந்தேனே
ஐவருங்கைவிட்டாரே அலைந்துவிடநாளாச்சே
மங்கிலியப்பிச்சைதாராபோ மன்னவரே
என்குறைதீர்த்திராபோ இங்கேவாராபோ
அபயக்குரலிட்டுமங்கே அழுதாள் துரோபதையும்
மார்கொண்ட கண்ணீரை வழித்தெறிந்தாள் மண்மேலே
அப்போதுமாயவரும் ஆதிமூலந்தானறிந்தார்
அழுதகுரல்கேட்டு ஆயன்பெருமாளும்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
பெட்டியிலேபூஷணம் பெருமைகுலையுதே
தோளிற்செபமாலை தோடவிழ்ந்துபோகுதே

விஸ்தாரணிதானறவே வில்நிமிர்ந்துயெழுந்து
நகுலன்சகாதேவன் நல்விஜயன்வீமனுமே
ராமரிஷியுடனே நன்றாய்வெளிப்பட்டார்கள்
ஐவருமாகவேதா னப்பாம்பில்வெளியானார்
மாயன்பெருமாளை வந்துநமஸ்கரித்தார்
தக்கப்புகழுடைய தருமருக்குத்தெண்டனிட்டார்
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்திமனமகிழ்ந்து மன்னன்தர்மராயருமே
மனதுகுளிர்ந்தாரே மகாராஜர்தர்மரவர்
துரோபதைநாயகியுஞ் சிந்தைமிகக்குளிர்ந்தாள்
மலர்ந்தசெந்தாமரைப்போல் மனதுமிகக்குளிர்ந்தார்
அலர்ந்தசெந்தாமரைப்போல் அகமமிகக்குளிர்த்தார்
ராமரிஷியாற்கு நற்காட்சிதந்தாராம்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
இந்தவனந்தாண்டி இனியவனம்போங்களென்றார்
அப்போதுதர்மரவர் ஆயரைப்பார்த்துரைப்பார்
இந்தரிஷியாரு மிங்குவந்தகன்மமென்ன
வந்தகன்மந்தனையும் வாய்திறந்துசொல்லுமென்றார்
அப்போது மாயவரும் அருளாளரேதுசொல்வார்
இந்தரிஷிகாரியத்தை இயம்புவேன்நீர்கேளும்
மாயாண்டிதன்னடியார் வந்தால்வணங்குவார்காண்
எந்தாண்டியார்கள்வந்தால் இகழ்ச்சிகள்பண்ணுவது
எடாகூடங்கள்பண்ணிஎட்டியடிக்கிறதும்
இப்படியாகவே இருந்தார்வெகுகாலம்
அப்போதுநானொருநா ளங்கேவடிவெடுத்தேன்
தாதவடிவெடுத்து தப்புகொட்டிபிச்சையென்றேன்
அரிகரிராமாவென்று ஐயாவேபிட்சையென்றேன்
அப்போதுராமரிஷி அவசரமாயோடிவந்து
என்னையடித்தாரே இவ்வானராமரிஷி
அடிபட்டுக்கொண்டதொரு ஆக்ருஷமானதினால்
நான்பட்ட அடியாலே இட்டேன்பெருஞ்சாபம்
அப்போதுராமரிஷி ஆயரேயென்றழுது
வல்லாளன்ராமரிஷி வாய்திறந்தேதுசொல்வார்
என்சாபமெப்போது தொலையுமையாசுவாமியென்றான்
ஐவர்பஞ்சபாண்டவர்க ளாரணியம்வந்தாக்கால்
நாலுபேரையெடுத்து நன்றாய்விழுங்கிடுவாய்

அப்போதுஉன்சாபம் அடவுடனே தீர்த்திடுவேன்
என்றுமவர்க்குரைத்து என்பதிக்குபோய்நடந்தேன்
அப்போதிட்ட சாபமது இப்போதொலைந்ததுகாண்
நீங்கள் இந்தவனத்தைவிட்டு இனியவனம்போங்களென்று
அப்போதெம்பெருமாள் அரிராமர்தானெழுந்தார்
ராமரிஷி ஐவர்களும் நங்கைதுரோபதையும்
எம்பெருமாள்மாயவற்கு எல்லோரும்தெண்டனிட்டார்
பஞ்சவர்களைவருக்கும் பாஞ்சாலிதுரோபதைக்கும்
மாயன்பெருமாளும் மனங்குளிரவாழ்த்தியபின்
எந்தவனங்களிலே இடரதுவந்தாலும்
இடரதுவந்தாலே என்னை நினையுங்கள்
என்றுமவருரைத்து எம்பெருமாள்போகலுற்றார்
பட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையும் மதிகவன்ந்தான்தாண்டி
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
வனமாம்வனந்தாண்டி வந்துவிட்டார்மாயவரும்
துளபமணிமார்பன் துவாரகைபோய்ச்சேர்ந்தார்
சிங்காதனத்தின்மேல் ஸ்ரீகிருஷ்ணர் தானிருந்தார்
இப்படியாகவே இவ்விருக்கும்வேளையிலே
மாயவனார்போனபின்பு மகாராஜர்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்கு துரோபதையும்
அந்தவனத்தில் வெகுநாள்சென்றபின்பு
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
மூன்றும்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு

இரண்டாவது ராமரிஷிவனம் முற்றிற்று.

—(* ** *)—

மூன்றாவது

# முருக்கமகா ரிஷிவனம்.

—[ ❋❋ ]—

அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோகலுற்றார்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தே
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
பன்னிவைத்தசீமாடு வனமேகுடித்தனமாய்
முருக்கமகாரிஷிவனத்தில் முடுகிவந்தார்பஞ்சவர்கள்
அந்தவனத்திலே தான்அல்லோரும்வந்தார்கள்
ஓரடுக்குபர்னசாலை உண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடுக்குபர்னசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஆறடுக்குபர்னசாலை ஆணழகருண்டுபண்ணா
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலைமேலேயல்லோ பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
இப்படியாகஇவரிருக்கும்வேளையிலே
தென்னமுடிவேந்தன் துரியோதிரனேதுசொல்வான்
சபைகள்நிறைந்திருக்கச் சர்ப்பக்கொடியோனும்
ஆர்காணும்ராசர்களே அழகானமன்னர்களே
முத்துக்கிரீடம் முடிசூடுமன்னர்களே
வச்சிரகிரீடந் தரித்ததொருமன்னர்களே
மாணிக்ககிரீடந் தரித்ததொருமந்திரிகளே
அத்தண்டபேரையுமே அவரையுந்தான்பார்த்து
மாதாகங்கொண்டதொரு மகாராஜனேதுரைப்பான்
ஐவர்வனம்போய் அனேகநெடுநாளாச்சே
மூன்றும்வருஷமது மொழியலாம்பஞ்சவர்க்கு
அவர்-எந்தவனத்திலே இருக்கிறாரென்றறியேன்
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைதெரியவில்லை
ஆரடாதாதுவரே அங்கிருக்கும்மல்லர்களே
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருமே
வீரப்புலிபோலே வேந்தர்களைவருமே
எந்தவனந்திலிருக்கிறாரென்றறிந்து

ஐவரும்பாராதே அறிந்தோடிவாருமென்றான்
காவல்களும்மைபவர் காணுதேவாருமென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்திருந்தார் தூதுவர்கள்
ஒற்றுவொருவனவனேடினன்கானகத்தே
காடுஞ்செடியுங் கரியமலைதான் தாண்டி
ஆறுஞ்சுனையுமல்லோ அதிகவனந்தான் தாண்டி
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
சோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூந்தவனம்
வனமாயவனந்தாண்டி வாரார்கள் தூதுவர்கள்
சூரியன்கன்வனத்தே சுருக்காய்நடந்துவாரார்
ராமரிஷிவனத்தே நடந்தார் நலமாக
முநக்கபாரிஷிவனத்தே முடிமன்னர்போய் நுழைந்தார்
அந்தவனத்திலே ஐவரையுங்கண்டார்கள்
பர்ணசாலைமேலாநப் பஞ்சவரைக்கண்டார்கள்
ஆருமறியாமல் ஆணழகர் திரும்பிவந்தார்
காடுஞ்செடியுங் கரியமலைதாண்டிவந்தார்
அஸ்தினபுரம்நாடி ஆணழகர் திரும்பிவந்தார்
தென்னன்முடிவேந்தன் திரியோதிரன்முன்னேவந்தார்
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்யேதுசொல்வான்
போயிரேதூதுவரே புதுமையென்னசொல்லுமென்று
காளிபேரண்டனவன் கடிகியேபேதுசொல்வான்
முருக்கமாரிஷிவனத்தில் முடிமன்னரைக்கண்டுவந்தே
பர்ணசாலையேலேயல்லோ பஞ்சவரைக்கண்டோமையா
அவ்வார்த்தைகேட்டானே அரவக்கொடியோனும்
சிந்தைகலங்கியே திடுக்கிட்டுமெய்மறந்து
மனமுந்திடுக்கிட்டு வாய்திறந்தேதுசொல்வான்
இப்பெரியசபைதனிலே யிருக்கின்றராசர்களே
அம்பலத்தில்கொலுவிருக்கும் அரசர்முடிமன்னர்களே
இத்தண்டராஜர்களே இயலானமந்திரிகளே
கத்திகட்டுந்துரைகளே கனத்தமுடிமன்னர்களே
ஆண்மையுள்ளதுரைகளே அல்லவருங்கேட்டிருங்கள்
என்வார்த்தைதள்ளாமல் ராஜர்களேகேட்டிருங்கள்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பைங்கிளியாள் துரோபதைமே
தோருவடிவழகி துரோபதைமேலெந்தனுக்கு
ஆசையலோதானான் ஆரணங்குதுரோபதைமேல்

நினைக்கநினைக்கவே தான் நெஞ்சம்முருகிடுது
ஆசையவள்மேலே ஆதரவுபாப்மேலே
சிந்தையவள்மேலே சிவன்பதைக்குதுகாண்
கன்னியர்மேலாசையல்லோ காமவிடாய்கொள்ளுதுகாண்
மயிலனைமேலாசையல்லோ மறக்கவில்லையெத்தனுக்கு
அவளாசையினாலே யவளைவரவழைத்து
வணங்குவாளென்றுசொல்லி வார்த்தைபலபேசினேனே
இணங்குவாளென்று எத்தனைபோசொன்னேன்காண்
வணங்காமற்போனாளே மாதுகருங்குழலாள்
இணங்காமற்போனாளே ஏலப்பசுங்கிளிபாள்
வந்திருந்தம்பலந்தில் வார்த்தைகள்பேசினேன்காண்
வாருமிருமென்றேன் மடிமேலேபேறுமென்றேன்
மார்போடேமார்பணைத்து மருவிமுத்தந்தாருமென்றேன்
தோளோடேதோளணைத்து சுகமுத்தந்தாருமென்றேன்
வாரும்துரோபதையே வலதுதுடைபேறுமென்றேன்
அவள்மெத்தப்பேச்சுகளு மகத்தைகளும்பண்ணினாளே
அகந்தைகள்பண்ணுகிறாள் ஆகடியஞ்சொல்லுகிறாள்
ஆகையால்துரோபதையை அடித்துநானோட்டிவிட்டேன்
ஆரணங்கைகூடுகைக்கு ஆசைமெத்ததோணுகுது ன்
மயிலணையைக்கூடுகைக்கு மனதுமெத்ததோணுகுது
அவள்மீதிலாசைகொண் டல்லவர்க்குஞ்சொல்லுகிறேன்
துரோபதையைக்கொண்டுவர துரைகளுண்டோசொல்லு
மென்றான், அவளையுங்கொண்டுவர அரசருண்டோசொ
ல்லும்,பாஞ்சாலன்பெண்ணை பாவைதுரோபதையை
சிறைபிடித்துக்கொண்டுவரதுரைகளுண்டோசொல்லும்
கொண்டுவருவோர்க்கு கோடிதனந்தருவேன்
அழைத்துவருவோர்க்கு ஆனைசேனை நான்தருவேன்
சீமையும்பூமியும் துரைத்தனங்கள் நான்கொடுப்பேன்
ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவந்தான்
துரோபதையைக்கொண்டுவந்து தூங்குமஞ்சமேத்திவை
த்தால் பாவையைக்கொண்டுவந்து படுக்கமஞ்சமேத்தி
வைத்தால்;என்னுடையநாடுகளும் எழில்கருணன் ஆதீ
னம், சீமைகளும்பூமிகளும் செல்வமும்நான் தருவேன்
வல்லாண்மைக்காரருண்டோ மந்திரிபெருந்திருங்கள்
போறதுரைகளுண்டோ புண்ணியசேனைகளே
பிடியுங்கள்தாம்பூலம் பேர்பெரியராஜர்களே

என்றுசொல்லத்தான்கேட்டு இபமானராஜர்கள்
அனைவரும்பெருமலஞ்சிப்பயந்திருந்தார்
சிந்துதேசாதிபதி திரன்மகன்சயிந்தவனும்
சொல்லுவான்வாய்திறந்து துரைகளறிந்திருக்க
மைத்துனரேகேளும் மகாராசபூபதியே
தொருவடிவழகி துரோபதைநாயகியை
பத்துநாட்குள்ளாய் பைங்கிளியைக்கொண்டுவாரேன்
எட்டுநாட்குள்ளாக இளங்கொடியைக்கொண்டுவாரேன்
ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவாரேன்
மன்னரறியாமல் மயிலினைக்கொண்டுவாரேன்
தாம்பூலத்தான்பிடித்தான் தாமுடியானும்
அந்தமொழிதான்கேட்டு அரவக்கொடியோனும்
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே வேந்தன்துரியோதனனும்
உள்ளங்குளிர்ந்துசிலிர்த்து துடப்பெங்கும்பூரித்து
அள்ளியேதாம்பூலம் ஆணழகர்கைகொடுத்தான்
போட்டிருந்தஆபரணம் பொட்டெனவேதான்கொடுத்தா
இட்டிருந்தபூஷணங்கள் இஷ்டமுடன்தான்கொடுத்தா
பொன்னிழைத்தபட்டாடை போர்த்தானேமேலாக ன்
போய்வாவென்றுசொல்லி புகழ்வேந்தன்தானுரைத்தா
வெகுமானம்பெற்றுமல்லோ விடைபெற்றுமன்னவனும்
பணம்பணமெனப் பணபேரிபடியுமென்றான்
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பணமென்றான்
ஆனையின்மேல்ஜண்டாவும் அங்குதிசான்பிடியுமென்றார்
ஆனையின்மேல்பேரிகையை அடியுமென்றார்ஓசையுடன்
குதிரையின்மேல்டங்காவும் கொடிமுரசுசிலைகளும்
பாஞ்சசன்யம்தேவதத்தப் பலவாத்தியமுழங்க
சர்சரிகைவிராணம் தாக்கிமுரசறைய
அக்ரோணிசேனை அடங்கலும்பணமென்றான்
அமரதரும்சமரதரும் அர்த்தரதத்தானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் காஷ்மீரக்கன்னடரும்
ஈழந்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
சட்டைகழட்டாத சகலவிரானவரும்
போட்ட சட்டைவாங்காத பொந்திலிராஜனவரும்
இட்ட சட்டை வாங்காத எழிலராஜமன்னவரும்
குடபாசம்நீங்காத குச்சிலியமன்னவரும்

ஆனைபாசுரிமை அளவற்றவன்னியரும்
வெள்ளித்தடிக்காரர் வேணலட்சங்கோடியுண்டு
மகுடமுடிதரித்த மன்னவர்களான்வரும்
பட்டணத்துராஜர்களும் பார்மகுடவர்த்தனரும்
அத்தனைபெயருடனே ஆணழகன்பயணமானான்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூசல்லடமாம்
தூங்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூசல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பட்டுதட்டிகட்டி பல்லோ பாங்கெடுத்துதான்சொருகி
முந்திஉருமாலை முந்தநாப்கட்டினானே
இட்டான்திருநாமம் எரிகின்றசூரியன்போல்
பொன்னிழைத்தப்பட்டாடை போர்த்தானேமேலாக
அம்புவில்லுங்கைபிடித்து ஆணழகன்வெளியானான்
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேரைச்சுற்றிதெண்டனிட்டு சிவ்வென்றுஏறினான்
ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடையை
பக்கத்தில்வெண்சாமரை பட்டுக்குடைகவிய
இருபக்கம்வெண்சாமரை ரத்னக்குடைகவிய
முத்துக்குடைகவிய முடிமன்னர்தான்சூழ
மேளதாளம்முழங்க வேந்தர்களும்பயணமிட்டார்
வாரான்சயிந்தவனும் மச்சுராதங்குலுங்க
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
ஆயிரந்தெருத்தாண்டி அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
பட்டணந்தெருத்தாண்டி பார்மன்னன்வாரானே
செந்தூளெழும்புகுது தெருவெல்லாங்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
வாரான்சயிந்தவனும் மச்சுராதங்குலுங்க
அப்போசயிந்தவனும் ஆலோசனைகள்பண்ணி
துரோபதையைக்கொண்டுவரத் துரிதமுடன்போறோமே
போறவிடந்தனிலே புதுமைகள்நாமறிவோம்
வழியிற்சகுனங்கள் மனதில்குறிப்போமென்று
தருமதேவதைநேரே சாட்சிசொல்லவேண்டுமென்றார்
அப்போசகுனங்கள் ஆகுதுமன்னனுக்கு

பொல்லாச்சகுனங்கள் பொருந்துதுமன்னனுக்கு
வலம்சம்பிடமாச்சு வலியனும்வலமாச்சு
கரடை வலமாச்சு கள்ளரெதிர்ப்பட்டார்கள்
சாரைகுறுக்காச்சு சயிந்தவன்மேற்பல்லிசொல்லும்
குத்திப்பிடியுமென்று கோட்டானுமொலமிடும்
வெட்டுவெட்டுயென்றுசொல்லி வேடரெதிரானார்கள்
ஓரிபகரிடவே ஒப்பாரியானைதிரானென்
பச்சைமரத்திலே பதுங்கிருந்தபல்லியது
பட்டமரமேறி பாடமென்றுசொல்லிடுமாம்
பட்டுச்சொன்னதையது திட்டெனவேமரணமென்று
நெருப்பெடுத்தோர்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்
இந்தச்சகுனமெல்லாம் இராசனுங்கண்டானே
நினையாத்துயரமெல்லாம் நினைத்துமனமுருகி
என்றைதுமெண்ணி இருந்துவிசாரமிட்டான்
இராசனுந்தன்றனே இறந்துவிடப்போறேனோ
வத்தமனைமினி வழிதிருப்பப்போறேனோ
திரும்பிப்போனாற் சிரிப்பார்கள்ராசாக்கள்
என்னையிப்பார்கள் வளிநகைசெய்வார்கள்
வந்துதிரும்பிவிட்டால் மதியான்திரிபோதிரனும்
அன்றெழுதுங்கர்த்தன் அழித்தெழுதப்போறானோ
யமனெழுத்தனோ எவ்வளவுங்குறையாது
வெறும்வினைகள்வந்தாலே மடிந்தவேண்டாமோ
உள்ளபடிக்கு ஒருநாளுங்குறையாது
என்றுமனதிலெண்ணி இராஜனும்போய்நடந்தான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிவனந்தான்தாண்டி
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
புலிகள்கரடிகளும் பெருத்தவனந்தான்தாண்டி
சூரியவனத்திலே சேர்ந்தானேசயிந்தவனும்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
காலையில்பாளையமடக்கி கடுகவழிநடந்தான்
இராமரிஷிவனத்தில் நடந்தார்கள்சேனையெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
அந்தவனந்தனிலே அத்தண்டஜனம்நிறுத்தி
உத்தண்டமன்னவனும் ஒருத்தனுந்தேரேறி

முருக்கமாரிதிவனத்தில் முதிகிடந்தானே
சயிந்தவனும்பாஞ்சாலைதேடிவாரானே
காரசந்தித்தி துரோபதையாள்முன்னேவந்தான்
பாஞ்சாலையிலே பத்தினியாள்வீற்றிருந்தாள்
ஒருத்தியுமாகவேதா னுத்தமியாள்வீற்றிருந்தாள்
பாவிசயிந்தவனும் பாஞ்சாலைமுன்னேவந்தான்
அப்போதுபாஞ்சாலி ஆரணங்கு துரோபதையும்
கண்டாள்சயிந்தவனைக் கட்டழகி துரோபதையும்
அன்னவனைக்கண்டு அலறியோடிவந்தாள்
தமயனைக்கண்டாளே தானெழுந்தாசனமிட்டாள்
வட்டமணைபோட்டு மனைக்கடுத்துதான்போட்டாள்
இருமிருமென்றுசொல்லி இளங்கொடியாள்வந்திடவே
அப்போசயிந்தவனும் ஆவையுகன் தானெழுந்து
வட்டமணைமேலே வந்திருந்தான்சயிந்தவனும்
கோருவையழகி துரோபதையாளேதுசொல்வாள்
இந்தவனத்திலே எதுக்காய்வந்தீர்கள்
வனசாரிவந்தீரோ மகாதவசாய்வந்தீரோ
அன்றுவேவந்த அதிசயத்தைச்சொல்லுமென்றாள்
மாலைமுடியானும் வாய்திறந்தேதுசொல்வான்
ஐவரும்நீயுமாக ஆரணியம்வந்தீர்கள்
வனவாசம்வந்தீரோ மண்டலத்திற்போராச்சு
பார்க்கும்படியாய்ப் பைங்கிளியேவந்தேனே
உங்களுடையசீமையையும் உலகத்தைவிட்டுவிட்டு
வனவாசம்வந்ததொரு வகையென்ன தங்கையரே
இங்கேபரதேசம் ஏன்வந்தீர் தங்கையரே
ஒன்றுமொளியாமல் உரையுங்காண் தங்கையரே
அப்போதுதுரோபதைதான் ஆரணங்குதான்கேட்டு
கோருவையழகி துரோபதையாளேதுசொல்வாள்
அன்றுவேநாங்கள்வந்த அதிசயத்தைக்கேளும்
பரதேசம்வந்தோமெங்கள் பரிதாபங்கேளுமென்றாள்
தருமாபுரத்தையல்லோ தரணியையாளண்டிருந்தோம்
ஐவரையுங்கொல்லவென்று அரசன்துரியோதனனும்
பஞ்சவரைக்கொல்லவென்று பாவிதுரியோதனனும்
விருந்தருந்துமென்றுசொல்லி வேந்தரைக்கொல்லவே
பேரன்குமாரனுக்குப் பூதாற்கலியாணமென்று
பூதாற்கலியாணம் பொருத்தந்தப்பிப்போகுதென்று

ஐவரையுந்தான்செலித்தான் ஆஸ்தானந்தான்செலித்தா
ஐவரையுங்காவலாக அரையிலடைத்துவிட்டான்
பாரவிலங்குகொண்டு பருவிலங்குபூட்டினானே
வழுலட்சம்பெருவிலங்கு எடுத்துவந்துபூட்டினானே
காற்றுநுழையாத கல்லறைத்தானிடங்கில்
தள்ளியேகொண்டுவந்து தடிவீரர்காவல் வைத்தான்
சுத்திசுவரெங்கும் தூதுவரைக்காவல்வைத்தான்
அரையிலிருந்தபெண்ணை அம்பலத்தில் தள்ளிவைத்தான்
மூலையில்யிருந்தபெண்ணை முத்தத்தில் தள்ளிவைத்தான்
ஒருவர்மயிர்பிடிக்க ஒன்பதுபேர் துகிலுரிய
இருவர்மயிர்பிடிக்க இருபதுபேர்பின்னிழுக்க
பாவிமயிர்பிடிக்கப் பத்துபேர் துகிலுரிய
ஆடம்பலத்தே அரசர்சபைநடுவே
பேரம்பலத்தே பெரியோர்சபைநடுவே
அரசர்சபைநடுவே அலைபத்துகிலுரிந்தான்
வாய்வரிசையில்லாமல் வம்பாட்டம்பண்ணினானே
வாடிபோடியென்றேசி வலதுதுடையேறுமென்றான்
துஷ்டத்தனங்கள்பண்ணும் திரியோதிரன்பாவி
ஆகடியம்பேசினானே அம்பலவர்தன்சபையில்
பாரவனவாசம் பரதேசம்ஓட்டிவிட்டான்
பனிரெண்டுதன்வருஷம் பாரவனந்திரியுமென்றான்
மறைவாயொருவருஷம் வந்திருமென்றுசொன்னான்
பதின்மூன்றுஞ்சென்றபின்பு பட்டணத்தேவந்தாக்கால்
பங்குள்ளபிறகாரம் பாதிநாடுதாரேனென்றான்
வந்துவிட்டோமண்ணாவே வனமேகுடித்தனமாய்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
மன்னிவைத்தசீமாடு வனமேகுடித்தனமாய்
வேடரைப்போலவேதான் வில்லியரைப்போலாக
கள்ளர்குறவரைப்போல் காட்டிலிருக்கின்றோம்
எங்கள்குறைதீர எக்காலஞ்சென்றிடுமோ
தாங்கள்சுகமாகராச்சியத்தை ஆள்வேமோ
நீர்அறியாதுபோலாக அண்ணாவேகேட்கவந்தீர்
தெரியாதுபோலாக கேட்கவந்தீரண்ணாவே
ஒன்றும்றியீரோ உத்தமரே அண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு வதுசொல்வான்மன்னவனும்
பகுதிபணம்வாங்கப் போயிருந்தேன்வெகுதூரம்

சேனைத்திரளுடனே சென்றிருந்தேன்வெகுதூரம்
போனபிறகாக புதுமைபிறந்ததுகாண்
காற்றுவிசேஷமாகக் கேட்டுவந்தேன்தங்கையரே
நான் அறிந்தேனேயாயாகில் அவகேடுவாராது
அன்றிருந்தேனானாலே அம்பாமுமேற்றுவாரோ
துகிலுரியப்பார்ப்பேனோ துரோபதைநாயகியே
எந்தன்மனம்பொருத்து இருப்பேனோதங்கையரே
நான்வந்தபிறகிந்த வயணமறிந்தேன்காண்
மனதுதரியாமல் வந்தேனுனைக்காண
சிந்தைமனங்கலங்கி தேடிவந்தேன் தங்கையரே
உன்வார்த்தைகேட்டபின்பு உள்ளமுருகுதம்மா
நீசொன்னபடியாலே பெண்சிந்தைகலங்குதம்மா
நீபத்தியாளென்றுசொல்லி சற்றுமறிவானோ
உத்தமியாளென்றுசொல்லி ஊதாரியறிவானோ
காமாட்சிபெண்கிறதை கழுசிறையனறிவானோ
எதுமறியாமல் இகழ்ச்சிகள்பண்ணிவிட்டான்
ஒன்றுமறியாமல் உதாசினங்கள்பண்ணினனே
அவன்-வாழ்வுங்குலைந்துவிடும் மகிழ்ச்சிபடங்கிவிடும்
செல்வமடங்கிவிடும் செருக்குங்குலைந்துவிடும்
பொறுத்திருலையம்மா பொல்லாங்குவாரதில்லை
அவனுக்கேநாசகாலம் ஆகுதுபொறுத்திரம்மா
அஞ்சாதேதங்கையரே ஆயாசங்கொள்ளாதே
நீ-ஆயாசப்படுவதெல்லா மவனுக்கேகேடுவரும்
பொறுத்தவர்பூமியாள்வார் பொங்கினவர்காடாள்வார்
எதுக்குமஞ்சாதே என்பிறப்பேதங்கையரே
பாரப்புலிபோலே பஞ்சவர்களெங்கேயம்மா
வீரப்புலியதுபோல் வீரர்களெங்கேயம்மா
மைத்துனமாரைவர்களும் மகாராஜரெங்கேயம்மா
ஐவரையுங்காணவென்று ஆவலாய்வந்தேனம்மா
அவர்போனவிட மறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிட மறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
பார்க்கமனதாகிப் பைங்கிளியேவந்தேனம்மா
காணமனதாகிக் கானகத்தேவந்தேனம்மா
இன்னேரமாச்சுதே இராஜர்களைக்காணேமம்மா
தனியாகவுன்னைவிட்டு தருமரெங்கேபோனரோ
ஒண்டியாய்உன்னைவிட்டு உத்தமர்களெங்கேபோனர்

இன்றுநான்காணுதற்கு இல்லாமற்போச்சுதம்மா
இன்னமொருவேளை இவர்களைநான்காணுகிறேன்
அவர்-ஆணாய்ப்பிறந்தவர்களானாலுங்குற்றமில்லை
நீ-பெண்ணாய்ப்பிறந்தவள்தான் பின்தொடர்ந்தியுன்
ஐவருடனேநீ அழுதுதிரிவானேன் (போ
அழுதுதிரிவானேன் அல்லற்படுவானேன்
என்-மாளிகைவாசலுக்கு வாரீரோ தங்கையரே
பாரவனந்திரிந்து பஞ்சவர்கள்வாராமட்டும்
எந்தனதுமாளிகைக்கு வாரீரோ தங்கையரே
அரமனைக்குந்தனைநானழைத்துப்போகவந்தேன்
வெதும்பிவிடாய்த்துநீ வெயிலில்திரிவானேன்
வாரீரோதங்கையரே மாளிகைக்குக்கொண்டுபோறேன்
என்று-வருந்தியழைத்தானே மாபாவியிந்தவனும்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குமேதுசொல்வாள்
ஐவரையும்விட்டுவிட்டு வருவேனோஅண்ணாவே நான்
விட்டுப்பிரியவேதான் வேந்தேமனம்வருமோ
அண்ணாவேநீர்கேளும் ஆனவொருவார்த்தை
நான்-வரவேணுமென்று மனதுமகிழ்ந்திருந்தால்
வனம்போனபஞ்சவர்கள் வருகிறபொழுதுக்கு
ஐவர்வரும்வேளை ஆச்சுது அண்ணாவே
ஐவரைக்கேட்டுநீ அழைத்துப்போமண்ணாவென்றாள்
பஞ்சவரைக்கேளுமண்ணா பாரவனத்துலைந்துவாரேன்
ஐவர்வரும்வேளை ஆச்சுதுஅண்ணாவென்றாள்
இவ்வார்த்தைதான்கேட்டு இடும்பன்சயிந்தவனும்
எண்ணுதுமெண்ணியல்லோ இந்தவிசாரமிட்டான்
ஐவர்வந்தால்மோசமல்லோ ஆராதுகாரியங்கள்
என்றுசயிந்தவனும் எண்ணினன்தன்மனதில்
காவலர்கள்வந்தாலே காரியங்களாகாது
கையிலிருந்தவொரு கத்தியைத்தாழவைத்து
கடுகவெழுந்தானே கட்டழகன்சயிந்தவனும்
ஐவர்வந்தால்சேதிசொல்லு மன்றுரைப்போறேன்
இட்டுன்னைபோகவென்றே இந்நேரங்காத்திருந்தேன்
ஐவரையுங்காணுமம்மா ஆரணங்குதுரோபதையே (மா
இன்னமொருவேளைவந்து இட்டுக்கொண்டுபோறேனம்
ஐவருக்குஞ்சொல்லி அழைத்துக்கொண்டுபோறேனம்மா
போகவிடைதாரும் போய்வாரேன்தங்கையரே



சயிந்தவன் துரோபதையை தேர்மீதில் எடுத்துப்போகுதல்.

என்றுமவன்கேட்க வே துசொல்வாள் துரோபதையும்
அப்படியேபோய்வாரும் அண்ணாவேயென் றுசொன்னாள்
விடைபெற் றுசயிந்தவனும் வேந்தனெழுந் திருந்து
பர்ணசாலைவிட்டி றங்கிப் பார்வேந்தன்போகலுற்றான்
கடுகநடந்தானே கட்டழகன்சயிந்தவனும்
அப்புரதமேறி அங்கானகந்தாண்டி
அவன் மச்சுரதமேறி வாரானேமன்னவனும்
போரான்சயிந்தவனும் பொன்னின்ரதமேறி
அனேகதூரம்போனபின்பு ஆரணங்கு துரோபதையாள்
கத்திதனைக்கண்டாளே கட்டழகிபாஞ்சாலி
வைத்துமறந்தானே மன்னவனும் ஆயுதத்தை
இங்கேவைத்துத்தான்மறந்தா னென்றுபாவையெழுந்து
கத்திதனையெடுத்துக் கடுகிநடந்தாளே
அண்ணாவேசயிந்தவனே அனேகதூரம்போகாதே
நில்லுங்களண்ணாவே நெடுந்தூரம்போகாதே
என்றுகூட நடந்தா ளொம்பனையாள் துரோபதையும்
அப்போதுசயிந்தவனும் அழும்புநினைவுகொண்டு
கேளாதுபோலே நடந்தான் கெடுநினைவாய்
அறியாதுபோலே நடந்தான் ஆணழகன்
கூடநடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
சேரநடந்தாளே தேன்மொழியாள் துரோபதையும்
அண்ணாவே அண்ணாவென்று அங்கனைமேகூச்சலிட்டாள்
அழும்பன்சயிந்தவனுக்கப்போ தான்கேட்டதுபோல்
திரும்பியவன்பார்த்து தேரைநிறுத்தினனே கை
அவள் நெடுந்தூரம்வந்தபின்பு நிறுத்தினான்தன்ரதத்
அப்போதுரோபதையும் அருங்கிளியாளேதுசொல்வாள்
அண்ணாவேயுங்க ளும் அனேகதூரம்வந்தீரே
இந்தாருமென்றுவே அங்கருங்குழலாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
எட்டியேதாருமென்றான் இருந்தபடிசயிந்தவனும்
அப்போ துரோபதையாள் ஆரணங்குஏதுசெய்தாள்
ஒருபடியேறியல்லோ உத்தமியாளிந்தாவென்றாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
எட்டவில்லைகத்தியென்றான் இன்னங்கொடுப்பதற்கு
மற்றுமொருபடியே மயிலனையாளேறினளே
அப்போதும்எட்டவில்லை என்றானே ஆணழகன்

மூன்றும்படியேறி மொய்குழலாள் நின்றுகொண்டு
ஆயுதங்களிந்தாவென்றாள் ஆரணங்கு துரோபதையும்
சயிந்தவனுந்தான்பார்த்து சந்தோஷமாகியல்லோ
நாம்வந்ததொருகாரியங்கள் வசப்பட்டதென்றுசொல்லி
மெத்தமனமகிழ்ந்து மெல்லியரைக்கொண்டுபோக
அவனேறினபோதேயல்லோ எகிரவிட்டான்தன்ரதத்
காற்றாய்ப்பறந்ததுகாண் கட்டழகன்தன்ரதமும்
போகுதேயந்தரமாய் பொல்லாதகானகத்தில்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
அண்ணாசயிந்தவனே அழிநினைவுதேடிவிட்டாய்
ஐவர்களுந்தானறிந்தால் அனர்த்தம்வருமுந்தனுக்கு
பஞ்சவர்களறிந்தாலே பழுதல்லோஉன்குடிக்கு
நிறுத்துமிரதத்தையென்றாள் நிறுத்தானோபாதகனும்
அப்போதுரோபதையாள் ஆரணங்குமனங்கலங்கி
சிந்தைகலங்கியவள் திடுகிட்டுமெய்மறந்து
மாதுமனஞ்சலித்து மயிலணையாளேதுசொல்தாள்
அப்போதுரோபதையாள் அபயக்குறலிடுவாள்
ஐவர்பஞ்சபாண்டவரே அபயமபயமென்றாள்
ஆகாயவாணியம்மா அல்லவரும்பார்த்திருங்கள்
ஐயன்பிடாரியரே அந்தரதேவதையே
அந்தரதேவதையே சந்திரசூரியரே
காளிகளேகூளிகளே கானகத்துபட்சிகளே
இந்தவனத்திலிருக்குமிருகங்களே
பாருங்கள்பாருங்கள் பாவியிவன்செய்கிறதை
எல்லோரும்பாருங்கள் இவனுடையதுர்குணத்தை
என்னைசிறைபிடிக்க இழுத்துக்கொண்டுபோறானே
பஞ்சவர்க்குத்தானுரையும் பார்த்திருந்தபட்சிகளே
ஐவருக்குத்தானுரையும் ஆகாயவாணியம்மா
நாய்க்குக்கிடைக்குமோ நல்லமுழுத்தேங்காயும்
சேரிப்பேனோஉந்தனுக்குச் சேறபந்துநான்தருவேன்
உனக்காவேனென்றுபாராதே அடிப்பேன்முறத்தாலே
என்றேதுரோபதையு மிளங்கொடியாளேதுசெய்தாள்
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகிறாள்
மாயவனேசுவாமியென்று மாதுபுலம்புகிறாள்
அப்போதுபஞ்சவர்கள் அரன்பூஜைதான்முடித்து
அரிபூஜைசிவபூஜை எல்லாமவர்முடித்து

ஏறினகழுதை யிறங்காமலிருக்கவென்று
கட்டவிழ்க்கவந்தவொரு காவலர்களெல்லோரும்
ஓட்டிக்கொண்டுபோகவென்று உத்தமியுஞ்சாபமிட்டாள்
என்-வங்கிஷத்தார்தொட்டால் வனக்கழுதைவிட்டிறங்க
காட்டுக்கழுதையிது கடுகெனவேதானிறங்க
மற்றவர்கள்தொட்டாலேவலித்துக்கொண்டோடவென்று
இப்படிக்குச்சொல்லியல்லோ யிட்டாள்பெருஞ்சாபம்
சாபங்கொடுத்தாளே தருமர்பெருந்தேவியவள்
இப்படியாய்ச்சொல்லி இருந்தாளேதுரோபதையும்
அடித்துத்துரத்தினார் அங்கேசயிந்தவனை
அரியனுக்குச்சொல்லுமென்று துரத்தினார்சயிந்தவனை
ஏறுகுதே அக்கழுதை வனமாய்வனந்தாண்டி
தாண்டிவிட்டுவந்தவொரு தன்னுடையசேனையண்டை
வந்துகலந்தானே வனக்கழுதைதன்னுடனே
கண்டாரேசேனையர்கள் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தாரேசயிந்தவனைப் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
இதுவென்ன அதிசயங்க ளெவர்செய்தகோலமென்று
கட்டையவிழ்க்கவென்று காவலர்களோடிவந்து
தொட்டு அவிழ்க்கவேதான் ஓட்டிக்கொண்டுபோனார்கள்
ஓட்டிக்கொண்டசேனையுடன் உத்தமனும்போய்நடந்தா
அக்ரோணிசேனையுடன் ஆனமுகன்போகலுற்றான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆழுஞ்சுனைதாண்டி கரியமலைதான்தாண்டி
அஸ்தினபுரத்தே அடுத்ததுஅக்கழுதை
கடையுங்கடைத்தெருவிற் கழுதைவருகையிலே
கழுதையைத்தொட்டவர்கள் கடுகிப்பேகூடனாரும்
பட்டணத்திலெல்லவரும் பரிவாகப்பார்த்தார்கள்
என்ன அதிசயங்க ளென்பார்களெல்லோரும்
மாடத்தில்மண்டபத்தில் வந்தேறிப்பார்கள்
கோபுரத்திலேநின்று குலுங்கநகைப்போரும்
சொல்லிச்சிரிப்போரும் சீச்சீயென்போரும்
இவனுக்குஇக்கழுதை ஏதென்றுசொல்வோரும்
சாமத்துரோகியிவன் சதிசெய்தானென்போரும்
இப்படியாக இவர்களுஞ்சொல்லையிலே
மற்றுமொருவன்வந்து வாய்திறந்தங்கேதுசொல்வான்
அரியனுடசொற்கேட்டு துரோபதையைக்கொண்டுவா

போறானே கானகத்திற் போர்மன்னராஜனண்டை
ஐவரில்லா வேளையிலே ஆரணங்கைக்கொண்டுசென்றான்
அப்போ துரோபதையும் அபயமபயமென்றாள்
அபயக்குரல்கேட்டு ஐவர்களுமோடிவந்தார்
வெற்றிமதயானை பீமனவன்பார்த்து
மயிலிணையைக்கொண்டுபோக வந்ததொருபாவிதன்னை
விடலாகாதென்றுசொல்லி வீமன்மனதிலெண்ணி
அடையாளம்பண்ணி யனுப்பினான் அரியனண்டை
என்றுமவர்சொல்லி யிருக்கின்றவேளையிலே
அந்தத்தெருதாண்டி அப்பாலே போறானே
மாடத்தெருதாண்டி அப்பாலேபோறானே
திரியோதிரனிருக்கும் சிம்மாசனத்தருகே
வந்ததுஅக்கழுதை மகாராசன்முன்னாலே
அம்பலத்தார்கண்டார்கள் ஆச்சரியப்பட்டார்கள்
திரியோதிரன்கண்டு சிந்தைமனங்கலங்கி
உள்ளங்கலங்கியல்லோ ஓடிவந்தான்சயிந்தனண்டை
இரங்கென்றுகைகொடுத்தா னிழுத்துக்கொண்டோடுகுது
ஐயோதெய்வமேயிந்த அனியாயம்நானறியேன்.
என்னையிழுத்துக்கொண்டு ஓடுகுதுயிக்கழுதை
கூவியலறுகிறான் கொப்பெனவே திரியோதிரன்
அபயமிட்டுச்சுற்றுகிறா னம்பலத்தார்தங்கள்முன்னே
அங்கேயிருந்தவர்கள் அனைவோருந்தான்பார்த்து
கலுக்கென்றுதான்சிரித்தார் கட்டபுகரெல்லோரும்
சிரித்ததைத்தான்பார்த்து திரியனுட தம்பியர்கள்
சிரிக்கவுடலெடுத்தோம் சீயென்னப்பேரெடுத்தோம்
என்றுமவர்கள்சொல்லி யிவனருகிலோடிவந்து
தம்பிமாரெல்லோரும் தமயனுக்குகைகொடுத்தார்
அத்தண்டபேர்களையும் அக்கழுதைவலித்தோடும்
அப்போதுஎல்லோரும் அலறுகிறார்கூச்சலிட்டு
ஐயையோதெய்வமென்று அல்லறும்புலம்புகையில்
அங்கிருந்தராஜாக்க ளானதொருமந்திரிகள்
பார்த்துமவர்நடுங்கிப் பதுங்குவார் துரைகளெல்லாம்
இப்படியாகவேதா இவர்கள்படும்பாடுதன்னை
ஆயகுலத்துதித்த துரோணரவர்ஓடிவந்து
காசிவடநாடாளுநங் கர்ணரைக்கண்காட்டி
சர்ப்பக்கொடியோனுடனே தம்பிமாரனைவரும்

சாயாம்புமே சயிந்தவனானவரும்
மற்றுஞ்சில மன்னரும் மகுடமுடி ராஜர்களும்
இன்னுஞ்சில சேனைகளும் எல்லோருமொன்றாக
காட்டுக்குழதையுடன் கலந்துமவரோடுகிறார்
தாம் கண்டுசும்மாவிருக்கக் காரியங்களல்லவென்றார்
பார்த்திருப்போமென்றால் பரிதாபந்தோணுதையா
இதுக்கொருயோசனைகள் இயம்புங்காண்மன்னவரே
அப்போதுகர்ணருமே ஆணழகர்வதுசொல்வார்
துரோபதையைச்சொன்னதொரு தோஷமிதுதானும்
பத்தினியைப்பேசினதோர் பாவமிதுகாணும்
என்றுசொல்லிக்கர்ணருமே இவர்களருகில்வந்து
அப்போதுகர்ணருமே அனைவரையுந்தான்பார்த்து
நாலுங்கரைகைத்துக் கோபமுடனோடிவந்து
பாரளந்தான் திருப்பாதமதைமனதிலெண்ணி
பெருமாள்துணையென்று பிடித்தானேதன்கையால்
கடுகயிழுத்ததாலே கர்ணமகாராஜன்
கழுதையைத்தட்டி கடுகயிறங்குமென்றான்
அத்தண்டபேர்களுமே அல்லவருங்கையைவிட்டார்
அப்போசயிந்தவனும் அங்கேயிறங்கிவிட்டான்
திரியோதிரன்முதலாய்ச் சேனையெல்லாம்வந்தார்கள்
அவரவர்களாசனத்தி லனைவோரும்வீற்றிருந்தார்
அம்பலவாசலிலே அழைத்துவந்தார்சயிந்தவனை
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன்
மைத்துனரைத்தான்பார்த்துமகாராஜனேதுசொல்வான்
கோதைதுரோபதையைக் கொண்டுவரப்போனீரே
மட்டையடிமொட்டையிட்டு வாகனத்தின்மேலேறி
அனுப்பினாரார்காணும் ஆணழகாசொல்லுமென்றான்
அவன்பேயப்பலனழிந்துபின்வேந்தனேதுசொல்வான்
போனதுவும்வந்ததுவும் புதுமைநடந்ததுவும்
அங்கேநடந்ததொரு ஆச்சரியந்தானுரைத்தான்
தேசத்தையாளும் திரியோதிரன்பார்த்து
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரவேமனஞ்சலித்தான்
வரிசித்துராசனுமே மைத்துனற்கேதுசொல்வான்
வெற்றிமதயானை வீமனைக்கொல்லவென்று
பரமனைநோக்கியே பாரத்தபசுபண்ணி
வீமனைக்கொல்லவென்று வேணவரம்பெற்றுவாரான்

ஆரடாமல்லர்களை அருகிருக்குஞ்சேவகரே
சயிந்தவனையிற்றிருக்கத் தங்காசனம்போடுமென
ஏவல்பணிசெய்கிறவர் எல்லாருந்தான்கேட்டு
சொல்லப்பெற்றேனென்றுமவர் சுறுக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றேனென்றுசொல்லி எய்ப்பிட்டெழுந்திருந்து
சேவகரெடுத்துவந்தார் சிங்காதனமுமிட்டார்
அப்போதிரிபோதிரன் அத்தானைத்தான்பார்த்து
வந்துநெடுநேரம் நின்றீரேமைத்துனரே
இட்டசிங்காதனத்தில் ஏறியவன்வீற்றிரென்றான்
அப்போசயிந்தவனும் ஆறாமுகமுள்ளவன்
இட்டதொருசிங்காதனம் ஏறியவன்வீற்றிருந்தான்
அப்போதிரிபோதிரன் ஆணழகனேதுசொல்வன்
கானகங்கள்போனீரே கர்த்தாவைக்காணவென்று
கர்த்தாவைக்கண்டீரோ கனத்தவரம்பெற்றீரோ
ஐவரையுங்கொல்லுதற்கு ஆனவரம்பெற்றீரோ
பஞ்சவரைக்கொல்லுதற்குப் பாத்தவரம்பெற்றீரோ
எத்தன்மனங்குளிர எனக்கறிபர்சொல்லுமென்றான்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்
போனதுவும்வந்ததுவும் புனிதரைக்கண்டதும்
ஐவரையுங்கொல்லவென்று ஆனவரம்பெற்றதுவும்
நாலிரண்டுவார்த்தைகளாய் நடத்தினான்சயிந்தவனும்
கேட்டுமனமகிழ்ந்தான் கீர்த்திபெற்றேனென்றுசொல்லி
வெற்றிபெற்றேனென்று வேந்தன்மனமகிழ்ந்தான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மூன்றும்வருஷம் முடிந்ததுமன்னவர்க்கு
மூன்றாவது முருக்கமாரிஷிவனம் முற்றிற்று.

* ** *
* ** *

நான்காவது.

## காளமகா ரிஷிவனம்

---

நான்காம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
முருக்கமகாரிஷிவனத்தை முடிமன்னர்தான்தாண்டி
கூடைதலையிலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்துசுமாடு கூடைதலையிலே
கன்னிவைத்துசுமாடு வனவாசக்குடித்தனமாய்

அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அப்பாலேபோகலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தார்பஞ்சவர்கள்
அவ்வனத்திற்போய்சேர்ந்தார் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
பசைதழைபொடித்து பர்ணசாலையுண்டுபண்ணார்
ஓரடுக்குபர்ணசாலை உண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடுக்குபர்ணசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஐந்தடுக்குபர்ணசாலை ஆணழகருண்டுபண்ணார்
பர்ணசாலைமேலேயல்லோ பஞ்சவர்குடித்தனமாய்
மாதுதுரோபதையும் மன்னர்பஞ்சபாண்டவரும்
காயுங்கனியுந்தின்று காலங்கழிக்கிறார்கள்
அவ்வனத்திற்பஞ்சவர்கள் அவரிருக்கும்வேளையிலே
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுசெய்வான்
அரவக்கொடியோனும் அங்காலவனேதுசொல்வான்
சபைகள்நிறைந்திருக்க சர்பக்கொடியோனும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனாரே
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ வார்த்தைதெரியவில்லை
எந்தவனத்திலிருக்கிறாரென்றறியேன்
காவிபேரண்டாநீ கடுகவேதானேகி
ஐவரையும்நீதேடி அவரிருக்குந்தாவறிந்து
தேடியேநீபார்த்துத் திரும்பிவந்துசேருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அருகிருந்த தூதுவர்கள்
சொல்லப்பெற்றோமென்று சுருக்காயெழுந்தார்கள்
கூறப்பெற்றோமென்று கும்பிட்டவரெழுந்து
அஸ்தினாபுரந்தாண்டி ஆரணியந்தேடிவாரார்
காடுமலைகளிலுங் கடுகவேதேடிவாரார்
தினகரன்வனந்தனிலே தேடினார்பஞ்சவரை
அங்கிலுங்காணாமல் அப்பாலேதேடிவாரார்
ராமரிஷிவனத்தில் நலமாகத்தேடுவாரார்
அங்கிலுந்தேடினார்கள் ஐவரையுங்காணாமல்
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னர்தேடிவாரார்
அங்கெங்குங்காணவில்லை ஐவர்பஞ்சபாண்டவரை
காளமாரிஷிவனத்தே கடுகியேவந்தார்கள்
காளமகாரிஷிவனத்திற் காவலர்கள்பஞ்சவரை

பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்கிறதென்றறிந்து வகிவழி நடந்தார்கள்
காடுஞ்செடிதாண்டி கடுகியேவாரார்கள்
ஆறுஞ்சுனைதாண்டி அவசரமாயோடிவந்தார்
மகாராஜன்வீற்றிருக்கும் மண்டபத்தருகில்வந்தார்
திரியோதனனிருக்கும் சிம்மாதனமுன்னேவந்தார்
அரசனெதிர்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டுதிரியோதனன் கட்டபுகனேதுசொல்வான்
பார்த்துதிரியோதனன் பார்மன்னனேதுசொல்வான்
போனீரேதூதுவரே புதுமையென்னசொல்லுமென்று
ஐவரைத்தேடியே ஆரணியம்போனோமே
காளமகாரிஷிவனத்திற் கண்டோமேபஞ்சவரை
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டோமே
என்றுசொல்லத்தான்கேட்டு எரிநாகங்கொண்டவனும்
கண்கள்சிவந்தானே காந்தாளப்பட்டவனும்
மாமாவைத்தானழைத்து மாநாகனேதுசொல்வான்
இன்னமும்பஞ்சவர்க ளிருக்கிறார்கானகத்தில்
மாளாமற்பஞ்சவர்கள் வனமேதிரிகிறார்கள்
தப்பிப்பிழைத்தாலே தாரணியையாள்வாரே
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுஆள்வாரே
எந்தவிதமானாலும் இறக்கவகைபார்க்கவேணும் [றான்
ஐவரையுங்கொல்லுவதற்கு ஆலோசனைசொல்லுமென்
மாமாவேயெந்தனுக்கு வார்த்தையுரையுமென்றான்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மருமகனுக்கு
சாமத்துரோகியவன் சகுனியெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லி குடிக்குச்சகுனியல்லோ
துரியனைத்தான்கெடுக்க சொல்லுகிறான்யோசனைகள்
பஞ்சவரைக்கொன்று பாருலகையாளவைப்பேன்
ஐவர்தனக்காக ஆதிசிவன்வந்தாலும்
பஞ்சவரைக்காக்கப் பாரளந்தார்வந்தாலும்
தான்முன்படைத்த நற்பிரமன்வந்தாலும்
வெற்றிமயிலேறும் வேலவர்தாம்வந்தாலும்
தேவர்க்கதிபதியாம் தேவேந்திரன்வந்தாலும்
இவர்களைக்காப்போமென்று எமனவன்வந்தாலும்
எந்தவிதத்தாலும் இறக்கவகைபண்ணுகிறேன்
என்றுவரங்கொடுத்தார் எரிநாகங்கொண்டவற்கு

அப்போ திரியோதிரன் ஆனந்தமானானே
அப்பா மருமகனே ஐவரையுங்கொல்லவென்றால்
தொடிக்குள் காளமகாரிஷியை நோக்கித் தவம்பண்ணினாலே
அருந்தபசுபண்ணினாலே அந்தமுனிவந்திடுவார்
ஐவரைக்கொல்லவென்று அவரைமனுக்கேட்டால்
நல்லதென்றுசொன்னாலே நாடெல்லாமுன்னுடதப்பா
தபசிற்பெரியவர்காண் சாமிக்கொப்பானவர்காண்
வரத்திற்கொப்பானவர்காண் மகாதேவர்க்கொப்பாவார்
அவராலேயாகுமப்பா ஐவரையுங்கொல்லுவதற்கு
உன்னாலேயானமட்டும் உத்தமனேயாருமென்றான்
என்றுசொல்லத்தான்கேட்டு எழுந்தான் திரியோதிரன்
உக்கிரமுடனெழுந்து ஒருவனுமாய்ப்போனானே
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமல்லோ அரியவனந்தான்தாண்டி
ஆரணியந்தன்னிலே அரவக்கொடியோனும்
வந்துமிருந்துமவன் மகாதபசுபண்ணுகிறான்
காளமகாமுனியைக் கருதிமனதிலெண்ணி
அருந்தபசுபண்ணினானே அரவக்கொடியோனும்
வேணதபசுபண்ணினான் வேந்தரைக்கொல்லவென்று
பாவிதபசுபண்ணினான் பஞ்சவரைக்கொல்லவென்று
இப்படியாய்த்தவமிருந்தான் எரிநாகங்கொண்டவனும்
அப்போமகாமுனியும் அறிந்தாரவநிலையை
சடையுஞ்சடைமுடியும் தம்பிரான்போலாக
இவருடையசடையழகும் ஈஸ்வரரைப்போலாகக்
காலிற்[illegible]டியும் கையிற்கமண்டலமும்
திரியோதிரனருகே சேரவருகையிலே
கண்டு திரியோதிரனும் சடிதியெழுந்திருந்து
பார்த்துத் திரியோதிரனும் பற்றுநேர்க்கெதிரில்வந்து
முத்துமுடிவேந்தன் முனிக்கெதிரிலோடிவந்து
சுத்திவலம்வந்து தொழுதிரங்கித்தெண்டனிட்டான்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டான்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகன்கோமானும்
அப்போ திரியோதிரன் ஆணழகன்தான்பார்த்து
சர்பக்கொடியோனும் சந்தோஷமானானே
அரவக்கொடியோனும் அங்கேமனமகிழ்ந்து

ஆண்டவரே நீர்கேளும் அடியேனு விண்ணப்பம்
என்சாமி கேளுமையா எந்தனுட விண்ணப்பம்
அஸ்தினபுரமாண்ட அரவக்கொடிவேந்தன்
இக்கரைசையாண்டதொரு திரியோதிரனென்பார்
எந்தன் மனக்குறையால் வந்தேனுமைக்காண
கண்டேன் களிகூர்ந்தேன் கவலையைச்சொல்லுகிறேன்
பண்டுப்பகையாளி பாதிநாள் தாயாதி
என்னுடப்பகையாளி யிருக்கிறார்சத்ராதி
எந்தன்பகை யாளர் இபானபஞ்சவர்கள்
பாண்டுமகாராஜன் பெற்றெடுத்தபஞ்சவர்கள்
இப்போதுதங்கள்வனத் திருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரையுங்கொல்ல அதிகமனதெந்தனுக்கு
ஐவரையுங்கொன்றாலே ஆளுவேன்ராச்சியத்தை
அவர்களைக்கொல்லுதற்கு அடியேனலாகாது
உப்பாயேயாகுமென்று உப்பைவரவழைத்தேன்
ஆகையாலெந்தனுக்கு அவ்வரந்தாருமென்றான்
பஞ்சவரைக்கொல்லுதற்கு பலத்தவரந்தாருமென்றான்
அனேகநாளும்மைக்கோரி அரியதவம்பண்ணிநின்றே
நீர்வந்தபொழுதெந்தன் மனங்குளிர்ந்தேனுண்டவரே
இந்தவரமெனக்கு யீந்திடுவீர்கர்த்தாவே
கொல்லவரமெனக்குக் கொடுத்தருளவேணுமையா
என்று பாதம்பணிந்தானே பாம்புக்கொடியோனும்
அந்தமகாமுனியும் அவர்மனதுதான்குளிர்ந்து
காளமகாமுனியுங் கடிகமனமகிழ்ந்து
சந்தோஷப்பட்டாரே சரீரங்கள்பூரித்தார்
மெத்த மகிழ்ந்தாரே வேந்தரந்தமாமுனியும்
மனது நினைந்தபடி மன்னவனேசெய்கிறேனன்
நினைத்து நீகேட்டபடி செய்வேன் நீ அஞ்சாதே
ஐவரையுங்கொன்று நான் அதம்பண்ணிப்போடுகிறேன்
பஞ்சவரைக்கொன்றுபாருனைநயாளவைப்பேன்
ஐவர்தனக்காக ஆதிசிவன்வந்தாலும்
பஞ்சவரைக்காக்கப் பாரளந்தார்வந்தாலும்
நான்முகப்படைத்த நற்பிரமன்வந்தாலும்
வெற்றிமயிலேறும் வேலவர்தான்வந்தாலும்
தேவர்க்கதிபதியாம் தேவேந்திரன்வந்தாலும்
இவர்களைக்காப்பேனென்று வயனவன்வந்தாலும்

எந்தவிதத்தாலும் இறக்கவகைபண்ணுகிறேன்
என்றுவரங்கொடுத்தார் எரிநாகங்கொண்டவற்கு
அப்போ திரிபோதிரன் ஆனந்தமானானே
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே விஷநாகக்கொண்டவனும்
மனங்கள்மிகப்பூரித்து மாநாசன்போய்நடந்தார்
காளமகாமுனியுங் கடுகிவனத்தில்வந்தார்

காளமகாரிஷி ஐவரைக்கொல்ல நினைத்தது.

அப்போதுமாமுனியும் ஆலோசனைகள்பண்ணி
வேதாளந்தான்பிறக்க வேள்விதனைவளர்க்க
அக்கினிகுண்டம்வெட்டி அனலைவளர்த்தினானே
பாதாளக்குழியைவெட்டி பகவானைமூட்டினானே
மந்திரத்தாலேயல்லோ வாவென்றார்வேதாளத்தை
ஆயன்பெருமாளும் அவ்வயணந்தானறிந்தார்
ஏழுலகயாளுகின்ற எம்பெருமானே துசொச்வர்
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
பங்கும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலேயும் இறக்கவகைபண்ணுகிறான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்வரலாச்சே
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
தோளிற்பூமாலை தொண்டழிந்துபோகுதே
கையிற்செபமாலை கலங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருகுலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராஜாக்கள்மாளுகிறார்
நம்பினபேர்களைத்தான் நாமல்லோகாக்கவேணும்
கைமோசம்வந்ததென்று கரியமால் தானினைந்து

எம்பெருமான் பஞ்சவரைக்காப்பதற்கு
எமபுரம்போனது.

அப்போதுஎம்பெருமாளாயரெழுந்திருந்து
வட்டமாங்கருடனேறி வருகிறார்மாயவர்
காடுஞ்செடி தாண்டி கரியமலைதான் தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
இன்னென்றுபூத்தொரு செடியும்வனந்தாண்டி
வேங்கைபடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்

இளமானைப்போலே இசைந்துவருங்காவேரி
வடமலைராங்கர் வனங்களெல்லாந்தான் தாண்டி
எமபுரந்தேடியே எம்பெருமானோடிவந்தார்
எமனுக்கெதிராக எம்பெருமாள்வந்துநின்ருர்
எமதர்மராஜனவன் எம்பெருமானைக்கண்டு
கரியமாலைப்பார்த்து கடுகவெழுந்திருந்து
மாயன்பெருமானை வந்துநமஸ்கரித்தான்
எமபடரோடியே எடுத்துவந்தார்சிம்மாதனம்
இட்டதோராசனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
அப்போதுஎம்பெருமாள் அரிராமர்தானெழுந்து
சிம்மாதனமேறி ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
வேர்க்கவிருவிருக்க வேந்தரவர்வீற்றிருந்தார்
அப்போதுஎமனவன் ஆயரைப்பார்த்துரைப்பான்
எங்குவந்தீர்மாயவரே எனக்கரியச்சொல்லுமென்ருன்
ஏதுவகையாக எம்பெருமாளிங்குவந்தீர்
வந்தகருமத்தை வாய்திறந்துசொல்லுமென்ருன்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
உன்னுடையமைந்தனல்லோ அருமையுள்ளதருமரும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அநீதமாய்மாளுகிருர்
இறந்துவிடநாளாச்சு மகாராஜமன்னவர்கள்
செத்துவிடநாளாச்சு சீரானபஞ்சவர்கள்
பாவிகெடுத்தானே படுபாவி திரிபோதிரன்
நொடிக்குள்காளமகாமுனியை நோக்கித்தபசுபண்ணி
அந்தமகாமுனியும் வந்துஎதிரில்நின்ருர்
கண்டுதிரிபோதிரன் கடுகசரணஞ்செய்து
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகன் நின்ருனே
அப்போதுமாமுனியும் ஆறவேமனமகிழ்ந்து
காளமகாமுனியுங் கண்டுமனமகிழ்ந்து
என்னவரம்வேண்டும் எந்தனைக்கேளுமென்ருர்
அப்போதிரிபோதிரன் ஆணழகனேதுசொல்வான்
ஐவரையுங்கொல்லுதற்கு ஆனவரம்வேணுமென்ருன்
பஞ்சவரைக்கொல்ல பலத்தவரம்வேணுமென்ருன்
உம்முடையபண்பாலே உத்தமரைக்கொல்லுமென்ருன்
அந்தமுனிகேட்டு அப்படியேநல்லதென்று
வாக்குவரங்கொடுத்து வந்தாரேயந்தமுனி
ஆழக்குழிபறித்து அக்கினியைமூட்டிவைத்தார்

வேதாளமுண்டுபண்ண மிக்கவனல்மூட்டிவைத்தார்
அக்கினிக்குழியிலே ஆம்பாரவேதாளம்
பிறக்கும்படியாகப் பெருக்கவேள்விபண்ணுகிறார்
அதைமறந்தாலும் ஐவர்பிழைப்பார்கள்
தொட்டுமாலை நொட்டமிந்துபோகுதே
ை யிற்செபமாலை கனங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருகுலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராசாக்கள்மாளுகிறார்
ஆகையாலுமமை அழைக்கவேவந்தேன்காண்
வேதாளம்பிறந்தாலே வேந்தரைக்கொன்றுவிடும்
மாண்டுமடிவார்கள் மகாராஜர்பஞ்சவர்கள்
செத்துமடிவாரே சீரானபஞ்சவர்கள்
என்றுரைத்தார்மாயன் எமனுடனே
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயருக்கேதுரைப்பான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவர்கள்காலம்உள்ளமட்டும்
உம்மையேநம்பியல்லோ உயிர்கொண்டுவாழுகிறார்
காக்கக்கடனுமக்குக் கரியமாலென்றுசொன்னார்
அப்போதுமாயவனார் ஆறவேமனமகிழ்ந்து
மாயவனார் தான்கேட்டு மனதுபெரிதுகந்து
கூடவருவீரோ கொப்பெனவேபோகவென்றார்
ஆயருரைகேட்டு அப்படியேவாரேனென்றார்

எம்பெருமாளும் எமதர்மராஜனும்
பஞ்சவரைக்காக்கவருதல்

மாயவரும்எமனுமே வருகிறார்வனந்தனிலே
எமபுரத்தைவிட்டுமல்லோ இருவருமாய்வாரார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
இருண்டவனந்தாண்டி இருவருமாய்வாராரார்கள்
காளமகாமுனிவருடைய கானகத்தில்வந்தார்கள்
எமன்கிடாமேலே எம்பெருமாள்கெருடன்மேலே
அந்தவனத்திலேவந்தாரிருவர்களும்
வந்துஇறங்கினார் மகாமுனியர்தன்வனத்தில்

எம்பெருமாள் தடாகம்உண்டுபண்ணல்

ஆயர்பெருமாளும் அங்கென்னவேலைசெய்தார்
அந்தரப்பொய்கையொன்று ஆயருமுண்டுபண்ணார்
மாயமாய்ப்பொய்கையொன்று மாயருமுண்டுபண்ணார்

ஆனைத்திகளமாய் ஆறுமே ஜீனாசகாதம்
பத்துயோசனைதூரம் பாரளந்தாருண்டுபண்ணுர்
தாமரைப்பொய்கைதன்னை சாமியவருண்டுபண்ணுர்
அல்லித்தாமரைப்பொய்கை அங்கெனவேயுண்டுபண்ணுர்
அல்லியுடன்தாமரையும் ஆம்பலுமுண்டாச்சு
அழகானபொய்கையிலே அதிசயமென்னவென்றால்
அல்லியுங்கொட்டியுமே இதில்நெருங்கவுண்டாச்சு
அந்தரத்தாமரை அக்குளத்திலுண்டாச்சு
நாணலுங்கோரையுமே நடுவேபதிலுண்டாச்சு
அக்குளத்துக்கரைமேலே அழகானபூமரங்கள்
மல்லிகைமுல்லையுமே மாதளையுமுண்டாச்சு
நல்லதொருபூமலரும் நற்றும்பையுண்டாச்சு
கொன்றைகுருக்கத்தி கோங்குமுல்லையுண்டாச்சு
ஆற்றலரிமந்தாரை அழகானசண்பகங்கள்
ஆலஞ்செடிமுளைத்து அரசுமேவுண்டாச்சு
வேம்புமரசுமங்கே வேணதுமுண்டாச்சி
வாடைமணம்வீசும் பன்னீருப்பூபூத்திருக்கும்
வல்லவண்ணப்பூமரங்கள் யாவிருட்சமுண்டாச்சு
கழுகுகுலைசரியும் கஸ்தூரிமணம்வீசும்
வேரிற்பலாப்பழங்கள் வெடித்துவிழுந்திருக்கும்
மாம்பழமெங்கெங்கும் வனத்திற்பழுத்திருக்கும்
பார்த்தவிடமெல்லாம் பழங்கள்பரிமளிக்கும்
கண்டஇடந்தனெல்லாம் கனிகள்மணம்வீசும்
இப்படியாயுண்டுபண்ணுர் எம்பெருமாள்மாயவரும்
காலாகாலங்களிலே கட்டினகுளம்போலே
ஆயன்பெருமாளதிசயமாயுண்டுபண்ணுர்

எமனும்பெருமாளும் வேறுவடிவுகொண்டார்
எமதர்மராஜனென்னவடிவெடுத்தார்
எமபுரத்தையாளுகிற எமன்குயிலானுர்
எம்பெருமாள்மாயனுரென்னவடிவானுர்
புள்ளிமான்குட்டியைப்போல் பொன்மான்வடிவெடுத்தார்
அந்தநல்லபொன்மானி னதிசயத்தைச்சொல்லுகிறேன்
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியிலேவிட்டாற்போல்
மேகத்திலேயெழும்பும் மின்னலதுபோலே
ஆ[illegible]த்திலேயெழும்பும் சோதியதுபோலே

எட்டுநாள் சென்றகுட்டி பேந்துங்குழந்தையைப்போல்
மான்குட்டிபோலாக மாயவனுர்வடிவெடுத்தார்
பஞ்சவர்கள் தானிருக்கும் பர்ணசாலைதேடிவாரார்
மூன்றடுக்குப்பர்ணசாலை முன்னுலேபோடிவந்து
ஏழடுக்குப்பர்னசாலை எதிராகவந்துநின்ருர்
நடந்துவிளையாடி ராஜாத்திமுன்னேவந்து
துள்ளிக்குதித்துதங்கே துரோபதையாள்மூன்னுலே

துரோபதை தருமரை மான்பிடித்துத்
தரச்சொன்னது

கண்டாளேபாஞ்சாலி கானகத்துமானதுவை
மானதுகைப்பார்த்தாளே மயிலணையாள் துரோபதையும்
பார்த்துமனமகிழ்ந்தாள் பஞ்சவர்கள்தேவியவள்
மான்பிடிக்கவேணுமென்று மனதில்நினைத்தோமே
ஆர்பிடித்துத்தருவார்கள் அழகான இம்மானை
தருமரைக்கேட்போமென்று தானெழுந்துஓடிவந்தாள்
தருமராகேவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டாள்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டாள்
வணங்கிநமஸ்கரித்தாள் மாது துரோபதையும்
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
வணங்குமுடியாளே மங்கைதுரோபதையே
எதுக்குபெண்ணேநீ என்னைவந்துதெண்டனிட்டாய்
பின்னையுந்தெண்டனிட்டாய் பிள்ளைகளைப்பெற்றிடுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
தெண்டனிட்டகாரியத்தை தெரியவுரையுமென்ருர்
வந்துபணிந்ததொரு வயணத்தைச்சொல்லுமென்ருர்
என்றுமவர்கேட்க வதுசொல்வாள் துரோபதையும்
வதோஒருமான் வந்தெதிரிலேநிற்கிறதே
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்த்ததாப்போல்
மேகத்துமின்னலைப்போல்தேகமதுதோணுது
தூரத்துசோதியைப்போல் தொணுதுஎந்தனுக்கு
உச்சிதமாகவே இருக்குதுஎந்தனுக்கு
அதிசயமாய்த்தோணுது அந்தமானெந்தனுக்கு
மானெனக்குவேணுமையா வனத்தில்விளையாட
விளையாட்டெந்தனுக்கு வேணும்பிடித்துதாரும் (டேன்
மான்பிடித்துத்தருவீரென்று மன்னவரேதெண்டட்னி
எந்தவிதந்தாலும் எனக்காகப்பிடியுமென்ருள்

சீதைதனைச்சிறைபெடுக்க தென்னிலங்கைவிட்டுவந்தான்
கண்டானேமூவர்களைக் கானகத்தில்ராவணனும்
ஜானகியைகொண்டுபோகச் சமையமில்லையென்றவனும்
உற்று நினைத்தானே ஒருகோடிபுத்திகளை
இருந்துநினைத்தானே யெண்ணமுற்றசிந்தையிலே
ஆலோசனைபுரிந்து அந்தப்பாடுபாவி
மரீசனையழைத்து மானாய்ச்செய்துவிட்டு
போய்நில்லுசீதையிடம் பொன்மானேபென்றுரைக்க
பொன்மானதுகேட்டுப் போகமாட்டானென்றுசொல்ல
மாட்டேனென்றுசொன்னசொல்லை மாபாவிதான்கேட்டு
அவ்வளவிலம்மானை அடித்தான்பிரம்பாலே
அடிபட்டுஓடுகுது அந்தவனந்தனிலே
மானுமனுப்பிவைத்தான் மாரீசப்பொன்மானை
சீதையிருக்குமிடந் தேடிபேஓடிவந்து
மயிலனையாள்முன்னேவந்து மானும்விளையாட
கண்டாளேசீதையரும் கானகத்துமானதுவை
ஸ்ரீராமர்முன்னேவந்து தேவியருமேதுசொல்வாள்
மானதுகைக்கண்டேனதைத்தான்பிடித்துவாருமென்றாள்
மான்பிடித்துத்தாருமெனமலரடிக்குத்தெண்டனிட
ஸ்ரீராமர்தான்கேட்டுச் சிந்தைமனங்கலங்கி
மான்வந்தமாயமெல்லாம் மாயவனார்தாமறிந்து
மானல்ல பெண்ணேயிது மாயமானென்றுசொன்னார்
அல்லவென்று கேளாமல் அனேகந்துபரமுற்றாள
துபரமுற்றுமென்றுசொல்லி சுவாமிமனதிலெண்ணி
இராமரும்லக்ஷ்மணரை நலமாகத்தானழைத்து
மான்பிடித்துநான்வருவேன் வாரமட்டுந்தம்பியரே
சீதையருகாகத் திரமாயிருப்பாயென்றார்
இளையபெருமாளும் இவ்வார்த்தைதான்கேட்டு
அப்படியேகாத்திருப்பேன் அண்ணாவேபோமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமர்போகலுற்றார்
அம்புவில்லுங்கைபிடித்து அவ்வனத்திலூடாக
மானைத்துரத்திபே மாயவனார்போனபின்பு
தென்னிலங்கைராவணனும் மிக்கவேவேகமதாய்
பத்துத்தலையொளித்து பத்திரண்டுகைமறைத்து
நல்லவொளிமறைத்து ராவணன்பேர்மறைத்து
சங்கமனைப்போலே சண்டாளன்வாரானே

சீதையம்மாள்பட்டதொரு சேதியிதுவாகும்
மானைப்பிடிக்கவே மாட்டேனெனவுரைத்தார்

மானைப்பிடித்துத் தாவென்று துரோபதை
யம்மன் பிணங்கினது.

தக்கப்புகழுடைய தருமரிவையுரைக்க
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடைதுரோபதையும்
யதேதுசொன்னாலும் இரங்காமனதுடையாள்
வரும்விதியறியாளே மாதுகருங்குழலும்
எந்தவிதத்தாலும் இந்தமான்வேணுமென்றாள்
மானெனக்குவேணுமென்று மாதுபிணங்கி நின்றாள்
அறவேமனஞ்சலித்து அங்கேதுயரமிட்டாள்
தக்கப்புகழுடைய தருமராவர்பார்த்து
சாயாம்புமன்னரவர் தானுமங்கேயதுரைப்பார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
வீமாமதகரியே வில்வேந்தேயிப்போது
மான்குட்டிவேணுமென்று மாதுபிணங்கினதால்
குட்டிமானைப்பிடித்துக் கொப்பெனவேவாருமையா
காட்டுமானைப்பிடித்துக் கடுகெனவேவாருமையா.
ஓடிப்பிடித்துநீ ஒருநொடியில்வாருமென்றார்

வீமன் மான்பிடிக்கப்போகிறது

அன்னவுரைகேட்டு ஆங்காரபீமனவன்
இதுபோதுமென்றுசொல்லி எழுந்தானேபீமனவன்
ஜல்லடந்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சங்குவிட்டு
ஆயுதங்கைப்பிடித்து ஆனைமுகன்போகலுற்றான்
மானைத்தொடர்ந்தானே மதவிமாராஜாவும்
துள்ளிப்பதைபதைத்துச் சுருக்காய்வருவாராம்
வீமனைக்கண்டுமே மெள்ளநடப்பாராம்
அப்போமதவீமன் ஆங்காரங்கொண்டவனும்
மானைப்பிடிக்க மாயமான்பின்தொடர்ந்தான்
எட்டிப்பிடிக்க எதிரில்வருவானும்
பதுங்கிவருவானும் பாரமதபீமன்
ஐம்பதிங்காதவழி அநேகதூரந்தான்கடந்தார்
கண்ணுக்குத்தெரியாமல் கடுகவேபேகிவிட்டார்
தேடித்திரிந்தானே சீரானகானகத்தில்
என்னதுமென்னுகிறான் இயலானபீமனுமே

அண்ணன் தருமருக்கும் ஆரணங்கு துரோபதைக்கும்
என்னவென்றுசொல்வேனிந்தவிதிவசத்தை
எத்தனை தூரம்வந்தேன் இம்மானைக்காணேனே
போனவிடமறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
மாயன்போனதொரு வகையொன்றும் நானறியேன்
என்றுமனங்கலங்கி யெண்ணுகிறான்கோடிசிந்தை
நின்றுவிசாரமிட்டு நெடுமூச்செறிந்தானே
விடிவிடுநேரமங்கே வெயிலானவேளையிலே
நல்லஉடம்படைது நாவுவறளுது
தண்ணீருந்தாகவிடாய் தனிமையாய்க்கொள்ளுது
நாவுவறட்டுகுது நல்லஜலங்காணமல்
குடலைப்புரட்டுகுது குடிக்கஜலங்கிட்டாமல்
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிநடந்தானே

எம்பெருமாள் வீமராஜனைவிஷத்தண்ணீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

இதுதான்சமயமென எண்ணித்திருமாலும்
மாறுயிருந்தவரும் மயிலாய்வடிவெடுத்தார்
மயிலாய்வடிவெடுத்து மரத்தின்மேலேறினாரே
எமன்குயிலாகி யிருந்தானேமாயரண்டை
எமன்குயிலானார் எம்பெருமாள்மயிலானார்
மயிலுங்குயிலுமே வனந்தனிலேகூவுகையில்
அந்தக்குறல்கேட்டான் அழகானவீமனவன்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலும்மயிலிருக்கும்
என்றுமவன்சொல்லி ஏகிநடந்தானே
தேடியேவந்தானே சீரானபொய்கையண்டை
தாமரைப்பொய்கை தடாகத்தைக்கண்டானே
தாகவிடாய்தீர்ந்து தமையரண்டைபோவோமென்று
தண்ணீர்தடாகத்திலே இறங்கினான் தார்வேந்தன்
அந்தரமாய்மாயவரும் அங்கொருவரேதுசொல்வார்
ஆரடா தம்பியரே அள்ளிஜலமுண்கிறவன்
தண்ணீர்குடியாதே தாகவிடாய்தீராதே
இந்தக்குளமென்னுதடா இந்தநதியென்னுதடா
இந்தக்குளத்திலே இறங்கிஜலமுண்ணாதே

இவ்வார்த்தைதான்கேட்டு இயலானவீமனவன்
வெற்றிமதயானை வீமனவனே துசொல்வான்
அந்தரமாய்பேசுகிறது ஆரென்றுதெரியவில்லை
அந்தரதேவதைபோ ஆகாசதுர்கைகளோ
மந்திரதேவதைபோ வந்தென்னைகேட்கிறது
பேயோபிசாசுகளோ பிணந்தின்னும்பூர்சுகளோ
ஆரென்றுநானறியேன் அறியவுரையுங்கள்
வெற்றிமதயானை வீமனுங்கேட்கலுமே
அந்தச்சமயத்தில் ஆயரவரேதுசொல்வார்
ஆராணுலுந்தனுக்கேன் அப்புறத்தேபோவென்முர்
அப்போதுபீமனவன் அவ்வார்த்தைக்கேதுசொல்வான்
தாகவிடாய்கொண்டு தண்ணீரும்குடிக்கவந்தால்
தண்ணீர்குடியாதே யென்றுமேசாற்றுவாரோ
தடாகமிருக்கையிலே தண்ணீர்களைதிராமல்
குடியாமற்போவேனு கொற்றவரேசொல்லுமென
தண்ணீர்குடிக்கவென்முல் தாபணியிற்பயிர்களுக்கும்
வாடாதபயிருமெது வருத்தமானபாரமெது
அதிசயமானவார்த்தை அறிந்தாலுரையுமென்முர்
அப்போதுபீமனவன் அவ்வயணமறியாமல்
தெரியாமல்பீமனவன் தீர்த்தம்புசித்துவிட்டான்
தாகக்களையாலே தண்ணீர்குடித்துவிட்டான்
களையந்தபீமனுக்கு கண்ணைச்சொருகுதே
தலையைசுழற்றுதே தாமமுடியானுக்கு
உடம்புமறக்குதே உத்தண்டபீமனுக்கு
மரத்தடியிற்பள்ளிகொண்டான் மாலைமுடியானும்
மறந்துபடுத்தானே மதகரிபீமனவன்
தன்னைமறந்துமல்லோ தார்வேந்தன்பள்ளிகொண்டான்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
காலனைபெச்சரித்து கடுகவுயிர்வாங்குமென்முர்
அப்போதுஎமனவன் அவசரமாபோடிவந்து
சூலத்தால்குத்தியே பாசத்தால்கட்டினனே
சூலத்தால்குத்தியே துடிக்கவுயிர்வாங்கினனே
பாசத்தால்கட்டியே பதைக்கவுயிர்வாங்கினனே
குளத்தங்கரையோரம் குளிர்ந்தநிழல்தனிலே
பொய்கைகரையோரம் போர்பீமன்மாண்டுவிட்டான்
மாண்டுபடுத்தானே மதபீமன்குளக்கரையில்

செத்துபடுத்தானே சீரானபீமனுமே
இப்படியாக இவனிருக்கும்வேளையிலே
மான்பிடிக்கப்போனதொரு பீமனைக்காணேமென்று
தருமராஜர் புலம்புகிறது
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
சாயாம்புமன்னர் தருமரவரேதுசொல்வார்
மான்பிடிக்கப்போனதொரு மன்னவனைக்காணேனே
என்னேரமாச்சுதே இன்னம்வரக்காணேனே
யானைப்பிடிக்கையிலே வளர்த்தவர்கள்கண்டாரோ
ஆர்கண்டெடுத்தாரோ அமரதுசெய்கிருரோ
எவர்கொன்றுபோட்டாரோ ஏதுமறிபேனே
மண்ணுக்கிகல்லாக்கி மரமாக்கிவிட்டாரோ
கல்லாக்கிமுள்ளாக்கிக் கானகத்திற்போட்டாரோ
செத்துமடிந்தானே சிவன்பாதஞ்சேர்ந்தானே
மாண்டுமடிந்தானே வைகுந்தம்சேர்ந்தானே
காணவும்போறேனே கட்டழகன்தம்பியரே
பார்க்கவும்போறேனே பாரமதகரியை
காணுமல்தம்பியரைக் கலங்குதேதேகமெல்லாம்
பாராமல்தம்பியரைப் பதைக்குதேயென்மனது
காளையருச்சுனரே கடிகியேபோய்வாரும்
பார்த்துவா அர்ச்சுனரே பாரமதபீமனை நீ
தேடியழைத்துநீசீக்கிரத்தில் வாருமென்ருர்
காளையந்தபீமனை நீ கண்டழைத்துவாருமென்ருர்
...வ்வுமவர்சொல்லி யிருந்தாரொருவிதமாய்
அருச்சுனமகாராஜன் தருமர்சொல்லக்கேட்டு
பீமனைத் தேடிப்போனது
ஆணலழகுமன்னன் அர்ச்சுனராஜதுரை
தருமரைக்கேட்டு தானெழுந்துதார்விசயன்
ஜல்லடங்கவிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூசல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூசல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
பில்லைமுகதாடு பிருவெடுத்தஒட்டியாணம்
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு

பாங்குசொருகினனே பார்த்தனிடப்புறத்தே
கத்திசொருகினனே காலைவலப்புறத்தே
சிங்காணிவில்லெடுத்து சிறுநாணிதான்பூட்டி
அண்ணருடபாதம் அடிவணங்கிதெண்டனிட்டு
போகவிடைதாருமென்றான் போர்விஜயன்கோமானும்
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்திபெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
காளையருச்சுனரே கட்டழகா நீர்கேளும்
வனத்தினுட்புகுந்து மன்னவனைத்தேடி
கண்டழைத்துபீமனை நீ கடுகவேவாருமென்றார்
போய்வாருமென்றுசொல்லி பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தாரே விஜயபெருமானும்
வாரானே அர்ச்சுனனும் வனமாய்வனந்தாண்டி
கானகத்தினுட்புகுந்து காளையரைத்தேடுகிறான்
எங்கெங்குந்தேடினன் இனியவிடமாராய்ந்து
அந்தவனந்தனிலே அண்ணரைக்காணமல்
மற்றுமொருவனத்தில் மன்னனைத்தேடிவாரான்
இன்னமொருவனத்தில் இளவிஜயன்தேடுகிறான்
அண்ணனைத்தேடியே யனேகதூரம்வாரானே
காட்டிலேதேடியல்லோ கடுகியேவாரானே
ஆணழகுமன்னன் அருச்சுனராஜனுக்கு
தண்ணீர்கவனங்கள் தாகவிடாய்கொள்ளுகுது
தண்ணீர்தண்ணீரென்று தவித்துபுலம்புகிறான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

மாயவனார் அர்ச்சுனராஜனை விஷநீர்க்
குடிப்பித்து கொல்லுகிறது.

எம்பெருமாள்மாயவரும் ஏதுசெய்தாரன்னேரம்
மயிலுங்குயிலுமாக வனத்திலேகூவுகிறார்
அர்ச்சுனன்காதிற்கேட்க அவ்வனத்திற்கூவுகிறார்
அந்தக்குரலோசை அருச்சுனன்தான்கேட்டு
கூவுங்குரல்கேட்டான் கோபாலர்மைத்துனனும்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமேதுசொல்வா(ன்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தஇடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுமவன்சொல்லி ஏகிநடக்கலுற்றான்
அந்தயிடம்போகவென்று ஆராய்ந்துதேடிவந்தேன்.

குயிலிருக்குமிடந்தனிலே கொற்றவனும்வந்தானே
மயிலிருக்குமிடந்தனிலே மன்னவனும்வந்துநின்று
உற்றுற்றுப்பார்த்தானே ஒளிபிறந்தகண்ணாலே
பார்த்தயிடங்களெல்லாம் பச்சென்றுதானிருக்கும்
கண்டயிடங்களெல்லாம் கமகமென்றுபூமணக்கும்
தாமரைப்பொய்கையுஞ் சாலையுஞ்சோலைகளும்
ஆலவிருக்ஷத்தின்கீழ் அண்ணர்பள்ளிகொண்டதுவும்
வெற்றிமதயானை வீமரைக்கண்டானே
கண்டுமனமகிழ்ந்தான் காளையருச்சுனனும்
பார்த்துமனமகிழ்ந்தான் பார்த்திபனருச்சுனனும்
உற்றுற்றுப்பார்த்தானே உள்ளங்குளிர்ந்தானே
நின்றானரைநாழி நினைத்தானேகோடிபுத்தி
அண்ணர்தருமருமே அங்கேமனஞ்சலித்து
வீமனைக்காணுதே மெத்தமனஞ்சலித்து
தம்பியைக்காணுமல் தவித்துப்புலம்புகையில்
அங்கேதருமரவர் ஆயாசப்பட்டிருக்க
இங்கேமதவீமன் இப்படித்தூங்குறானே
மானும்பிடியாமல் மரத்தடியில்தூங்குறானே
தண்ணீர்குடித்துமல்லோ தாகமுந்தீர்ந்தபின்பு
அண்ணரைத்தானெழுப்பி அழைத்துநாம்போவோமெ
தாமரைப்பொய்கையிலே யிறங்கினான்தார்வேந்தன் (ன
அப்போதுமாயவரும் அர்ச்சுனரைத்தானபார்த்து
ஆயர்பெருமாளும் அந்தரத்திலேதுசொல்வார்
ஆரடாஎன்குளத்தில் அள்ளிஜலமுண்கிறவன்
எவனடாஎன்குளத்தில் எடுத்துஜலமூண்கிறவன்
இந்தக்குளமென்னுதடா இந்தநதிபென்னுதடா
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்காதேஎன்குளத்தில்
அள்ளிஜலமுண்ண அதிசயஞ்சொல்லுமென்றார்
தாகந்தணியவென்றால் சந்தேகஞ்சொல்லுமென்றார்
அப்போதருச்சுனனும் அவ்வார்த்தைக்கேதுரைப்பான்
என்ன அதிசயமோ எந்தனுக்குச்சொல்லுமென்றான்
எம்பெருமாள்மாயவரும் ஏதுசொல்வாரர்ச்சுனர்க்கு
வாடாபயிருமெது வையகத்திற்பாரமெது
இவ்வார்த்தைசொன்னு லிறங்கிஜலமுண்ணுமென்றார்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனராசதுரை

அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனுமேதுசொல்வா
ஆர்காணும்பேசுறது அந்தரத்திலேயிருந்து (ன்
எவர்காணும்பேசுறது எங்கையோதெரியவில்லை
வேண்டிவிடாய்த்துநான் வேர்வைமிகவொழுக
தண்ணீர்விடாயாகத் தாகத்துக்குண்ணவந்தால்
வேண்டாமெனமறித்துத் தீண்டாதெனவுரைத்தீர்
எதிரிட்டுவந்தாலே இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
கண்டித்துப்போட்டிடுவேன் கண்ணில்தெரியடாநீ
எதிரேநிற்கவேணும் என்சண்டைபார்க்கவேணும்
சரியாகநின்றல்லவோ சண்டைபண்ணிப்பார்க்கவேணும்
என்றதுபேசியே இரங்கிஜலங்குடித்தான்
தாகவிடாய்தீரத் தண்ணீர்குடித்தானே
தண்ணீர்குடித்தவுடன் தலையைச்சுழற்றுகுது
அப்போதுமயக்கமல்லோ அதிகமயக்கமாகும்
கஞ்சாமயக்கம் கனமயக்கமாகுது
அபினிமயக்கமல்லோ அவனைச்சுழற்றுகுது
தள்ளாடிவாரானே தாமுடியானும்
ஆணழகுமன்னன் அர்ச்சுனராஜனவன்
எண்ணுதுமெண்ணுகிறுன் இந்திரன்குமாரனுமே
நினையாதுநினைக்கிறுன் நீலவர்னன்மைத்துனனும்
ஆரோதெரியாது அந்தரத்திற்பேசினுகள்
எவரோதெரியாது எந்தனுடன்சொன்னுரே
தண்ணீர்குடியாதேயென்று சமர்த்துகள்பேசினுரே
தீர்த்தங்குடியாதென்று வார்த்தைபலசொன்னுரே
அவ்வார்த்தைதள்ளினுன் அள்ளியேதீர்த்தமுண்டேன்
சொன்னசொல்தனைமறுத்து சுருக்காகத்தீர்த்தமுண்டே
உண்டபொழுதே உடம்பைபிரட்டுதையோ (ன்
தலையைச்சுழற்றுதையோ தருமருக்காருரைப்பார்
அண்ணருக்குந்தம்பியர்க்கும் ஆரணங்குதுரோபதைக் (கும்
இந்தவிசேஷமதை எவர்கள்போய்சொல்வார்கள்
செத்தவிசேஷமல்லோ சேதிபோய்சொல்வாரார்
மாண்டவிசேஷமது மறுவார்த்தைசொல்வாரார்
என்றுமவன்சொல்லி ஏகிவழிநடந்தான்
தள்ளாடித்தத்தளித்துத் தானேநடந்துவந்து
அண்ணருகாக அர்ச்சுனன்வந்துநின்முன்
வீமருகாக விஜயனும்வந்துநின்முன்



காளமகாரிஷியினால் அனுப்பிய வேதாளம் இவரைத் தேடிவர
இவர் இறந்திருந்ததால் வேதாளம் ரிஷியைக்கொன்றது.

தன் னுறக்கப்போலவே கடுகிவந் தடுத்தானே
எம்பெருமான்மாயவரும் இதுதான்சமயமென்று
காலனையெச்சரித்தார் கரியமால்பொட்டெனவே
அருச்சுனன்தன் னுயிரை அதிவிரைவாய்வாங்குமென்று
அப்போது யமனவர் அதிவேகமாகவந்து (ர்
ஆலங்கொண்டுருத்தியே பாசங்கொண்டுகட்டினனே
வதைக்கவுயிர்மாய்த்த பார்த்திபனருச்சுனனை
இப்படியாக இவன்மாண்டிருக்கையிலே
தக்கப்புகழுடைய தருமருடசேதிசொல்வோம்

வீமனைத் தேடப்போன அருச்சுனனும் வீமனும்
இன்னம் வந்துசேரவில்லையென்று
தருமர் புலம்புகிறது.

---

அருச்சுனன்போனபின்பு அழகான தருமரவர்
மனது கலங்கியே மன்னவருமேதுசொல்வார்
கானகத்திற்போனவர்கள் கடுகவந்துசேரவில்லை
என்னேரமாச்சுதே யின்னம்வரக்காணேன்
நாமத்தழகா நகுலா நீவாருமென்றார்
தக்கபுகழுடைய தருமரழைக்கவேதான்
நாமமுடியான் நகுலனுமோடிவந்து
அண்ணரெதிரேவந்து அடிவணங்கிதெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கட்டழகனேதுசொல்வான்
என்னையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றான்
அழைத்தகாரியத்தை நீ பண்ணவேசொல்லுமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகர்தருமரவர்
கண்ணீர் ததும்பிடவே கட்டழகரேதுசொல்வார்
வீமனைத்தேடியே வில்விஜயன்போனானே
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணேன்
தேடியேபோனதொரு தேர்விஜயனைக்காணேன்
போனவிடமறியேன் போய்பதுங்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
ஆரோடேசண்டை அமரதுசெய்கிறாரோ
எவரோடேசண்டை எதிர்த்துபோர்செய்கிறாரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைசெய்தாரோ
கண்டுவதைத்தாரோ கண்டதுண்டமாக்கினாரோ

செத்ததுவும்பிழைத்ததுவும் சேதிதெரியவில்லை
மாண்டதுவும்பிழைத்ததுவும் வார்த்தைதெரியவில்லை
சந்தனமிருபுயத்தை சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுயத்தை குலையவெட்டிப்போட்டாரோ
மலையேபருவதமே வாழ்மலையேகுஞ்சரமே
காணவும்போறேனோ கட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போறேனோ பாவிபெண்ணாலே
இன்னமொருவேளை யினிகாணப்போறேனோ
இருவரையுந்தேடியே இட்டுவருவாயோ
போரீரோதம்பியரே புத்தியுள்ளகண்மணியே
அண்ணாருரைகேட்டு ஆணழகனேதுசொல்வான்
அஞ்சிப்புலம்பாதே ஆயாசமாகாதே
ஆரோடேசண்டை அமரதுசெய்தாரோ
எவரோடேசண்டை எதிர்த்துப்போராடினாலும்
சண்டையதுகெலித்துச் சடுதியிற்கொண்டுவாறேன்
அமரதுநான்கெலித்து அவர்களைக்கொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இப்போதேஆராய்ந்து
ஓடியழைத்து ஒருநொடியில்வாறேனென்றான்
தேடியழைத்து சீக்கிரத்தில்வாரேனென்றான்

நகுலன் தருமராஜர்சொற்படிக்கு வீமனையும்
அருச்சுனனையும் தேடிப்போனது.

---

கடுகவெழுந்தானே கட்டழகன்சீர்நகுலன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டித் தாமரைப்பூச்சுங்குவிட்டு
பாங்கெடுத்துச்சொருகினானே மன்னனிடப்புறத்தே
கத்திசொருகினானே காளையவலப்புறத்தே [டு
ஆயுதத்தைத்தானெடுத்து அண்ணருக்குத்தெண்டனிட்
போகவிடைதாருமெனப் போர்மன்னனைத்தொழுதான்
தக்கபுகழுடைய தருமர்மனமகிழ்ந்து
வாழ்த்திவிடுத்தவரும் மாபோடேகொண்டணைத்து
தாமழுதிட்டானே நகுலாவென்கண்மணியே

என்றுமனங்குளிர்ந்து ஏகிநடந்தானே
அண்ணரிருவர்களு மங்கேபடுத்திருந்தார்
கண்டுமகிழ்ந்தானே கட்டழகன்சீர்நகுலன்
ஆனந்தமானானே அண்ணர்களைக்கண்டவுடன்
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
அண்ணர்தருமராயர் ஆயாசப்பட்டிருக்க
ஆரணங்குதுரோபதையு மங்கேபுலம்பிநிற்க
என்னமனதுகொண்டு இங்கேபடுத்தார்கள்
தண்ணீர்குடித்துநாம் தாகவிடாய்தீர்ந்தபின்பு
அண்ணர்களையெழுப்பி அழைத்துநாம்போவோமென்று
குளத்திலிறங்கினானே கொப்பெனவேநகுலனவன்
மாயர்பெருமாளும் மலைராமர்தான்பார்த்து
அந்தரமாய்நின்று ஆயரவரேதுசொல்வார்
ஆரடாதம்பியரே அள்ளிஜலமுண்கிறவன்
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணாதே
தண்ணீர்குடியாதே தாமரைப்பொய்கையிலே
குளத்தைவிட்டப்புறம்வா கொற்றவாவென்றுசொன்னார்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான்நகுலனவன்
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரோதெரியாது எங்கேயோபேசுகிறீர்
வார்த்தைகள்கேட்குது வடிவந்தெரியவில்லை
சொன்னசொல்கேட்குது சொரூபந்தெரியவில்லை
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ
ஆகாயதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
ஆரோதெரியவில்லை அருகில்வந்துபேசுமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்
எங்கள்குளத்திலேநீ இறங்கிஜலமுண்ணவென்றால்
வையகத்திலிசயமும் வருத்தமானபாரங்களும்
வாடாப்பயிரின் வர்னமுறைத்தாயானால்
இறங்கிஜலமுண்ணும் இல்லையென்றாற்போய்நடவும்
சொன்னாலேநீர்குடியும் சொல்லாமற்போனாலே
தண்ணீர்குடியாதே தாமமுடியானே
குளத்திலடிவையாதே கொற்றம்போர்மன்னவனே
என்றதோர்சொற்கேட்டு ஏதுசொல்வான்சீர்நகுலன்
நீர்கேட்கும்வார்த்தைக்கு நான்கேட்குந்தன்மையென்ன

மான்பிடிக்கப்போனதொரு மதவீமராஜனையும்
விமலைக்காளையென்று விஜயராஜாவும்
தேடியேபோனானே தேர்விஜயனர்ச்சுனனும்
நல்விஜயனைத்தேட நகுலனும்போய்நடந்தான்
மூவர்களும்போனாரே முடிவேந்தராஜாக்கள்
ஒருவரையுங்காணேனே உத்தரவுதானறிய
மான்பிடிக்கப்போனவர்கள் வந்தின்னஞ்சேரவில்லை
தேடியேபோனவர்கள் திரும்பிவந்துசேரவில்லை
தம்பிசகாதேவா தாமமுடியானே
தேடியேபோராயோ சேதிவந்துசொல்வாயோ
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைநானறியேன்
மானைப்பிடிக்கையிலே மான்வளர்த்தார்கண்டாரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணுரோ
சக்கரிஷிகளோ சந்நியாசியானவரோ
சக்கரிஷியர்கள் சபித்துமேபோட்டாரோ
கொன்றுபழிவாங்கிக் கொலைசெய்துபோட்டாரோ
காணவும்போறேனே கட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போறேனே பாவியென்கண்ணாலே
இன்னமொருக்கால் இங்கேவந்துசேர்வாரோ
இளையசகாதேவா இட்டுக்கொண்டுவாராயோ
காளைசகாதேவா கண்டழைத்துவாராயோ
பாரமுடிமன்னர்களைப் பார்த்துமேநீயழைத்து
வருவாரோதம்பியரே வார்த்தைகள்சொல்லுமென்றார்
அப்போசகாதேவன் அண்ணரைதெண்டனிட்டு
தாமமுடியான் சகாதேவனேதுசொல்வான்
அஞ்சாதிரண்ணாவே அழைத்தோடிவாரேன்நான்
காளையந்தமூவரையும் கண்டழைத்துவாரேனென்றுன்
பார்த்தழைத்துவாரேனென்று பாரமுடிமன்னர்களை
என்றெழுந்தானே இளையசகாதேவன்

சகாதேவன் தருமர்சொல்லைக்கேட்டு தமையன்மார்
மூவரையுந் தேடிக்கொண்டு போனது.

சல்லடங்களிட்டுமல்லோ கட்டிவரிந்துகட்டி
கட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்

எனவருக்குமென்றார் இளப்பிறந்தபேர்களுக்கு
அப்போதருமரவர் அப்புரைகேட்டு
சாயம்புமன்னவனுர் தருமரங்கேதுசொல்வார்
பத்துமாதஞ்சுமந்து பாலகனையுண்டாக்கி
மூன்று வயதாள்சுமந்து முருகுகுழலாள்தன்னருகே
பெற்றெடுத்ததாயார்க்குப் பெரியசுமையேயொழிய
மற்றஞ்சுமையில்லை வையகத்துமாந்தருக்கு
இவ்வுபணங்கேட்டு பேதுசொல்வார்மாயவனுர்
இன்னமொருவார்த்தை இயம்புவேன்சொல்லுமென்றார்
வையகத்திலே வாடாப்பயிருசொல்லும்
என்றைக்கும்வாடாத இளம்பயிர்சொல்லுமென்றார்
ஆபரிவையுரைக்க அவ்வார்த்தைதான்கேட்டு
சாயம்புமன்னவனுர் தருமரங்கேதுசொல்வார்
வாடாதிருக்குங்காண் வளருமருகம்புல்
அந்தச்சொல்தானுரைத்தார் அங்கொனவேமாயவற்கு
இவ்வுபணங்கேட்டுமே எம்பெருமானென்னசொல்வார்
சந்தோஷமாச்சுது தாகந்தெளியுமென்றார்
உத்தரவுதந்தாரே உலகளந்தானெம்பெருமாள்
தங்கபுகழுடைய தருமரவர்கேட்டு
உண்ணுமென்று சொன்ன உத்தரவுதான்கேட்டு
சந்தோஷப்பட்டு சரீரங்கள்புரிக்க
தாகந்தெளிவதற்குத் தண்ணீர்குடித்தார்கள்
அள்ளிப்புசித்தார்கள் ஆவல்தெளிந்திடவே
தருமருந்திரௌபதையும் தாகந்தீர்ந்திட்டார்கள்
தாகந்தெளிந்தபின்பு தம்பிமாரண்டைவந்தார்

தருமர்வந்து தம்பிமார்களை எழுப்பநாலுபேரும்
இறந்துவிட்டாரென்றறிந்து புலம்புகிறது.

---

நாலுபேரண்டைவந்து நடுவேயிருந்துகொண்டு
சகாதேவன்படித்திருந்த தலைமாட்டிலெழுதியதோர்
வாசகத்தைப்படித்தாரே மன்னர்தருமரவர்
என்னவென்றெழுதியிருந்ததென்றால் வாசகத்தில்
நால்வருமாவே நச்சுப்பொய்கைநீர்த்தமுண்டு
விதிசேர்வையுண்டலவோ வேத்தர்படுத்துவிட்டோம்
மாண்டுமடிந்துவிட்டோம் மங்கைவந்தனன்றுவே.

ஜாதகந்தான்குன்றுதே தப்பிப்பிழையுமென்று
இவ்வண்ணமாகவே எழுதியிருக்குது
பார்த்துப்படித்துப் பார்த்தாரே தர்மரவர்
செத்துமடிந்தார்கள் சீரான தம்பியர்கள்
மாண்டுமடிந்தார்களென்று மன்னர்புலம்புகிறார்
என்னசொல்லிப்புலம்புகிறார் இருண்டவனந்தனிலே
மலைபோலருவதமே மாண்டுமடிந்திரோ
செம்மலைபோலருவதமே செத்துமடிந்திரோ
நிலைமலையே நிலத்தோடே சாய்ந்திரோ
கல்லானதூணுக்கு கலக்கமில்லையென்றிருந்தேன்
கல்லானதூணைக் கரையானரித்துதோ
இரும்பானதூணுக்கு என்னகுறையென்றிருந்தேன்
இரும்பானதூணுமே இற்றுவிழுந்துதோ
வச்சிரத்தூணுக்கு பயககமில்லையென்றிருந்தேன்
வச்சிரத்தூணவே மண்ணோடொருந்துதே
செம்பருந்துவந்தென்னைச் சிறகாலடித்துதே
குஞ்சைப்பரிகொடுத்த கோழிபோலானேனே
றெக்கைபறிகொடுத்த பேடைபோலானேனே
கைமறுந்த ஆனையைப்போல் கலங்கினேன் தம்பியரே
ஓடுறமாடுக்கு ஒருகாலொடித்தாற்போல்
உள்ளங்குலைந்து உருகினேன் தம்பியரே
என்னைத்தவிக்கவிட்டு எங்கேமறைந்தீர்கள்
ஐயையோ தெய்வமே அலையவிட்டுப்பார்த்தீர்களோ

தருமராஜர் வீமனைப்பார்த்துப்புலம்புகிறது.

---

தக்கபுகழுடைய தருமரெழுந்திருந்து
வீமனருகில்வந்து வேந்தர்புலம்புகிறார்
வெற்றிமதயானை வீமமதாரியே
கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்
தூளாக்கித்திரனார் நூற்றொருமன்னரையும்
கொல்லுகிறேனென்று நீ கொடியசபதமிட்டாய்
அவ்வார்த்தைதான்மறந்து அப்பா நீயெங்கொளித்தாய்
வச்சிரமுடியே நீ மண்ணோடே சாய்ந்தாயோ
தங்கமுடியே நீ தரையில்கவிழ்ந்தாயோ
தாயைமறந்தாயோ தமையனை நீமறந்து

## தருமராஜர் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து நகு லனைப்பார்த்துப் புலம்புகிறது.

---

இளைத்த தருமரையே கண்டந்த துரோபதையாள்
துள்ளியெழுந் திருந்து துரிதமுடனோடிவந்து
காட்டில்தழைபொடித்துக் கடுகெனவேயோடிவந்து
தருமருக்காகத் தையலரும்வந்துநின்று
பச்சைத்தழைபொடித்து பைங்கிளியாள் வீசுகிறாள்
காட்டுத்தழைபொடித்துக் கடுகெனவேவீசினளே
மற்றுமொருநாழி யுற்றபிறகாக
விசக்கினைதெளிந்து வேந்தரெழுந்திருந்து
மூர்ச்சையதுதெளிந்து மன்னின்றுபுலம்புகிறார்
அப்பாநகுலாவென் னறிவுள்ளகண்மணியே
மலைபோலருவதமே வாய்மலைபெருஞ்சரமே
நீமடியுங்காரியங்கள் நிண்ணயத்தைநானறியேன்
மாண்டுவிடுவாயென்று நான் மனதில் நினைத்ததில்லை
செத்துவிடுவாயென்று சற்றுமறியேனே
என்னைநீகைவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
நீங்கள்போவதறியாமல் பூசித்துநானிருந்தேன்
சாவதறியாமல் சந்தோஷமாயிருந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்களாச்சுதையா
கண்டமுகங்களெல்லாம் கடுத்தமுகமாகுதய்யா
கூடப்பிறந்தீர்களே கூட்டுப்பாலுண்டவர்களே
ஒக்கப்பிறந்தீர்களே ஒருதனப்பாலுண்டவர்களே
காட்டுக்குள்ளென்னைவிட்டு கைலாயம்போனீர்களோ
தங்கத்தரிக்கவில்லை தரையிற்கால்பாவவில்லை
நிற்கத்தரிக்கவில்லை நிலத்திற்கால்பாவவில்லை
உங்களைநான்பிரிந்து ஒருநாழிதங்குவனோ
கூடமடிவேன்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கமடிவேனே உங்களுடனாக
ஆவென்றுபிறண்டழுதார் அடித்துக்கொண்டார்தலையிலே
முட்டிக்கொண்டார்பூமியிலே மோதிக்கொண்டாரப்போது
மார்கொண்டகண்ணீரை வழித்தெறிந்தார்மண்மேலே

நான் ஐவருக்குங்கைகொடுத்து ஆர்பாலத்துக்காளானேன்
செல்வத்தலையிலே செப்பேடெழுதினதும்
அல்லற்படுத்துமாம் அமைக்காரேயிர்மதேவன்
ஆணைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோணைக்கழுத்தி குனைக்கழுத்தியானேனே
தங்கக்கழுத்தி தலைவிரிக்கநாளாச்சே
மல்லிகைச்சாலையிலே மயிர்விரிக்கநாளாச்சே
குங்குமச்சோலையிலே குழல்விரிக்கநாளாச்சே
ஐயையோதெய்வமே அநியாயஞ்செய்திர்களோ
பார்த்திருந்துமென்னைப் பாதவிக்கவிட்டீர்களோ
கண்டிருந்துமென்னை கலங்கலையவைத்தீர்களோ
தோள்சார்ந்தராசாக்கள் சோர்ந்துவிடக்காரியமேன்
மார்சார்ந்தராஜாக்கள் மடிந்துவிடக்காரியமேன்
காட்டில்மடிந்தலோ கையைவிட்டுநின்றீர்களோ
அடவியிலேதான்மடிந்து அலையவிட்டுப்போனீர்களோ
ஆரியரைசாட்சிவைத்துத் தெருவில்கைவிட்டீர்களோ
சந்திரரைச்சாட்சிவைத்து சாகத்துணிந்தீர்களோ
சத்தியிலேகைவிட்டு சமாத்தாய்ப்படுந்தீர்களோ
மஞ்சளிழந்தும் மணையிழந்தும்பூவிழந்தும்
தாலிச்சரடிழந்தும் தாரணியில்நிற்பேனோ
மஞ்சள்சரடிழந்தும் மண்மேலிருப்பேனோ
கூடமாடவென்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கவாடவென்காண் உத்தமரேஉங்களுடன்
நாடுவாடவென்காண் ராஜர்களேஉங்களுடன்
அலண்டுபுரண்டழுது அப்பிக்கொண்டாள்மார்மேலே
எங்கேபோவானாம் இடிக்குதாளென்றிருந்தேன்
தப்பாமல்யானைமல்லோ தலையிலிடித்ததே
என்றுபுலம்பியே இளங்கொடியாள்தானழுதாள்
கோவென்றசத்தம் குமுறிப்புலம்புகிறாள்
துக்கப்பூமுடையா தருமரவரேதுசொல்வார்
சாயம்பூமன்னவனோ தருமரவரேதுசொல்வார்
தோராவடிவழகி துரோபதையேகேளும்
வசநாபிதண்ணீருண்டு மாண்டாரோதம்பியர்கள்
நாழம்புசித்தோமே நல்லவிஷஜலத்தை
இரவாமல்தாழமிருப்பமோ தன்னகாரணங்கள்
மாண்டதொருதம்பியர்கள் மன்னவர்கள்தன்னுடனே

நகரிலிருக்காதே தர்மமாய்ப்போகுதையா
பூமியிலிருக்காதே புண்ணியமாய்ப்போகுதையா
கோடிசரணமையா கும்பிடுறேன்விட்டுவிடும்
ஆயிரஞ்சரணங்காண் அடிபணிந்தேன்விட்டுவிடும்
நூறாயிரஞ்சரணம் முடிசாய்த்தேன்விட்டுவிடும்
என்றுவருந்திறரே இயானகுமாரன்
எமனுங்ராமனும் இருவருந்தான்பார்த்து
பெருமாள்மனமிரங்கிப் பிரியமுற ஒரு
விமலைத்தாபுவிட்டார் வேந்தர்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமனெதிரோடிவந்து
வீமனையெடுத்தணைந்து மெய்க்குள்ளேதான்வளர்த்தி
விமாருகாக வேந்தருமிற்றிருந்தார்
தோராவடிவழகி துரோபதையாளோடிவந்து
ஒட்டச்சிபாதத்திலே உத்தமியாள்தானவிழுந்து
தாயேநீஒட்டச்சியுன் தருமமாய்ப்போகுதம்மா
என்னைமாலையிட்டமன்மதன்டி வலியாதேபூமியிலே
இந்த-வையகத்தையாண்ட வரை வலியாதேதாயாரே
பூமியையாண்டவர்கள் புரட்டாதேமாதாவே
அங்கம்பொறுக்கவில்லை ஆச்சிநீவலியாதே
ஆயிரத்தெண்டனம்மா அடிபணிந்தேனுந்தனுக்கு
நூறாயிரஞ்சரணம் முடிவணங்கிக்கொண்டனிட்டேன்
கோடிசரணமம்மா கும்பிட்டேன்விட்டுவிடும்
என்றுவருந்தினளே இளங்கொடியாள்துரோபதையும்
எமனும்பெருமாளும் இருவருந்தான்கேட்டு
பரிதாபந்தாளாமல் பார்த்தவிட்டார்கள்
தோராவடிவழகி துரோபதையுமோடிவந்து
இளங்கொடியாளர்ச்சுனரை எடுத்தவணைத்திடவே
ஒட்டனும்ஒட்டச்சியும் உத்தாரமென்னசொல்வார்
எடுத்துப்புதையுமென்று ஏகிநடந்தார்கள்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
இன்றெல்லாமிங்கிருந்து ஏங்கியழுதாலும்
நம்மாலேயாவது ராஜ்யமேபோன் மயிலே
மாயன்பெருமாளை மனதில் நினைத்தழுதால்
வருந்தியழுதாலே வருவார்நமதுபெருமாள்
மாயன்வந்தபிற்பாடு கவலைதீருமென்றுள்

தருமராஜர் தன்தம்பிமார் பிழைப்பதற்காக எம்
பெருமானை நினைத்துப் புலம்புகிறது.

சாயாம்புமன்னவருந் தருமரவரென்னசொல்வார்
ஆதிபரந்தாமனே ஆதிமூலம்வாருமென்றார்
எல்லோருந்தசாமி எம்பெருமாள்மேகவண்ணு
கல்லான அகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தாய்
மூலமென்றக்குஞ்சரத்தைக் காத்தமுகில்வண்ணு
ஆலிலைமேற்பள்ளிகொண்ட அரிராமாவாருமையா
மச்சவடிவுகொண்ட அச்சுதரேயிச்சகத்தில்
கூர்மவடிவுகொண்டு பாதாளம்போய்வந்தீர்
சிங்கமாயிரணியனைப் பங்கஞ்செய் தமர்புரிந்தீர்
ராமர்வடிவுகொண்டு ராவணனைச்சங்கரித்தீர்
அரக்குமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பலத்தில் துரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
மண்டலங்கள் தானறிய மானத்துகில்கொடுத்தீர்
பகையாளிவாசலிலே பட்சம்வைத்துக்காத்தீரே
எதிராளிமுன்னாலே எங்களைக்காத்தீரே
உன்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறியார்
நீரேதுணையல்லால் வேறுதுணையுமில்லை
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்களாகுது
கண்டமுகங்களெல்லாங் கடுத்தமுகமாகுது
ஏழையழுதகண்ணீர் கூரியவாள்தைக்கிலையோ
தானுமழுதகண்ணீர் ரம்பங்கொண்டறுக்கிலையோ
என்றுபுலம்புகிறார் இயலானதர்மராவர்
தருமருடனே தவிக்கிறாள் துரோபதையும்
கூடப்புலம்புகிறாள் கொம்பனையாள் துரோபதையும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமருந் துரோபதையும் வருந்துகிறதை எமனும்
பெருமானுங்கேட்டு சந்தோஷப்பட்டு இவர்க
ளிடத்துக்கு இருவரும் வருகிறது.

---

எமனும்மாயவரும் இருவருந்தான்கேட்டு
சந்தோஷப்பட்டாரே எம்பெருமானும்
எமனுடனேயே எம்பெருமானடியிலே

தொண்ணூறாம்பத்தஞ்சென்றதுவண்டகிழவனைப்போ
நூறுமாம்பத்தஞ்சென்ற நரைத்தகிழவனைப்போல் (ல்
தோலும் நரம்புகளுந் தொங்குங்கிழவனுக்கு
மூன்றுதடுக்காலே முப்பதிடம்விழுவார்
நாலுதடுத்தாலே நாற்பதிடம்விழுவார்
ஆறுகம்புல் தடுத்தாலே ஐம்பதிடம்விழுவார்
தள்ளாடித்தள்ளித் தடிக்கோலையூன்றிகொண்டு
பஞ்சாட்சரமோதி பாதைவழியாக
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாராரே
ஆகாரமென்றலவோ அந்தவழியாகவந்தார்
தருமாருகில்வந்து அருமைஜோகியேதுசொல்வார்
அத்திபுரத்துக்கு சுத்திபோரேனிதுவழியாய்
ஆரோஇவர்கள் அழுதுபுலம்பினர்கள்
ஏதுக்கழுதார்கள் என்றறியஓடிவந்தேன்
அழுகவபணமென்ன ஐயாவேசொல்லுமென்றார்
புலம்பியழுவதென்ன புதுமைகளைச்சொல்லுமென்றார்
அப்போதுதருமரவர் ஆணழகரேதுசொல்வார்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அப்போதெடுத்துரைத்தார்
மான்பிடிக்கவந்தவர்கள் வனத்திலே தம்பியர்கள்
வசநாபிதண்ணீருண்டு மாண்டாரே தம்பியர்கள்
விஷநீரைதான்புசித்து வேந்தர்மடிந்தார்கள்
செத்துமடிந்தார்கள் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
மாண்டுமடிந்தார்கள் வைகுந்தஞ்சேர்ந்தார்கள்
ஒப்பிட்டவாளை உறையுருவிவிட்டார்போல்
தப்பிபிழையாமல் சதிசெய்துமாண்டுவிட்டார்
என்றுசொல்லிதருமரவர் ஏங்கிப்புலம்பினர்
மாயவடிவெடுத்த மலைஜோகியேதுசொல்வார்
இறந்ததொருநாலுபேரும் என்னவேணுமுந்தனுக்கு
மாண்டதொருமன்னவர்கள் மன்னவருக்கென்னவேணு
உண்மையாய்சொல்லுமென்றே உத்தமரைகேட்கலுமே
தக்கபுகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இறந்தவர்நாலுபேரும் எந்தனுக்குத்தம்பியர்கள்
மயிலனையாள் துரோபதைக்கு மாலையிட்டமன்னவர்கள்
எங்களைத்தவிரவிட்டு இறந்துமடிந்தார்கள்
என்றுமவருரைத்து யேங்கிப்புலம்புகிறார்
மாயவடிவெடுத்த மலைஜோகியென்னசொல்வார்

இறந்தவர் நாலுபேரில் எவர்வேணுமெழுந்தனுக்கு
செத்தவரிலொருவரை நான் சீக்கிரமெழுப்பித்தாரேன்
எவர்வேணுமெழுந்தனுக்கு இப்போதேசொல்லுமென்றார்
ஆமானும்சொல்லிவிடும் அல்லவென்றால் நான்போறேன்
தக்கபுகழுடைய தருமரவர்கேட்டு
மலைஜோகிசொன்னதற்கு மன்னரெடுத்துரைப்பார்
ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
என் தாயார்குந்தியம்மாள் ஈன்றெடுத்தமூவர்களில்
இருவிறந்தார்கள் இருக்கிறேநானொருவன்
மறுதாயார்மைந்தர்களில் நகுலனையெழுப்புமென்றார்
தக்கபுகழுடைய தருமருரைக்கலுமே
மாயமாய்வந்ததொரு மலைஜோகிதான்கேட்டு
தருமர்நினைவறிந்து சந்தோஷப்பட்டாரே
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தேகங்குளிர்ந்து திருத்தோளும்பூரித்து
உண்ணுவல்பூரித்து உடம்பெல்லாம்பூட்டுவிட்டு
கரியமால்உளமகிழ்ந்து காலனையெச்சரித்து
நால்வருயிரையுமே நமனைரேவிட்டிடென்றார்

விஷநீர்குடித்து இறந்துபோன நாலுபேரும்
பெருமாளால் எழுந்திருந்தது.

---

எம்பெருமாள்தானுரைக்க யேமனவர்கேட்டு
அப்படியே நல்லதென்று அந்தஎமனும்
பிடித்தவுயிரைவிட்டுப் போதவெழுந்திரென்றார்
தூங்கிவிழித்தார்போல் பாங்காயெழுந்தார்கள்
துள்ளியெழுந்தாரே துரைகளந்தநாலுபேரும்
மாயன்பெருமாளை வணங்கியேகொண்டனிட்டார்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிகொண்டனிட்டார்
வந்துபணிந்தவரை கண்டுமனமகிழ்ந்து
வாழ்த்திஎடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
சந்தோஷமாகத் தானிருந்தார்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமரடிபணிந்து
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துகொண்டனிட்டார்
தக்கபுகழுடைய தருமரெடுத்தணைத்து
வாழ்விர்வளர்ந்திடுவிர் வாழ்ந்திருப்பீரென்னுடனே

## 5-வது. சயிந்தவமகாரிஷிவனம்.

---

ஐந்தாம்வருஷம் பிறந்ததுஐவருக்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
தாத்திபுளிகாணை தூர்பையுந்தா துவளை
இன்றுதிரிகிறார் தேசாந்திரிபோலே
சயிந்தவரிஷிவனத்தில் தாணடந்தார்பஞ்சவர்கள்
ஓரடுக்குபர்னசாலை உண்டுபண்ணாரைவர்களும்
மூன்றடுக்குபர்னசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஐந்தடுக்குபர்னசாலை ஆணழகருண்டுபண்ணார்
ஆறடுக்குபர்னசாலை ஐவர்களுமுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகஉண்டுபண்ணார்
பர்னசாலைமேலாகப் பஞ்சவர்கள்குடியிருந்தார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவ்வனத்திற்றானிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணார்
அனேகநாள்சென்றபின்பு ஆரணங்குதுரோபதையும்
அந்தவனஞ்சாரிவா ஆரணங்குதுரோபதையும்
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கையிலே
உச்சிதங்கள்பார்த்தே உலாவிவருகையிலே
ஆகாயந்தன்னளவாய் அங்கேயொருமரந்தான்
வளர்ந்துதழைத்து மரத்தில்பழுத்திருக்கும்
ஒண்டிப்பழந்தான் உயர்ந்தகிளைமேலிருக்கும்
சூரியகாந்தியைப்போல் கோணாது துரோபதைக்கு
மெத்தாசைப்பட்டாளே மெல்லியிளங்கொடியாள்
கண்டாசைப்பட்டாளாங் காண்டீபன்தேவியரும்
இந்தக்கனியை எவர்பறித்துதான்கொடுப்பார்
தருமருடன்சொன்னால் தலைவரிதைக்கேளாரே
மதவீமருக்குரைத்தால் வயிறாவுண்டிடுவார்
நகுலசகாதேவர் நம்மால்முடியாதென்பார்
அருச்சுனற்குத்தானுரைத்தால் அவராலேயாகுமிது
மற்றொருவர்தன்னாலே மாளாதுகனிபறிக்க
அருச்சுனனைமெள்ள அழைத்துவருவோமென்று
மெல்லநடந்தாளே வேல்பொருதுங்கண்ணாளும்
கொஞ்சிநடந்தாளே கொப்பேரிடையாளும்
அருச்சுனராசன்னை ஆணழகிவந்துநின்று



அர்ச்சுனன் துரோபதைக்காக எய்தபாக்கனி நிலத்திலிருந்து எடுக்கக்கூடாமையால் எம்பெருமாள் பஞ்சோதித்து கனியைமரத் தில். ஒட்டும்படிசெய்தது.

அருச்சுனரைக்கண்காட்டி அழைத்தாளேஇப்புறத்தில்
றாண்டபறித்தலவோ தார்வேந்தனோடிவந்தான்
தருமரறியாமல் தையலருமேதுசொல்வாள்
ஒருமனுவுளந்தனுக்கு உத்தாரந்தாருமென்றாள்
அந்தவுரைகேட்டு அருச்சுனருமேதுசொல்வார்
மனதில்நினைத்ததெல்லாம் மயிலணையேசேருமென்றார்
சிந்தையிலெண்ணமெல்லாம் சிராகச்சொல்லுமென்றார்
கேட்டமனுவுக்கு கிளிமொழியேதாரேனென்றான்
உரைத்தபடியுனக்கு தருவேன்காணுத்தமியே
அந்தமொழிகேட்டு ஆரணங்குதுரோபதையும்
கொஞ்சினவார்த்தையுடன் கோபாலன்தங்கைபரும்
முத்துநகையாளும் முருகுழலாளேதுசொல்வாள்
காணுதுகண்டேனையா கண்டாசைப்பட்டேனையா
பாராதுபார்த்தேனையா பார்த்தாசைமட்டேனையா
தங்கத்தைகாய்ச்சியே தரையில்கவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியிலேவிட்டதுபோல்
சூரியனைப்போலழகாய்த் தானிருக்கும்மாங்கனிகாண்
சந்திரனைப்போலழகாய்த் தானிருக்கும்மாங்கனிதான்
அந்தக்கனியுண்பதற்கு ஆசையாய்த்தோணுகுது
மாங்கனியையுண்பதற்கு மனதுமெத்ததோணுகுது
அந்தக்கனிபறித்து அருச்சுனரேதாருமென்றாள்
மாங்கனிதனைபறித்து மன்னவரேநீர்தாரும்
என்றுவணங்கினளே இளங்கொடியாள்பாஞ்சாலி
வணங்கியெழுந்திருந்து மன்னனுக்குயேதுசொல்வாள்
தனஞ்சயரேகனிபறித்துத் தாராமற்போனக்கால்
தண்ணீர்குடியேன்காண் தாகவிடாய்தீரேன்காண்
ஆறுமாதமானாலும் அன்னம்பொசியேனென்று
சொல்லிபிணங்கினளே துரோபதைபாஞ்சாலி
ஆணழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
கனிக்காநீபிணங்கலாகுமோகட்டழகி
இதற்காய்பிணங்குவரோ இட்சணமேதாரேனென்றான்
அந்தரமாயிருந்தாலும் அறுத்துநான்தாரேனென்றான்
எந்தமரத்திலே யிருக்குதுபெண்ணரசே
பழங்களிருக்கின்ற பாரவனமெங்கேயென்றான்
என்றுமவர்கேட்க இளங்கொடியாளப்போது

## அருச்சுனன் துரோபதைக்கு மாங்கனிபறித்துக் கொடுக்க வருகிறது

---

வாருமையாவென்றுசொல்லி வணங்கியெழுந்திருந்து
அழைத்துவருகிருள் அருச்சுனராஜாவை
கூட்டிவருகிருள் கொப்பெனவே அர்ச்சுனரை
கடந்தார்சிலதூரம் கனியிருக்குமவ்வனத்தே
வந்தாரிருவருமாய் மங்கைதுரோபதையும்
இதுதான்மரமென்று இளங்கொடியாள்காட்டலுற்ருள்
ஆணழகுமன்னன் அர்ச்சுனராஜதுரை
மரத்திலிருக்குமந்த மாங்கனியைத்தான்பார்த்து
ஆயிரம்போசனைதூரம் அந்தரமாயிருக்குது
இந்தக்கனிபறிக்க எவரால்முடியுமென்று
இத்தனைதூரத்தி லிருக்கின்றமாங்கனியை
எப்படிக்குநாம்பறித்து ஈந்திடலாம்துரோபதைக்கு
என்றுநினைத்து எழில்விஜயனப்பொழுது
வில்வளைத்துநாணிபூட்டி வில்லைக்குணத்தொனித்தார்
அம்புறுத்தூணியிலே அலகம்புதானெடுத்து
அர்த்தசந்திரபாணமதை அருச்சுனருமுச்சரித்தார்
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானக்கனிமேல்
மார்புரளவாங்கியல்லோ தோள்புரளவிட்டானே
வருகுதுஅஸ்திரந்தான் மாங்கனியைத்தள்ளுகுது
மரத்திற்பழத்தையல்லோ பாணமறுக்கையிலே
அந்தக்கனிவிழுமாம் அண்டரண்டந்தானதிர
அண்டங்களதிர்ந்துவிழ அவனிபாதாளம்விழ
பூமியதிர்ந்துவிழ பூலோகந்தத்தளிக்க
எல்லையதிர்ந்துவிழ எமலோகந்தத்தளிக்க
கெற்பங்கலங்குது கெந்தருவலோகமெல்லாம்
ஓங்கும்பெருங்கால்தான் ஒருபக்கமநீர்வாங்கும்
நட்சத்திரங்களெல்லாம் நாலுதிக்குந்தானதிர
பூமியதிரசேடன் புஜத்தோடேபுஜமதிர
ஆதிசேடன்தானும் அதிர்ந்துமேநஞ்சுகக்க
ஆகாசம்நின்றதிர அங்கேபோய்விழுந்தது
மரத்திலிருந்தகனி மண்மேல்விழுந்தது
அருச்சுனருந்துரோபதையும் அக்கனியைப்பார்த்தார்கள்

பாாமலைபோலே பருவதப்போற்றேணுகுது
இருவராலாகாது இத்தக்கனியெடுக்க
இந்தக்கனியைதா மெடுக்கமுடியாது
ஆறுமுகனவன் அருச்சுனனுமேதுசொல்வான்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
வெற்றிமதயானை வீமனை அழையுமென்றான்
அப்படியேநல்லதென்றாள் ஆனந்தவாழ்மாரி

துரோபதை வீமனை அழைக்க வீமன் வருகிறது

---

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
அன்னமதுபோலே ஆரணங்குவந்துமல்லோ
வெற்றிமதயானை வீமாருகில்வந்து
அருச்சுனராஜநும்மை அழைத்தோடிவாருமென்றார்
சீக்கிரம்வருகவென் றுதேன்மொழியும்தெண்டனிட்டாள்
வெற்றிமதயானை வீமனுந்தான்கேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தவாழ்மார்பன்
இருந்தஇடத்தைவிட்டு எழுந்துநடந்தானே
இருவருமாகவே யேகிநடந்துவந்து
கனியிருக்கும்வனத்தே கடுகியேகண்டார்கள்
தருமறியாமல் அழைத்துவந்தாள்தைபலரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்தான்
அசைக்கியேபார்த்தானே அசையவில்லை அக்கனிதான்
வெற்றிமதயானை மனவனேதுசொல்வான்
நகுலசகாதேவ ராஜாவை அழையுமென்றான்
ஆரணங்குதுரோபதையும் அப்படியேநல்லதென்று

துரோபதை நகுலசகாதேவர்களை அழைக்க
அவர்கள் வருகிறது

---

கொஞ்சியேவந்தாளே கொம்பேரிடையாளும்
நகுலசகாதேவ ராஜாக்கள்முன்னேவந்து
அருச்சுனரும்வீமரும் அழைக்கிறார்களுங்களைத்தான்
வாருங்களென்று சொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
நகுலசகாதேவ ராஜாக்கள்தான்கேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தமாயெழுந்தார்
மூவர்களுமொன்றாகி முடுகிவந்தார்கானகத்தே

மாங்கனிதானிருக்கும் வனத்தில்வந்துசேர்ந்தார்கள்
நகுலசகாதேவ ராஜர்களும்வந்தாரென்று
எல்லவருமொன்ருகி எடுபபோங்கனியைபயென்று
ஐந்துபேருங்கூடி அக்கனியைத்த னெடுத்தார்
என்னபலங்கொண்டு இழுத்துவலித்தாலும்
எந்தவிதத்திலேயும் எடுபடாலே அக்கனிதான்
சிந்தைகலங்கினர்கள் திடுக்கிட்டுமெய்மறந்தார்
மெத்தபயமாச்சே வேந்தர்கள் நால்வருக்கும்
தோராவடிவழகி துரோபதையைத்தான்பார்த்து
அழகானதருமருக்கு அறிக்கையிடும்பெண்ணேயென்ருர்
தோராவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு
ஆகட்டுமெனறுசொல்லி அப்படியேநல்லதென்று

மாங்கனியினுல் ஐந்துபேருந் திகில்பட்டுத் துரோபதை
தருமரை அழைக்க தருமர் வருகிறது.

---

துள்ளியெழுந்தாளே துரோபதைநாயகியும்
ஓடிநடந்தவோ ஒருநொடியில்வந்தாளே
தருமரெதிரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
வாள்விஜயனருக்குனரும் மாங்கனியைத்தானறுத்தார்
எடுத்தாலெடுபடலே யென்றுவரச்சொன்னர்காண்
வாருமையாவென்றுசொல்லிவருந்தியேதெண்டனிட்டாள்
தக்கபுகழுடைய தருமராதுகேட்டு
இதுவென்ன அதிசயங்க ளென்றேயெழுந்திருந்தார்
தருமருந்துரோபதையும் இருவரும்வந்தார்கள்
மாமரத்தருகேவந்தார் மகாராஜதருமரவர்
உற்றுற்றுப்பார்த்துமே யோசனைபண்ணுகிருர்
தம்பிமார்நால்வரையும் தருமரவரழைத்து
சாயாம்புமன்னவனு தருமரங்கேதுசொல்வார்
ஆருண்ணுமாங்கனிபோ அறியேனேதம்பியரே
எவருண்ணுமாங்கனியோ பேதுமறியேனே
எந்தெந்ததேவர்கள் எடுத்துப்புசிக்கிறதோ
சத்திரிஷியவர்கள் சந்யாசியுண்கிறதோ
பேதுவதெந்தருவர் சாலவந்துண்கிறதோ
கைமோசம்வந்ததென்று கடிகியேதருமாயர்

### மாங்கனியினால் மோசம்வந்ததென்று தருமர் எம்பெருமானை நினைத்துதோத்திரம் பண்ணுகிறது

திக்குபுகழுடைய தருமராவர்பயந்து
சித்தைகலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
உள்ளங்குலைந்துமல்லோ உடம்புவிடவிடத்து
மன்னர்மனஞ்சலித்து மனதிலேயெண்ணுகிறார்
ஆரைநினைக்கிறார் அளவற்றசிந்தையிலே
எவரைநினைக்கிறார் எண்ணமற்றசிந்தையிலே
மாயன்பெருமானை மனதில்நினைத்தாரே
அண்டமுலகளந்த ஆதிமூலமிங்கேவார
ஏழுலகமாண்டசுவாமி எம்பெருமாளிங்கேவார
மண்ணளந்துகணக்குசொன்ன மாயவரேயிங்கேவார
தாடகையைக்கொன்ற தயாளகுணமேயிங்கேவார
அகலிகைசாபந்தீர்த்த ஆண்டவரேவாருமையா
எல்லையளந்தவரே யெம்பெருமாளிங்கேவார
ஏழைவருந்துகிறேன் எழுந்தருளிவாருமையா
இப்படியாக யிவர்வருந்தும்வேளையிலே

### தருமர் இங்கே இப்படிவருந்துவதை எம்பெருமாள் அறிந்துதான் தருமரண்டை வருகிறது

பஞ்சவர்கள்வருந்துவதைப் பாரளந்தார்காமறிந்து
ஐவருக்குமிங்கேதான் அனர்த்தம்வருகுதென்று
சமிந்தவரிஷியாலே சாபம்வருகுதென்று
ஆயவரறிந்து அங்ஙனவே தானெழுந்து
ஐவரையுங்காக்கவென்று அப்பொழுதேவாராராம்
வட்டமாங்கருடனேறி மாயவனார்வாராரே
வனமாய்வனந்தாண்டி வாராரே தருமரண்டை
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
சில்லென்றகாடும் செடியுள்வனந்தாண்டி
சமிந்தவரிஷிவனத்தைத் தாண்டினார்மாயனாரும்
பஞ்சவர்கள்தானிருக்கும் பாரவனத்தில்வந்தார்
மாயவரைக்காணுகையில் வளப்பெரியதருமர்

ஞானப்பெருமாகவே அபாரமகொண்டுவிட்டார்
முக்கால்வலம்வந்து முடிவணங்கிக்கொண்டுவிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துக்கொண்டுவிட்டார்
கொண்டுவிட்டமன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
சிங்காதனங்கவிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டதோராசனத்தில் எம்பெருமான்வீற்றிருந்தார்
பஞ்சவரைத்தான்பார்த்து பாரளந்தாரேதுசொல்வார்
ஏதுவகையாக என்னையழைத்தீர்கள்
அழைத்தகொருகாரியத்தை அடவுடனேசொல்லுமென
உங்கள் மனதிலிருக்கிற மருமத்தைச்சொல்லுமென்றார்

## தருமர் மாங்கனியின் வரலாறு சொல்லுதல்.

---

மாயன்பெருமானும் வார்த்தைகள்சொல்லுமென்றார்
சாயாம்புயமன்னவனார் தருமனவரேதுசொல்வார்
ஆகாததம்பிமாராசருடன்பிறந்தேன்
பொல்லாததம்பியுடனல்லற்படப்பிறந்தேன்
எத்தன்விதிவசத்தை என்னவென்றுசொல்வேன்காண்
ஆருண்டமாங்கனியோ அறியேனேமாயவரே
எவருண்டமாங்கனியோ பேதமறியேனே
ஆகாததம்பியர்கள் அறுத்துவிட்டாரென்னசெய்வேன்
எம்பெருமான் தலைமையாய்த்தா னெல்லாந்தெரியுமென்று
உம்மைநினைத்தோமே உலகளந்தமாயவரே
வந்திரோமாயவரே வணங்கள்சொல்லுமென்றார்

## எம்பெருமான் மாங்கனியின் வரலாறுகேட்ட பஞ்சவர்களைப் பயங்காட்டி மனஞ் சோதிக்கிறது.

---

தருமருரைகேட்டு சாமியவரேதுசொல்வார்
மாயன்பெருமானும் வார்த்தையங்கேதுசொல்வார்
கைமோசம்வந்ததிதே கட்டமுகாமென்னசெய்வோம்
தபசிற்பெரியவர்காண் சபித்தவர்களியாரும்
வரத்திற்பெரியவர்காண் மகாதேவர்க்கொப்பிடலாம்
போகத்திற்பெரியவர்காண் உத்தமத்தபசியர்காண்
ஒருஞானவருடபட்டின் போகத்திலேயிருப்பார்
அவ்வருஷஞ்சென்றபின்பு அசத்தியெய்யர்மாங்கனியை

அறுக்கப்பொசித்திடுவீர் அந்தமகாமுனியும்
அந்தமகாரிஷியும் இந்தவனத்துக்கு
வருகிறநாளாச்சே மாங்கனியெடுத்தீரே
வந்தவர்பார்த்து மாங்கனியெங்கேயென்று
கோபித்துக்கண்சிவந்து கொல்லநினைப்பாரே
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்துவிடும்
கல்லாகமண்ணாகக் கடுகிச்சபிப்பாரே
புல்லாகமண்ணாக முனனேசபிப்பாரே
இன்றன்பிழைத்திருந்தேன் இறந்துவிடநாளாச்சே
சேனைதான்பிழைத்திருந்து செத்துவிடநாளாச்சே
துரியன்செய்தவஞ்சனைக்கு சீவன்தப்பிப்பிழைத்தீரே
பாபாவிசெய்ததற்கு மாளாமலிருந்தீர்கள்
இந்தவனத்திலே இறந்துவிடக்காலமோதான்
சயித்தவரிஷியாலே சாவுவரநாளாச்சே
இதற்கோவென்னைப்படைத்தீர் என்றுரேமாயவனார்
எம்பெருமாள் கனியின்வரலாறுசொல்லி தன்றாலே
ஒன்றும் ஆகாதென்றுசொல்ல தருமர்
புலம்புகிறது

---

இப்படியாகவேதான் செப்பத்திருமாலும்
இவ்வார்த்தைக்கேட்டாரே எழிலானதருமவர்
முகில்வண்ணார்முன்றாலே முறையிடத்தொடங்கினர்
ஆகாததம்பிமார் அசடருடன்பிறந்தேன்
பொல்லாததுஷ்டருடன் பிறந்ததொருதன்மையினால்
என்-அங்கங்குலையுதே ஆண்டவரேயென்னசெய்வேன்
என்னையறியாம லிக்கனியைத்தானறுத்தார்
அறிந்தேனேயாமானல் அறுக்கவொட்டேனிக்கனியை
பார்த்தேனேயாமானல் பறிக்கவொட்டேன்மாங்கனியை
அடியார்கள்செய்தபிழை ஆண்டவரேமனம்பொறுத்து
தெரியாதார்செய்தகுற்றம் தேவரீர்மனம்பொறுத்து
உன்-உள்ளங்கைநெல்லிப்பழம் உருகுலைந்துபோகாமல்
உன் பெட்டியின்பூஷணங்கள் பெருமைகுலையாமல்
உன் தோளின்செபமாலை தொண்டழிந்துபோகாமல்
உன்-கையில்செபமாலை கனங்குலைந்துபோகாமல்
காக்கக்கடனுனக்குக் கிருபமாயெம்பெருமாள்
ஆரைச்சதமென்பேன் அன்னிடைத்தஞ்சமென்பேன்

எவரைச் சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
என்றுதருமரங்கே நின்றபுலம்பக்கேட்டு
மாயன்பெருமாளும் மறுவார்த்தையேதுசொல்வார்
என்னைவருத்தாதே என்மேல் சலியாதே
உத்தமரேஉங்களாலே மெத்தப்பொழுதாச்சு
ஏகச்செலவருளும் என்றார்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமராவரேதுசொல்வார்
பரிதாபம்நாங்கள்படப் பார்த்துமேபோவதற்கு
மனமும்வருகிறதோ மாயவரேவுந்தனுக்கு
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்மாயவரும் (ன்
புகழ்வேந்தர்வார்த்தைக்குப் பொருந்தவேணுமிக்கனிதா
ஐவருடவார்த்தையினால் அம்மரத்திலொட்டவேணும்
அல்லாதேயாமானால் ஆராலுமுடியாது
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமரவர்
அடியேனாலாவதேது ஆண்டவரேசொல்லுமையா

எம்பெருமாள் ஐவருடைய எண்ணமும் துரோபதை
எண்ணமும் அறிந்து மாங்கனி மரத்தில்
பொருந்தினது

---

தருமருரைகேட்டு சாமிமனமகிழ்ந்து
மாயன்பெருமாளும் வார்த்தையேதுசொல்வார்
ஐவர்மனதறிய ஆண்டவரேதுசொல்வர்
தக்கபுகழ்பெரிய தருமரேநீர்கேளும்
உன் மனதிலேதானிருக்கும் மர்மத்தைசொன்னீரானால்
வஞ்சனைகளெண்ணாதே மனக்கவலைவையாதே
உண்டானபடியாக உரைத்திரேயாமாகில்
அற்றுவிழுந்தகனி அம்மரத்திலொட்டுமென்றார்
மண்மேல்விழுந்தகனி மரத்தின்மேலேறுமென்றார்
அல்லாதேயாமானால் அக்கனிபொருந்தாது
இல்லாதேயாமானால் இறந்துமடிவீர்கள்
சொல்லாதேபோனாலே சுருக்காய்மடிந்திடுவீர்
பெருமாளவர்சொலலப் பேர்பெரியதருமரவர்
மாயருரைகேட்டு மகாராஜரேதுசொல்வார்
மனதிலிருக்கின்ற மர்மத்தையேதுசொல்வார்
தன்மனதிலுள்ளபடி தார்வேந்தரேதுசொல்வார்

பெரியதந்தைபெற்றெடுத்த பிள்ளைதிரியோதிரன்
தம்பிமார்தன்னுடனே தானுஞ்சுகமானால்
ராச்சியதலமாகி தாழுஞ்சுகமானால்
சாகடக்கும்வாழ்ந்திருந்தால் கேடொன்றுமில்லையென்று
பெரியோருரைப்படிக்குப் பூமிசுமக்காதோ
என்றுதீவினையொழிய இனியொன்றுநானறிபேன்
இப்படிக்குத்தானுரைத்து இருந்தாரே தருமரவர்
அப்போதுமாங்கனியும் ஆகாசமேயெழும்பி
அழுத்துவிழுந்தகனி அந்தரத்திலெழும்புகுது
இருநூறுயோசனைகள் எழும்பியேநின்றதங்கே

மாயனுக்கு தருமர் மனுப்பாவஞ்சொல்ல மாங்கனி]
இருநூறுயோசனைதூரமெழும்பப் பெருமாள்
வீமனைக் கேட்கிறது.

---

எம்பெருமான்மாயவரும் யேதுசொல்வாரப்போது
மதவீமனையழைத்து மாயவனாரேதுசொல்வார்
உன்மனதிலுள்ளபடி யுரையுமென்றுமாயவரும்
வெற்றியுடையானை வீமனவனேதுசொல்வான்
திரோபதிராஜன் சேனைபரிகலங்கள்
குருடன்மகனொருங் குடிகெடுத்தராஜர்களை
நாலாக்கடுத்திரளார் நாற்றெருவராஜர்களை
தேளரவர்சேனைகளை கண்டதுண்டமாக்கியல்லோ
ஆனைகுதிரைகளை அழகுள்ளசேனைகளை
சமத்துரோகி சகுனியவனையுமே
கொன்றுஅத்தமாகி கொம்பனையாள் துரோபதையை
கொற்றகுழலியரைக் கூந்தல்முடிக்கவைப்பேன்
துகிலுரிந்ததொரு துர்ச்சாதனனுதிரமெல்லாம்
வாரிக்குடித்தாலே வயிறெறிவுதீருமையா
அளவிகுடித்தாலே அங்கந்தரிக்குமையா
பெரியஅண்ணருக்குப் பட்டந்தரித்தாலே
அப்போதுஎன்மனது ஆயாசந்தீருமையா
வெற்றிமகயானை வீமனுரைக்கையிலே
என்றபொழுதே எழும்புதுமாங்கனிதான்
காற்றுயதானாறு யோசனைதூரந்தணிடுமாம்

---

மாயனுக்கு வீமன் மனோபாவஞ்சொல்ல மாங்கனி
நானூறுயோசனை தூரம்எழும்பப் பெருமாள்
அருச்சுனனைக் கேட்கிறது.

---

அப்போதுஎம்பெருமாள் அங்கனவேயேதுசெய்தார்
அருக்சுனரைப்பார்த்து ஆனழகர்கேட்கலுற்றார்
வாள்விஜயாஉந்தனுட மனதில்நினைத்ததெல்லாம்
ஒன்றுமொளியாமல் உரையுமென்றார்மாயவனார்
என்றுமவருரைக்க எழில்விஜயனர்ச்சுனனும்
மாயருரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
கர்னன்சகுனியும் காங்கேயரானவரை
கொல்லுகிறேனென்றுசொல்லிக் கொடியசபதமிட்டேன்
சங்கமரைக்கொல்லுகையில் சமர்பூமிக்ஷேத்திரத்தில்
அமரதர்சமரதர் அளவற்றராணுவங்கள்
அனைவரையுங்கொன்றுமே அண்ணருக்குப்பட்டங்கட்டி
அண்ணருக்குப்பட்டங்கட்டி அடிபணிந்துநிற்கவென்று
எண்ணியிருக்கிறேன் இனியொன்றுமில்லையென்றான்
அறுநூறுயோசனை தூரம் நின்றது அக்கனிதான்

மாயனுக்கு அர்ச்சுனன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி அறுநூறுயோசனை தூரம்எழும்ப
பெருமாள் நகுலனைக்கேட்கிறது

அப்போதுஎம்பெருமாள் அங்கெனவேயேதுசெய்தார்
நகுலனைத்தானழைத்து நாரணருமேதுசொல்வார்
நாமமுடியானே நகுலனேயென்றழைத்து
மனதில்நினைத்ததொரு மர்மத்தைச்சொல்லுமென்றார்
மாயருரைகேட்டு மன்னவனுமப்பொழுது
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
திரியோதினன்படைகள் சேனைகளைக்கொன்றழித்து
ஆனைசேனைபரிவாரம் அடங்கலுங்கொன்றழித்து
மாரளவுரத்தங்களை வழியவிட்டுமண்மேலே
அதமாக்கிசேனைகளை அண்ணருக்குப்பட்டங்கட்டி
என் கண்ணாலேபார்ப்பதற்கு கருத்தில்நினைத்தேனையா
என்றுமவனுரைத்து இருந்தான்நகுலனுமே
அந்தவுரைகேட்டு அழகான்மாங்கனியும்
அந்தரத்தில் நின்றகனி அப்புரத்தில்போகுது
எண்ணூறுயோசனையில் நின்றது அக்கனிதான்

எம்பெருமாளுக்கு நகுலன்மனோபாவஞ்சொல்ல மாங்
கனி என்ணூறுயோசனை தூரமெழும்பப்
பெருமாள் சகாதேவனைக் கேட்டது

---

எம்பெருமாள்மாயவரு மேதுசெய்தாரப்போது
சகாதேவராசாவை சாமிபார்கேட்கலுற்றார்
இளையசகாதேவா எண்ணமெல்லாஞ்சொல்லுமென்றார்
தாமமுடியழகன் சகாதேவனேதுசொல்வான்
திரிபோதிரன்படை யை சேனைபரிதளத்தை
உன்பாதம்சிரசில்வைத்து உக்கிரமாய்ச்சண்டைசெய்து
அண்ணனுக்குப்பட்டங்கட்டி அவனிதனையாளவென்று
எண்ணியிருக்கிறேனே இதுவே நினைவொழிய
மற்றொன்றுமில்லையென்று மாயர்பதம்பணிந்தான்
இவ்வாறுதானுரைத்து இருந்தான்சகாதேவன்
அப்போதுமாங்கனியும் அனேகதூரமெழும்பி
தொளாயிரம்யோசனை தூரம்நின்றதக்கனிதான்

எம்பெருமாளுக்கு சகாதேவன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி தொளாயிரம் யோசனை தூரத்தில் நிற்க
எம்பெருமாள் துரோபதையைக் கேட்கிறது

---

ஆதிநாராயணரும் அங்கெனவேயேதுசெய்தார்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணேபத்தினியே துரோபதையே
நெருப்பிற்பிறந்தவளே நீலப்பசுங்கிளியே
ஐவருக்குந்தேவியரே அழியாதபத்தினியே (ர்
மனதில் நினைத்ததெல்லாம் மங்கையரேசொல்லுமென்று
நெஞ்சில் நினைத்ததெல்லாம் நேராகசொல்லுமென்றார்
அப்போதுதுரோபதையும் ஆரணங்குமேதுசொல்வாள்
தூரத்திலம்புலியாள் தூசிபடாப்பத்தினியாள்
வானத்திலம்புலியாள் மாசுபடாபத்தினியாள்
என்னமென்றுசொல்லலுற்றாள் பேலப்பசுங்கிளியாள்
திரியோதிரன்பாளையத்தைசெருக்களங்கள்கொன்றழித்து
ஐவர்களிட்டதொரு அருஞ்சபதஞ்சென்றபின்பு
வெற்றிமதயானை வீமருடகையாலே
பாம்புக்கொடிவேந்தன் பட்டபிறகாக

தென்னமுடிவேந்தன் திரியோதனன்பட்டபின்பு
நாகக்கொடியோனு நாசமடைந்தாலே
அவன்மல்லாக்காய்விழுந்தவுடன்மார்பிலேதானிருந்து
மார்பைப்பலகையாக்கி மார்பெலும்பைசீப்பாக்கி
மார்பில்வருமுதிரமெல்லாம் வாரிக்கலைதடவி
நல்லெண்ணெயைப்போல நலங்கிட்டிக்கூந்தலுக்கு
சிப்புசிக்கங்கோலெடுத்து சிவிமயிராற்றி
அவன்குடலைப்பிடுங்கிப்பல்லே கொண்டைக்கயிறுகட்டி
ஈரலின்பிச்செடுத்து பிறக்கிக்கலைமயிர்முடிப்பேன்
என்விரித்தலைமுடிக்க மெத்தநாள்சென்றிடுமோ
அவிழ்ந்ததலைமுடிக்க அனேகநாள்சென்றிடுமோ
கூந்தல்முடிப்பேனே குறையெல்லாந்தீர்வேனே
சாமிதயவாலே தலைமுடிப்பேனே
என்றுநினைத்திருந்தேன் இனியொன்றுநானறியேன்
இந்தவிதஞ்சொல்லி இருந்தாளேபாஞ்சாலி

துரோபதை மனோபாவஞ்சொன்னது சரியல்லாமல்
தொளாயிரம்யோசனை தூரம்போன மாங்கனி
பூமியில்விழ பெருமாள் துரோபதையை
கேட்கத் துரோபதை சொல்லல்.

---

துரோபதைசொல்லலுமே தூரிருந்தகனி
அந்தரத்தில்நின்றகனி அவனியதில்விழுந்தது
ஆகாசம்போனகனி அற்றுவிழுந்தது
கண்டார்சரியமாலுங் கடுகெனவேயேதுசொல்வார்
மனதில்கபடுவைத்து வஞ்சனைகள்சொன்னதினால்
அந்தரத்தில்நின்றகனி அவனியிலேவிழுந்ததென்றார்
ஏதேதொளித்தாயோ எந்தனுக்குச்சொல்லுமென்றார்
ஒன்றுமொளியாமல் உத்தமியேசொல்லுமென்றார்

துரோபதைமறுபடியும் பெருமாளுக்குஉண்மையைச்
சொல்ல மாங்கனி மரத்தில்
பொருந்தினது.

---

அப்போது துரோபதையும் ஆரணர்க்குஏதுசொல்வாள்
அண்ணாவே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
இன்னமொருபாவம் இனியொன்றுநானறியேன்

மற்றுமொருபாவம் வஞ்சனைகளொன்றறியேன்
மற்றொருவஞ்சனைகள் இடறுகள் தானறியேன்
அண்ணன்மாரே அடியேனொருவார்த்தை
பார்த்தனமாலையிடப் பாஞ்சாலனென்னைப்பெற்றான்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைகாற்றுறைப்புமுண்டு
காலவிஷமுண்டவர்க்கு கண்டங்கறுப்புமுண்டு
நீர்ச்சுழலுமுண்டு நிலமதனிற்பூச்சியுண்டு
தண்ணீர்க்கலையுமுண்டு சந்திரற்குமாசுமுண்டு
சந்திரற்குமாசுமுண்டு சற்றேகறுப்புமில்லை
குன்றிமணிக்கானாலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
எனக்குடைமையேகறுப்பொழிய மற்றகறுப்புமில்லை
பொட்டேகறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
அக்கினியிற்பெண்பிறந்தேன் ஐவரையுமாலையிட
நெருப்பிலேபெண்பிறந்தேன் அருச்சுனனைமாலையிட
என்கூடப்பிறந்தது கோதண்டமனவில்லு
பத்தரையில்நான்வளர்ந்தேன் பார்த்தரேமென்று
அடுக்களையில்நான்வளர்ந்தேனர்ச்சுனரைமேவனுமென
வளர்த்துசமைந்தேனே மாலையிடும்நாளானேன் (று
போதவளர்ந்தேனே பிள்ளைபெறும்நாளாச்சு
இப்படியாக இருக்கின்றவேளையிலே
எழிலான அர்ச்சுனற்கு என்னைக்கொடுக்கவென்று
என்தகப்பன்பாஞ்சாலன் எண்ணியிருக்கையிலே
அரக்குமாமாளிகையில் ஐவர்மடிந்தாரென்று
மாண்டார்களென்றுசொல்லி மண்டலத்திற்பேராச்சு
செத்தார்களென்றுசொல்லி ஜெகமெல்லாம்பேராச்சு
அப்போதுஎனதகப்பன் ஆயாசப்பட்டிருந்து
அர்ச்சுனற்கென்றபெண்ணை ஆர்க்குக்கொடுப்பேனென
அருச்சுனரைப்போலாக ஆண்பிள்ளையில்லையென்று
வில்லைவளைப்பார்கள் மேதினியிலில்லையென்று
வலப்பசுங்கிளியை எப்படிக்காப்பேனென்று
ஈன்றதுமெண்ணியே இந்தவிசாரமிட்டார்
இப்படியாக இருக்கின்றகாலத்திலே
வந்தாரே அந்தவேளை மாவியாசபகவானும்

என்தகப்பன்பாஞ்சாலன் எழுந்திருந்தோடிவந்து
கண்டவுடனேயல்லோ கூடியெழுந்திருந்து
வந்தவியாசரை வணங்கியேகொண்டணிட்டு
துரிதமுடனேதான் தோத்திரங்கள்தான்செய்து
இருமிருமென்றுசொல்லி யிட்டார்சிம்மாதனங்கள்
இட்ட சிம்மாதனத்தில் ஏறியவர்வீற்றிருந்து
என்தகப்பனைப்பார்த்து என்னவென்றார் உன்க்ஷேமம்
அப்போதுஎன்தகப்பன் ஆயாசமாயுரைப்பார்
எந்தன்விசேஷமெல்லாம் எடுத்து அவர்க்குரைத்து
அருச்சுனற்கென்றுநான் அனலிற்பிறந்ததுவும்
அரக்குமாமாளிகையி லவரிறந்ததுவும்
இக்கதையுஞ்சொல்லி இருந்தாரேஎன்தகப்பன்
அப்போவியாசரும் அரசனுடவார்த்தையெல்லாம்
செவிகொடுத்துக்கேட்டுமல்லோ சீக்கிரமாயேதுசொல்
உத்தமிபாள்தன்னுடனே ஒன்றாய்ப்பிறந்தவில்லு (வார்
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லு
எடுத்துநிறுத்துமென்றார் எல்லவருந்தானறிய
பெருவில்லைவளைத்தவர்க்குப்பெண்ணைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்தானறிய
அரசர்கள்தானறிய அறையும்பறையோசை
அப்போதறிந்திடலாம் ஐவருடசேதி
என்றுமவருரைத்து விடைநடந்தாரே
அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்து
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லை
வந்துவளைத்தவர்க்கு மாலையிட்டுத்தாரேனென்று
வில்லைவளைத்தவர்க்கு மெல்லியைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்து அரசருக்குமோலைதந்தார்
பெண்ணைத்தருவேனென்றடித்தார்கள்சின்னத்தொனி
சின்னத்தொனியையல்லோ தேசமெல்லாமூதிவைத்
பாஞ்சாலன்சினையெல்லாம் பந்தலலங்கரித்தார் [தார்
எங்குமலங்கரித்தார் இராசாக்கள்வந்திருக்க
பாஞ்சாலன்சொன்னதொரு பரிவானவார்த்தையினால்
ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்வந்திருக்க
நாலுபுரத்திலுள்ள ராஜரெல்லாம்வந்தார்கள்
முகத்துமுழு [illegible]
பச்சைப்புர [illegible]

வச்சிரமுடிதரித்த மண்டலத்துராஜர்களும்
காசிநாடாண்டதொரு கர்ணமகாவீரரும்
நாலுதிக்கிலுண்டான ராஜரெல்லாம்வந்தார்கள்
அப்பெரியபந்தலிலே அருச்சுனரும்நிருபமாய்
அன்றொருபார்ப்பானாய் அங்குநீங்கள்வந்தீர்களே
பாஞ்சாலன்தானறியான் பாரளந்தானவனை
ஆருமறியாமல் அவரெடுத்தமார்க்கமெல்லாம்
உங்கள்வடிவுதன்னை ஒருவரறியார்கள்
அந்தசபையத்தில் அடைவுடனேஎன்தகப்பன்
வந்திருந்தராஜர்களை வளையுமென்றார்வில்லதுவை
எப்பெரியராசர்களும் இவ்வில்வளைக்கறியார்
காண்டீபந்தனையெடுப்பார் கலங்கிடவேவைத்திடுவார்
ஆராலுமுடியாது அப்பெரியவில்வளைக்க
காசிநாடாண்ட கருணனெழுந்திருந்து
வில்லைவளைத்துமல்லோ வில்நாரிபூட்டுகையில்
என்னுதமெண்ணினேன் இவனேபுருஷனென்று
வடிவுசிலையுடையான் மாலையிடவேணுமென்று
எண்ணினேனென்மனதில் இனியொன்றும்தானறியேன்
வில்லைவளைக்காமல்கர்ணன் வில்தெறித்துபோய்விழுந்தா
ன், அன்றொருபார்ப்பானாய் அருச்சுனர்வில்வளைத்தார்
நீபார்த்துமிரண்டதார் நித்திலங்குப்பூமுடியார்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைபோடுமென்றார்
குஷ்டரோகியானவர்க்குக் குடித்தனஞ்செய்வேனோ
என்றல்லோமாலைதன்னை எடுத்தேசுழற்றிவிட்டேன்
கர்ணன்கழுத்திலே கைமாலைவிழாமல்
பார்ப்பான்கழுத்திலே பணியாலைவிழுந்தது
அப்பாவஞ்செய்ததல்லால் ஆபரேவேறொன்றில்லை
அருச்சுனற்குமாலையிட்டு ஐவருக்குந்தேவியானேன்
பார்த்தருக்குமாலையிட்டு பஞ்சவர்க்குத்தேவியானேன்
மற்றொருபாவங்கள் மாயவரேசெய்தறியேன்

எம்பெருமானுக்குத் துரோபதை தன்கலியாணச்
சங்கதி சரியாய்ச்சொல்ல மாங்கனிமரத்திற்
பொருந்தியது.

---

தோராவடிவழகி துரோபதையாள்சொல்லுகையில்
அன்றுபொழுதிலே எழும்புதுமாங்கனிதான்

மொட்டெனவேதானெழும்பிப் பொருந்துதேமாங்கனியு
ங்குமர்மனங்குளிர்ந்து சந்தோஷமானார (ம
பஞ்சவர்களைந்துபேரும் பார்த்துமகிழ்ந்தார்கள்

எம்பெருமாள் பஞ்சவற்குப் புத்திசொல்லி தான்
அவர்கையில் செலவுபெற்று துவாரகைக்
குப்போகிறது.

---

ஞானர்மகிழ்ந்தபின்பு அரிராமரேதுசொல்வார்
பஞ்சவரைத்தானழைத்துப் பாரவேந்தரேதுசொல்வார்
இந்தவனந்தனிலே இருந்துசிலகாலம்
மற்றோர்வனந்தனிலே வனவாசஞ்செய்திடுங்கள்
என்னவினைவந்தாலும் என்னைநினையுமென்றார்
பத்திரமாக யிருங்களென்றார்பஞ்சவரை
போகச்செலவுதாருமென்றெழுந்தார்புண்ணியரும்
பஞ்சவர்களைவரும் பாஞ்சாலிதுரோபதையும்
ஐவருந்துரோபதையும் ஆண்டவனைதெண்டனிட்டு
போய்வாருமெனறுசொன்னார் புகழ்வேந்தரைவர்களும்
விடைபெற்றெழுந்தாரே வேந்தர்பெருமாளும்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுசெடிதாண்டி கரிபமலைதான்தாண்டி
ஆறுகளைதாண்டி அதிவனந்தான்தாண்டி
இன்னென்றநாடுஞ்செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரியைநாடி அரிசமுடன்வந்துவிட்டார்
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போனபின்பு
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலனையாள்துரோபதையு
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணார் (ம்
இப்படியாக யிருக்கிறார்பஞ்சவர்கள்

ஐந்தாவது சயிந்தவமகாரிஷிவனம்

முற்றிற்று.

---

## 6-வது காமதேனு பர்வதம்.

ஆறாம்வருஷம் பிறந்ததுஐவருக்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
கூடை தலைமேலே குடிமொழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடை தலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போனார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடுகியேதானடந்தார்
காமதேனுவனந்தனிலே கடுகவந்துசேர்ந்தார்கள்
ஐந்தடுக்குப்பர்ணசாலை அழகாகவுண்டுபண்ணூர்
ஏழடுக்குப்பர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணூர்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
அனேகநெடுநாளாய் அவ்வனத்திலேயிருந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே

### துரியோதிரன் ஆலோசனை.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்தானும்
வணங்காமுடிவேந்தன் மாபாவியென்னசெய்தான்
சபைகள் நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
காலமகாரிஷியாரைக் கருதித்தபசுபண்ணி
ஐவரையுங்கொல்லுமென்று அனுப்பவனந்தனிலே
சொல்லுகிறேனென்றுசொல்லிகொப்பெனவேபோனாரே
ஐவர்-செத்ததுவும்பிழைத்ததுவும் சேதிதெரியவில்லை
ஆரடா தூதுவரே ஆயிரப்பேர்வாருமென்றான்
அப்படியேதூதுவர்கள் அனைவோரும்வந்தார்கள்
திரியோதிரனைவந்து தெண்டனிட்டுயேதுசொல்வார்
எங்களையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்
அப்போதிரியோதிரன் அவர்களுக்குயேதுசொல்வான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள ஆரணியம்போனாரே
எந்தவனத்திலே இருக்கிறாரென்றறிவேன்
ஐவருமைக்காணவே ஆராய்ந்துபார்த்துவாருங்கள்
என்றுமேசொன்னனே எரிநாகங்கொண்டவனும்

### துரியோதிரன் தூதர்கள் பஞ்சவரைக்காணவருகிறது.

---

மாநாகன்சொன்னதெல்லாம் மல்லர்கள்தான்கேட்டு
வெகுபேர்கள் தூதுவர்கள் மகாராசன்சொற்படிக்கு

கண்டுபோந்துவந்தோம் காவலர்களையும்
என்றுமொழிந்தார்கள் ஏகிவந்த தூதுவர்கள்
தூதுவர்கள்சொன்னதெல்லாம் துரியோதிரன்கேட்டு
துன்னிமனங்கொதித்து சொல்வானொருவார்த்தை

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குப்போகச் சகுனியுடன் ஆலோசனை பண்ணுகிறது.

என்றவுரைகேட்டு எரிநாகங்கொண்டவனும்
உரைகள் நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போய் ஐந்தாறுவருஷமுண்டு
வில்வித்தை ஆண்மைகளை மெத்தமறந்திருப்பார்
ஆனைகளுஞ்சேனையும் அண்டமொன்றுடையுமில்லை
அக்குரோணிசேனைகூட்டி ஐவர்மேல் படையெடுத்தால்
ஐவரைக்கொன்றிடலாம் அதம்பண்ணிப்போட்டிடலாம்
இதுவேசமயங்காண் இராசரைக்கொல்லுகைக்கு
அம்மான்சகுனியே ஆலோசனைசொல்லுமென்றான்

சகுனி துரியோதிரனைப் பஞ்சவர்களுடன் சண்டைக்குப் போகச் சொல்லுகிறது.

அப்போசகுனியும் அங்கேயெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லியவன் குடிக்குச்சகுனியம்மான்
இதுசமயமிதுசமயம் இராசரைக்கெடுக்கவென்று
மருமகனுக்காக வார்த்தைகளேதுசொல்வான்
மெய்வார்த்தைசொன்னீர்காண் விஷநாகங்கொண்டவரே
ஐவர்பிழைத்துஇனி ஆரணியம்விட்டுவந்தால்
தப்பிப்பிழைத்துவந்தால் தம்மர்பஞ்சபாண்டவர்கள்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுகேட்பாரே
இப்போபடையெடுத்து இராசரைக்கொன்றிடலாம்
நல்லசமயங்காண் நமக்குக்கிடைத்ததென்ன
தென்னமூர்வேந்தன் துரியோதிரப்பெருமாள்
மாமனுரைகேட்டு மகாராசரேதுரைப்பார்

துரியோதிரன் சண்டைக்குப்போகச் சேனைகளைத் திட்டப்படுத்துகிறது

———

ஆர்காணும்ராசர்களே அங்கிருக்கும்மந்திரிகளே
[illegible]

பலபலராஜுவமும் பத்துலட்சம்சேவகரும்
நாலானசேனைகளும் நடப்பார்கள்காதிபரும்
அத்தண்டசேனைகளும் அடக்கவும்பயணமென்றார்

## திரியோதிரன் பஞ்சவர்களுடன் சண்டை பண்ண வருகிறது.

---

அப்போதிரியோதிரன் அவனுடையசேனைகளும்
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றான்
இன்றுவெளிகூடாரம் இப்பவுடனேபோடுமென்றார்
நாட்டுமென்றார்சண்டாளை நகாளையடியுமென்றார்
அங்கேநட்டான்சண்டாளை யடியுமென்றார்பேரிகையை
அடிபடுத்தாயபேரி அண்டங்கிடுகிடென்ன
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகாடிபடுத்து
ரெணங்கள்ரெணங்களென்று ரெணபேரியபடுத்து
ஆனையின்மேல்பேரிகையும் அசுவத்தின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஒருகோடிமுரசுகளும்
தாளமொடுமத்தளமும் கவில்முரசுவீராணம்
பதினெட்டுவாத்தியமும் பலதிசையுங்கான்முழங்க
அண்டபிண்டந்தானதிர அடிபடுத்துமேளவகை
மூங்காததூரமட்டும் முரசுமுழங்கிவர
நாற்காததூரமட்டும் நாகசின்னமூதிவர
ஐங்காததூரமட்டும் அடிபடுத்துபேரிகையும்
ஆனையின்மேல்நகபத்து குதிரையின்மேல்டங்காவும்
கானலுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
வெப்பலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
மழைகளுக்கெடுத்தார்கள் வர்னவெள்ளைகூடாரம்
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
காற்றுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
குதிரையொருகோடி சொக்கரித்துவருகுதங்கே
யானையுஞ்சேனைகளும் அண்டவொண்ணாராஜுவமும்
அமரதருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
வேதியருமாதியரும் வில்வேந்தராசர்களும்
தொழுவார்பலேயாளர் சோனகநுட்டொபாளரும்

பட்டாக்ஷத்துரியும் பாரியவில்சமுதாடு
நேரிசாறம்பெரியகத்தி நிகரானபாங்குகளும்
அதிருமிசுப்புலக்கை ஆயுதவரிசையுடன
ஈட்டிகத்திவேலாயுதம் எடுத்தார்கள்சூலாயுதம்
அத்தன்டாணுவமும் அல்லவரும்பயணமென்றுர்
துரோணரும் அசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகர்னனுமே
சாமதுரோகி சகுனியவன்கூட
மாயாசகுனியும் மைத்துனன்தேத்தரசன்
தங்கைமணவாளன் தருதலைப்பொட்டிமகன்
அக்காள்மணவாளன் அறுதலியாள்பெற்றபிள்ளை
காந்தாரிபிள்ளைகளும் கவுரவர்சேனைகளும்
குருடன்பெற்றபிள்ளைகளும் கோடியரசர்களும்
ஐவரைக்கொல்லவென்று அநேகம்பேர்பயணமானுர்
செந்தூளெழும்புகுது தெய்வலோகங்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
கொடிகள்பறக்குது குவலயமெட்டுகுது
முடிகள்நிருகுது மூன்றுலோகந்தத்தளிக்க
அச்சுகிறுகிறென்ன ஆனைநெடுந்தேரசைய
வண்டில்கிரிச்சிகளும் மதயானைகோஷ்டமிட
குதிரைக்கனைத்துவிழக் கோடிமன்னர்சத்தமிட
சத்தையிரச்சலது சமுத்திரக்கோஷ்டமுடன்
செல்லும்ஜனங்கள்தொகை சொல்லமுடியாது
வாரஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
பஞ்சவரைக்கொல்லவென்று பாதகனும்வாரானே
ஐவரைக்கொல்லவென்று அரும்பாவிவாரானே
அஸ்திநபுரந்தாண்டி அப்புறம்வருகையிலே

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குவருகிற
போது துரோணரைச் சாஸ்திரம்பார்க்கச்
சொன்னது.

---

தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பாவி
துரோணரைத்தானழைத்துச சொல்வான்திரியோதிரன்
பஞ்சவரைக்கொல்லவென்று பாரவனப்போறேருமே
வாருந்துரோணரே வழிநிமித்தம்பாருமென்றுன்

ஐவரைக்கொல்லவென்று ஆரணியம்போரேமே
என்னசகுனங்கள் இனிநிமித்தங்காணுகுது
சகுனத்தைப்பாருமென்ருன் தாமமுடியானும்

துரியன்சொற்படி துரோணர் சகுனம்பார்க்கிறது.

---

தென்னமுடிவேந்தன் துரியோதிரன்சொற்படியே
அரசனுரைப்படிக்கு ஆசாரியானவரும்
தாமமுடியானுக்குச் சகுனங்கள்பார்க்கையிலே
எண்ணசகுனங்கள் எதிராகக்காணுகுது
பொல்லாச்சகுனங்கள் பொருந்துதுமன்னனுக்கு
வாயசமிடமாச்சு வலியன்வலமாச்சு
நரையானிடமாச்சு நரிகள்குருக்காச்சு
பாம்புகுறுக்காச்சு பார்ப்பானெதிரானன்
சாரைகுறுக்காச்சு சந்திரர்மேல்பல்லிசொல்லும்
வேடரெதிர்வருவார் வில்லியரெதிரானர்
வெட்டிப்பிடியுமென்று வேடரெதிர்வாரார்கள்
குத்திப்பிடியுமென்று கோட்டானுமோலமிடும்
பட்டப்பகலிலே பகலாந்தைசீறுகுது
தெருப்பெடுத்துகூன்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்

துரோணாசாரியர் திரியோதிரனுக்குச் சகுனங்கள்
நல்லதல்லவென்றுசொல்ல துரியன் அவர்
சொல்லை தடுத்துவருகிறது.

---

துரியோதிரனுக்குத் துரோணாவருரைப்பார்
அப்பாதிரியோதிரா அரசர்சிகாமணியே
எந்தனுடவார்த்தைதன்னை யிராஜாவே நீர்கேளும்
ஆகாதசகுனங்கள் ஆகுதேயிப்பொழுது
பொல்லாச்சகுனங்கள் பொருநதுதேயென்னசெய்வோம்
இன்றொருநாள்போக்கி இனிபொருநாள் நாம்வரலாம்
சண்டைகருப்போகவேண்டாம் வாருமென்றழைக்கையி
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன் (லே
அவ்வார்த்தைதான்கேட்டு அரசுமன்னனேதுசொல்வா
சகுனத்தால்பழுதுமுண்டோ சதிரானராஜர்களே (ன்
பொல்லாச்சகுனமென்று போகாமல்நிற்பார்களோ
ஐவருமல்லாமல் அடப்பக்காரப்பையனில்லை

பஞ்சவருமல்லாமல் பாவனைபோரொருவரில்லை
இந்தச்சகுனத்தில் ஏதொருகுற்றமில்லை
நடவும்நடவுமென்று நடைபேரிபடியுமென்றார்
வருகுதுபாளயங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புகுது சூரியனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகளைதாண்டி அதிகவனந்தான் தாண்டி
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனந்தான்தாண்டி
செந்நாய்ப்புலிகரடி சிறும்வனந்தான் தாண்டி
எல்லாதுதூரம் முல்லைவனந்தான்தாண்டி
சூரியன்வனந்தனிலே துரைகளெல்லாஞ் சேர்ந்தார்கள்
அங்கேநட்டான்சண்டாளை அடியுமென்றான்பேரிகை
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள் (ளை
மற்றுநாட்காலையிலே வாரார்கள் துரைகளெல்லாம்
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள் துரைகளெல்லாம்
சண்டாளைநாட்டுமென்றான் சல்லரியையுமென்றான்
அடித்தார்கள்பேரிகையை அடிவானத்திடிபோல
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
மற்றுநாட்காலையிலே வருகுதுபாளையங்கள்
காளமகாரிஷிவனத்தில் கடுகவந்துசேர்ந்தார்கள்
ரணபேரியனையுமென்றான் நல்லசின்னம்ஊதுமென்றான்
அரசன்தன்சொற்படியே அறைந்தார்கள்பேரிகையை
ஊதினார்சின்னத்தொனி உலகமேழுந்தானதிர
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
மற்றுநாட்காலையிலே மன்னர்பயணமிட்டார்
காமதேனுபர்வதத்திற் கடுகிவருகையிலே
ஐவரைக்கொல்லவென்று அருமபாவிவருகையிலே
பஞ்சவரைக்கொல்லவென்று படுபாவிவருகையிலே

திரியோதிரன் ஐவரையுங் கொல்லவருகிறதை
எம்பெருமானறிந்து வந்தவர்க்கெல்லாந்
தாகமுண்டாக்கினது.

---

ஐவருக்கும்வந்தவிதி ஆரார்தானறிந்து
க்கமோசம்வந்துதே காவலர்கள்பஞ்சவர்க்கு

மோசங்கள்வந்து முடிந்ததுமன்னவர்க்கு
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
தோஷிகெடுத்தானே தொண்டர்களைக்கொல்லவென்று
எந்நாளும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலுமே இராக்கலைபண்ணுகிறான்
அசதியாய்நாமிருந்தால் ஐவரிறந்திடுவார்
மறதியுடனிருந்தால் மாண்டிடுவார்பஞ்சவர்கள்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகுதே
கையில்செபமாலை கனக்குலைந்துபோகுதே
என்னஉபாயமது செய்கிறீரெம்பெருமான்
வருகிறாசருக்கும் மானுங்கொண்டார்க்கும்
தண்ணீர்களனங்கள் தாகவிடாயுண்டுபண்ணுர்
தண்ணீர்களனங்கள் தாகவிடாயானார்கள்
அத்தலண்டாசருக்கும் அந்நாக்குலறுகுது
நாவுவரட்டுகுது நடுநாக்குலறுகுது
அவ்வனத்தில் தீர்த்தங்கள் அள்ளியுண்ணக்கிடையாது
மாயர்பெருமானும் மலைராமரேதுசெய்தார்
தேவேந்திரனுடைய சுரபியெனுங்காமதேனு
அப்பசுக்கள் தீர்த்தமுண்ணும் அக்குளமொன்றொழிய
தீர்த்தங்களில்லாமற் செய்துவிட்டாரப்போது
அந்தஜெனங்களுக்கும் அனேகம்விடாயாச்சுது
தண்ணீர்களையாக தவிக்குதுபாளையங்கள்
காதையடைத்து களைத்தார்துரைகளெல்லாம்
தாதுவரைத்தானழைத்து துரியோதனுரைப்பான்
இந்தவனத்திலே எங்கும்நதியில்லையோ
எங்குங்குளமில்லையோ யிறங்கியேதீர்த்தமுண்ண
தேடியேபாருமென்று செப்பியனுப்பினான்
அப்படியேநல்லதென்று அந்தவனங்களெல்லாம்
தேடிப்புறப்பட்டார்கள் துரியோதனன்தூதுவர்கள்
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துபார்த்தார்கள்
காமதேனுதன்குளத்தைக் கண்டார்கள்தீர்த்தமுண்ண
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தூதுவர்கள்
துரியோதனனுக்குச் சேதியுரைத்தார்கள்

அகலமுள்ளதாயிருக்கும் அலங்காரபொய்கைகண்டோம்
வாருங்களென்றுசொல்லி வருந்திபேகெண்டனிட்டார்

திரிபோதிரன் காமதேனு குளத்தில் தண்ணீர்
குடிக்க சேனையுந்தானும் வருகிறது.

---

தென்னமுடிவேந்தன் திரிபோதிரன்கேட்டு
நல்லதுவாமேன்றுமென்று நடந்தார்கள்சேனையெல்லாம்
வருகிறவேளையிலே வானுலகஇடையரெலாம்

தெய்வலோகத்து இடையர் காமதேனுபசுக்களுக்கு
அந்தகுளத்தில் தண்ணீரகாட்டவருகிறது.

---

அந்தசமயத்தில் அந்தரத்துஇடையரெல்லாம்
வானுலகஇடையரெல்லாம் மாடுகளைத்தான்திருப்பி
காட்டிலேமேய்க்கின்ற காமதேனு அத்தனையும்
மேய்த்துதூரத்திபே மிரட்டிக்குளத்தில்விட்டார்
குளத்திலேநீரடித்துக் குளமெல்லாஞ்சேராக்கி
தண்ணீர்கலங்கியே தரையில்மண்மேல்கிளம்பும்
குளங்கள்கலங்கியல்லோ குளத்தின்மேல்மண்கிளம்பும்

பசுக்கள் குளங்கலக்கினதை தூதர்சொல்லத் திரி
போதிரன்கேட்டுக் கோபித்து இடையர்
களைக்கொன்று பசுக்களை மடக்கச்
சொல்லுகிறது.

---

அந்தச்சமயத்திலே அரவக்கொடியோன்தூதர்
தூதர்கள்தான்பார்த்துச் சொல்லுவாரரசருக்கு
ஐயையோராஜாவே ஆரோதெரியாது
ஆயிரம்பிடையர்கள் ஆவுகளைக்கொண்டுவந்து
விட்டுமே அக்குளத்தை மிதக்கச்சேராக்கிவிட்டார்
தண்ணீர்குடிக்கவேதான் உதவாதுவென்றார்கள்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்ராஜனுமே
ஆயிரம்பிடையரையும் அங்கேபலிவெட்டிவிட்டு
அத்தண்டபசுவைபெல்லாம் அத்திபுரமோட்டுமென்றார்
இராஜனுரைகேட்டு நடந்தாரேதூதுவர்கள்
மாடுகளைத்தனையும் மடக்கித்திருப்பினார்கள்

எதிர்த்தஇடையர்தனை யாவரையுங்கொன்றுவிட்டார்
சண்டையன்னவைத்தவரை கைத்தங்கெபோட்டார்கள்
காமதேனு பசுக்களை மேய்க்கவந்த இடையர்களைத்
திரியோதிரன் தூதர்கள்கொன்றவர்கள்போக
மற்றஇடையர்கள்போய்த் தேவேந்திர
னிடம் சொல்லுகிறது

---

தப்பிப்பிழைக்கவர்கள் கான்விழுந்தோடலுற்றார்
அமராபதிதேடி அவ்விடையரோடலுற்றார்
தேவேந்திரன்முன்னே சென்றுவிட்டார்இடையரவர்
வதறுடனிருக்கவர்கள் வார்த்தைதனேதுசொல்வார்
காமதேனுபசுக்கூட்டத்திற் காலைகளைமேய்த்திருந்தோம்
கட்டியே மேய்த்தோட்டிக் கடுகிக்குளத்திலேவிட்டோம்
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளமன்னன்
சேனைபரிவாரத் திரளுடன்கூடிவந்தான்
மாடுகளைமடக்கிக்கொண்டான் வல்லுயிரைவாங்கிவிட்டா
அல்லவரைக்கொன்றுவடியாதகள் தப்பிவந்தோம் [ன்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்இந்திரனும்
உருட்டினான்கண்ணை உறுமினான்பெரும்புலிபோல்
கண்கள்சிவக்குதே காந்தாளமாகுதே
மீசை துடிக்குதே மின்கோபமாகுதே
அவ்வலரிகண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுதே
நீலவிழிகண்கள்ரெண்டும் நெருப்புதணலாய்விடுது
என்றுமில்லாக்கோபம் பிறந்ததுஇந்திரற்கு

தேவேந்திரன் தன்மகனைச் சண்டைக்குப் போகச்
சொல்ல சித்திராங்கதன் மாதலியைத் தேர்
கொண்டுவரச்சொன்னது.

---

என்மகனேசித்திராங்கா இயலானரத்தினமே
மாட்டைமடக்கினதோர் மன்னவராசாவை
பிடித்தபிடிபோடே பின்கட்டாய்க்கட்டிவாராய்
ஆனசேனைபரிவாரம் அடங்கலுங்கொன்றழித்து
பிடித்தபிடியோடே கொண்டுவாராய்போட்டெனவே
கைப்பிடியாய்க்கொண்டு கண்டெனத்திரைத்து நில்லு
இல்லாதேபோமானால் எதிர்வந்துநில்லாதே



• துரியோதனன் சித்திரசேனனுடன் சண்டைசெய்து தேர்ச்சக்கரத்தில் கட்டுப்பட்டது.

உத்காரம்பண்ணுறே உம்பர்பிரானிந்திரனும்
தேவேந்திரன்மகனை சித்திராங்கராஜன்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிசயமாய்ச்சிந்தித்து
மாதலியைத்தானழைத்து மச்சுரதமெங்கேயென்றர்
தேரையலங்கரித்து சீக்கிரங்கொண்டுவா
என்றவுரைகேட்டு எழுந்தானேமாதலியும்
ஆயிரவண்டிநாமசட்டம் அதுக்கேற்றகுத்துக்கால்
குத்துக்காற்சொப்பனிட்டு கொடிஞ்சைத்திரைவளைத்து
கொடிஞ்சைத்திரைவளைத்துக் கும்பகலசம்வைத்து
கும்பகலசத்தினமேற் குடைகளைக்கட்டினான்
அங்கனேதேர்ச்சீலை அலங்காரம்பண்ணுனே
தேரையலங்கரித்து தேர்ப்பாகன்சொப்பனிட்டான்
வாசிகைக்குளிப்பாட்டி வாயிற்கடிவாளமிட்டான்
நாலுகால்வெண்டயமும் நடுக்கழுத்திற்கொலுசுகளும்
முன்னுலேசட்டிகளும் பின்னுலேகுச்சுகளும்
பக்கத்தில் அங்குபடி பதியவைத்தான்சேணங்களை
முதுகிலேசினிகளும் முன்னேகடிவாளம்
சந்திரபிறைசூரியபிறை தரித்தான்குதிரைக்கு
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்தெண்டனிட்டான்

திரியன்மேல் சித்திரசேனன் சண்டைக்குப்போகிறது.

---

நடுங்கியெழுந்தானே கட்டழகன்சித்ரசேனன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
பண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தாக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
பில்லைசமுதாடு பிருவெடுத்தவொட்டியாணம்
கட்டியபரைகளிலே காங்குகச்சைசுங்குவிட்டு
சந்திரகாந்திகட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
முத்திருமாலை முகத்தழகாய்க்கட்டினான்
சிங்காணிவில்லெடுத்து சிறநாரிபூட்டினான்
அம்புறத்தூணியை அணிந்துகொண்டான்தன்முதுகி
தேரைச்சுற்றித்தெண்டனிட்டு சிவ்வெனவேயேறினான் (ல்
ஏறினபோதே யிவனசாரதிதான்
[illegible]ரகவ்வாரைப்பிடித்துத் துரிதமுடன்சாரிசெய்ய

வருகுதுமச்சுரதம்வோ னுலகந்தனதிர
தேர்தனிலேசங்குநாதம் சித்ரசேனன்பண்ணிறானே
சங்குநாதம்பண்ணிறானே தான்இரும்பச்சுரபியெல்லாம்

## துரியோதிரன் சேனைகளைக் காமதேனு அதம்பண்ணினது.

---

அந்தச்சமயத்தில் அறிந்ததுகாமதேனு
சங்குத்தொனிகேட்டுத் தான்வருகுதுகாமதேனு
குதித்துக்குமாளமிட்டு வருகுதுகாமதேனு
வந்துவிழுந்தது வடம்பெரியபாளையத்தில்
குத்துதுகொம்பாலே குளம்பால்மிதிக்கிறது

## துரியோதிரனும் அவனுடைய சேனைகளும் சித்திரசேனனும் சண்டைபண்ணுகிறது

---

அத்தண்டசேனைகளை அதம்பண்ணுங்காமதேனு
மாண்டஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தஜெனங்களென்றால் செப்பமுடிபோகாது.
அந்தச்சமயத்தில் வந்துவிட்டான்சித்ரசேனன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்சரபாணம்
கைக்கண்டபாணமெல்லாங் கடுகெனவேவிட்டுவிட்டான்
கூச்சலெழும்புது கொப்பெனவேபாளையத்தில்
கண்டான் துரியோதிரன் கட்டழகனேதுசொல்வான்
எவனோதெரியாது இங்குவந்தான்சண்டைபண்ண
இத்தண்டதுரைகளெல்லாம் எல்லோரும்முஸ்திப்பாய்
ஆயுதங்கள்தானெடுத்து அமாதுசெய்யுமென்றான்
பண்ணுன்கு ஆயுதத்தை எடுத்துஅரையிற்கட்டி
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடித்தார்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிகானடித்தார்
எட்டிஞர்சண்டை எழும்புதுசமரப்போ
வில்வளைத்துநாரிபூட்டி விட்டாரிவர்கணையை
ஒருவர்க்கொருவர் ஒழிவில்லாப்பாணம்விட்டார்
அப்புவருப்வேகமதை ஆர்க்கமுடியாது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
ஒருகோடிபாணங்கள் ஒருமித்துவிட்டுவிட்டார்
துரியன்விடும்பாணம் சொல்லமுடியாது

கர்ணன்விடும்பாணம் கணக்குமிதங்களில்லை
துரோணர்விடும்பாணம் சொல்லமுடியாது
கோபமாய்கிருபாச்சாரி சோடானபாணம்விட்டார்
வீஷ்மாச்சாரியரும் வேணபாணங்கள்விட்டார்
அசுவத்தாமாவும் அநேகநெடும்பாணம்விட்டார்
சகுனிசயிந்தவரும் சரமேற்சரம்பொழிந்தார்
அவரவர்கள்விடுபாணம் அபரிமிதமில்லை
ஒருவர்க்கொருவர் ஒருகோடிபாணம்விட்டார்
வாயுவாஸ்திரங்களும் வருணாஸ்திரங்களும்
சந்திரஅஸ்திரமும் இந்திரஅஸ்திரமும்
சங்கஞ்சங்கம்போலே சரங்கள்பொழிந்தார்கள்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்லினைத்துநாரிபூட்டி விட்டான்நெடும்பாணம்
தன்மேல்விடும்பாணமெல்லாம் தாக்காமலேவிலக்க
பின்னையுங்கோடிசரம் பிரளயமாய்விட்டுவிட்டான்
அத்தனைபேர்விட்ட சரமத்தனையுங்கொள்ளைகொண்டான்
அங்கராசர்தேருடைத்து அவரவர்கள்வில்பறித்து
ஆனையின்மேலிருந்த துரை அலறியேமண்ணைக்கவ்வ
குதிரையின்மேலிருந்த துரைகொக்கரித்துமண்ணைக்கவ்வ
ஒட்டையின்மேலிருந்ததுரை ஓலமிட்டுகீழேவிழ
தென்னங்குலைபோலே திருகினான்வேணதலை
கருப்பங்கருணையைப்போல் கண்டித்தான்வேணதலை
ஆலைக்கரும்புபோலே அறுத்திட்டான்வேணதலை
பேய்க்காலெறும்புபோல்பிசைந்தெடுத்தான்பாளையத்தை
பனைநுங்குபோலாகப் பருத்தவிழிபிதுங்க
கண்டசதைபறிந்து கழுகுகக்கிரைபோடுகிறான்
ஈரல்சரியுது இரைச்சிவெளியாகுது
குடல்கள்சரியுது குறிப்பாகஅப்பொழுது
ரெப்பைவிலாவெலும்பு நெறநெறன்றுகால்முறியும்
பட்டஜனங்களென்றால் பட்டுமிதங்களில்லை
செத்தஜனங்களென்றால் செப்பமுடியாது
சித்ரசேனன்சண்டையிலே ஜெனங்களுமாளுகுது
அபயமபயமென்று அலையுதுபாளையங்கள்
தண்ணீர்தண்ணீரென்றுசொல்லிதவிக்குதுபாளையங்கள்
ரத்தாறுவோடுகுது ரணமுண்டங்கொக்கரிக்க

## இந்தவிதம்பாளையங்க ளேடாகூடமாச்சுது திரியோதிராஜன் தேரிழந்து நின்றுவிட்டான் சித்ரசேனன் திரியோதிரனைக்கட்டி இழுத்துக் கொண்டுபோகிறபோது திரியோதிரன் முறையிடுவது.

---

அங்கந்துளையாக்கி அதிரடித்தான்சித்ரசேனன்
அந்தரவீதியிலே அவனைப்பிடித்துக்கட்டி
பிடித்தபிடியோடே பின்கட்டாய்க்கட்டினான்
தேர்குத்துக்காலோடே திரியனைப்பிடித்துக்கட்டி
ஊதினான்சங்குநாதம் உம்பர்பிரான்றன்மகனும்
திரியன்பிடிபடவே திகிலெடுத்துராசரெல்லாம்
ஒருவருடனொருவர் சொல்லாமலோடலுற்றார்
திரியனைக்கட்டிக்கொண்டு தெய்வலோகம்போறாராம்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
எண்ணுதுமெண்ணுகிறான் எண்ணிப்புலம்புகிறான்
ஆரோதெரியாது ஆகாசம்கொண்டுபோறான்
எவனோதெரியாது எமலோகங்கொண்டுபோறான்
ஐவர்பஞ்சபாண்டவரை அனர்த்தம்பண்ணவந்தேனே
என்னையொருவர் இழுத்துப்போறாரென்செய்வேன்
கூடவந்தராஜாக்கள் கோடானகோடியுண்டு
மட்டில்லாராஜாக்கள் வந்தார்கள்வீரியர்கள்
அத்தண்டாராஜாக்கள் அல்லவருங்கைவிட்டார்
கட்டியிழுத்துக் கைலாசம்கொண்டுபோறார்
ஆர்வந்துகாப்பார்கள் ஆபத்துவேளையிலே
எவர்வந்துகாப்பார்கள் என்சிவன்பிழைக்கஇப்போ
தர்மரைத்தானினைந்தால் தயவுவைத்துக்காத்திடுவார்
இந்தவனத்திலேயிருக்கிறாரென்றார்கள்
கூவிப்புலம்பினான் குரல்கேட்குந்தருமருக்கு
தம்பியைத்தானனுப்பி தயவுவைத்துக்காத்திடுவார்
ஐவருமிப்போது அன்புவைத்துக்காத்தாலே
ஐவரைக்கொல்லுகைக்கு ஆலோசனைதேடிடுவோம்
தப்பிப்பிழைத்தோமானால் தருமரைக்கொன்றிடுவோம்
என்றவன்யோசனையாய் என்னசொல்லிப்புலம்புகிறான்
கூவிப்புலம்புகிறான் கொற்றவன்திரியோதிரன்

அண்ணாவேயண்ணாவே அழகான தருமரே
ஐவர்பஞ்சபாண்டவரே அண்ணாவேநீர்கேளும்
ஐவரைப்பார்க்கவே அதிகப்பிரியமுமாய்
பார்க்கும்படியாக வந்தேன்காண்பஞ்சவரே
காணும்படியாக வந்தேன்காண்காவலரே
எவரோதெரியாது இழுத்துப்போருன் அந்தரமாய்
ஆரோதெரியாது அழைத்துப்போருன் அந்தரமாய்
கூடப்பிறக்கிலேயோ கூட்டுப்பாலுண்கலேயோ
தாயாரும்வேருனல் தகப்பனுமொன்றலவோ
மனதுமிரங்கலேயோ மகாராஜதருமரே
தம்பிதமயன்மேல் தயவிலேயோஉங்களுக்கு
அந்தமாய்க்கொண்டுபோருன் ஆரோதெரியாது
என்-ஆவிவைக்காத்தாலே அனேககோடிபுண்ணியங்கா(ண்
சாயம்புமேனியனே தயவிலேயோஎன்மேலே
என்றுபுலம்பியே இடிபோலேகூச்சலிட்டான்
கூவுங்குரல் கேட்கும் கொப்பெனவேதருமருக்கு
உற்றுற்றுகேட்டாராம் உரகதன்வார்த்தையெல்லாம்

திரியோதிரன் முறையிடுவதை தருமர்கேட்டு
அருச்சுனனைப்போய் திரியோதிரனை
அழைத்துவரச்சொன்னது.

---

தருமர்மனங்கொள்ளாமல் தம்பியரைத்தானழைத்து
ஆணையுருபன்னு அருச்சுனரேநீர்கேளும்
பெரியதகப்பன்பெற்ற பேரான அண்ணன்தம்பி
திரியோதிரனம்மைத் தேடிப்பார்க்கவந்தான்
ஆரோஒருவன் ஆகாசங்கொண்டுபோருன்
எவனோதெரியாது இழுத்துப்போருன் அந்தரமாய்
பார்த்துமிருந்தோமானல் பாதகமெத்தவரும்
மெத்தவருந்துகிருன் வில்வேந்தனிப்போது
நம்மைவருந்துகிருன் ரக்ஷிப்பாயென்றுசொல்லி
ஆபத்துவேளையிலே ஆதரித்தால்புண்ணியங்கள்
சந்கலிவித்துக் கைபோடேகூட்டிவாராய்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஊமோடிருந்தநம்மை உரகதன்தானழைத்து
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி

எத்தனைவஞ்சனைகள் இடறுகள்செய்தான்காண்
நாடுபறித்தானே ராச்சியத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையும்விலங்கிலிட்டு அறையிலடைத்தானே
அரண்மனைப்பெண்களையும் அம்பலமேற்றிவைத்தான்
அண்ணன்பெருந்தேவி யாடையுரியவைத்தான்
பாரவனவாசம் பரதேசமோட்டினான்
இந்தப்பரதேசம் இனித்திரியுமென்றானே
சாமத்துரோகனுக்கு தயவுநினைப்பாரோ
பொல்லாதபாவிக்குப் புண்ணியந்தேடுவாரோ
தென்னமுடிவேந்தன் திரியோதனராசன்
எத்தனைநாளிருந்தாலும் இடரல்லோதேடுகிறான்
கொல்லநினைக்கிறான் கொடும்பாவிதிரியோதனன்
இன்றொடொழிந்தது எமலோகஞ்சேருமட்டும்
செத்தாற்பழுதில்லை சீரான அண்ணாவே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமரவர்
அவரவர்செய்தவினை அவரேயனுபவிப்பார்
நன்மையைச்செய்தவர்கள் ராச்சியத்தையாண்டிடுவார்
பொல்லாங்குசெய்தவர்கள் போவார்பெருநரகில்
நன்மையைச்செய்தவர்க்கு நட்சேத்திரங்காணும்
தீமையைச்செய்தவர்க்குத் தெரியாதிருளாகும்
வஞ்சனைகள்வேண்டாமே மாயன்துணையாவார்
இக்கணமேநீயேகி யிட்டுவந்துசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாதே என்றுணைதம்பியரே

அருச்சுனன் கிரியனை யழைக்கப்போவது

---

என்றவுரைகேட்டு எழுந்தானருச்சுனனும்
நீண்டிடுங்கால்களுக்கு தெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குக் குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துசட்டி
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசெருகியல்லோ கடுகவெழுந்தானே
சிங்காணிவில்லெடுத்து தேர்விஜயன்பாணமானன்

வாரானே அர்ச்சுனனும் வழிபட்டான் அங்கனவே
நடந்தானே அர்ச்சுனனும் நாழிகைக்குகாதவழி

## அருச்சுனனும் சித்திரசேனனும் சண்டைசெய்தல்.

---

அப்போதருச்சுனனும் அதிவேகமாகவல்லோ
அக்கினிபாணத்தை அதிவிரைவாய்தானெடுத்து
வரிவில்வளைத்தெடுத்து மார்புரளவாங்கினான்
அக்கினிபாணமது அதிரவேபோய்தடுக்கும்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
சீறியெழும்பியே சீக்கிரமாய்வந்தெதிர்ந்தான்
சண்டைசண்டையென்று சமர்போர்முழங்குது
ஒருவர்க்கொருவர் உயுத்தங்களாகுது
ஒருவர்விடுஞ்சரங்கள் ஒருவர்விலக்குவாரும்
இருவர்சமானமாக யிசைந்துமேசண்டைபண்ணார்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டார்
சூரியனைத்தான்மறைக்கும் சூரர்விடும்பாணமெல்லாம்
நான்குகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணார்கள்
அருச்சுனன்சண்டைகளை அண்டர்பிரான்மகனறிந்து

## அருச்சுனனும் சித்திரசேனனும் சமாதானமாகி திரிபோதிரனை தருமராண்டை அழைத்துப் போகிறது.

---

அன்னிலும்வல்லபிரான் என்றுமனதிலெண்ணி
இவன்-யாரோதெரியாது ஆண்மையுள்ளசேவகன்தான்
வம்மிசத்தைநாமறிந்துமறுத்தல்லோசண்டைசெய்வோ
என்றல்லோசித்ரசேனன் எதுசொல்வானருச்சுனனை [ம்
ஆடாதம்பிநீ ஆண்மையுள்சேவகனே
எவனடாதம்பிநீ எதிர்த்துசண்டைசெய்யவந்தாய்
ஊரேதுபேரேது உன்தகப்பன்வாறேது
எவருடையபுத்திரன்நீ எனக்கரியச்சொல்லுமென்றார்
இவ்வார்த்தைகேட்கவே எதுசொல்வான் அர்ச்சுனனும்
யுத்தகளந்தனிலே உறவின்முறைகேட்பாரோ
படுகளத்திலொப்பாரி கேட்பாரோபாருலகில்
நீ-ஆண்பிள்ளையானால் அமரதுசெய்யுமென்றார்
உன்தகப்பன்றன்பெயரும் ஊர்பெயருஞ்சொன்னாலே

நானைப்பென்றிப்பாடு நவிலென்றான்விஜயன்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனன் தான்கேட்டு
உத்திரவுதான்கேட்டு அர்சுனன்கொண்டவனும்
தேவர்க்கதிபதிநான் தேவேந்திரனென்னப்பன்
என்றவுரைகேட்டு எதுசொல்வான் அர்ச்சுனனும்
அண்ணனென்றறியாமல் அமாதுசெய்தேனே
தமையனென்றறியாமல் சண்டைகள்செய்தேனே
வில்லைக்கரையில்வைத்து விஜயனுமோடிவந்து
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுகொண்டுவிட்டான்
முக்கால்வலம்வந்து முடிவொருகால்தெண்டவிட்டான்
அண்ணாசரணமென்று அடிபணிந்தானருச்சுனனும்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனனேதுசொல்வான்
ஆர்விட்டுப்பின்னை அறிவுரையுமென்றார்
என்னையறியாயோ என்னுடைய அண்ணாவே
என்தாயார்குந்திபெம்மாள் என்னப்பன்தேவேந்திரன்
உன்னப்பனதேவேந்திரன் என்பொருட்குனன்தான்
என்றவுரைகேட்டு எதுசொல்வான்சித்ரசேனன்
என்தந்தைக்குப் பிறந்த தன்மையினால்தம்பியரே
நான்விட்டபாணத்தால் தப்பிப்பிழைத்தீர்
அல்லாதேபோமானால் அமரில்மடிந்திடுவீர்
தப்பிப்பிழைத்தீரே சாமியுடபுண்ணியத்தால்
என்றிவர்களோர்மனதா யிருவருறவாடி
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்
எழில்விஜயனப்போது எதுசொல்வான் அண்ணனுக்கு
சென்னமுடிவேந்தன் திரியோதிராஜன்
என்னசெய்தானென்றுநீர் இட்டுப்போரண்ணாவே
அவன்செய்தகுற்றமெல்லாம் அண்ணாநீர்சொல்லுமென
இவ்வார்த்தைதான்கேட்டு என்னசொல்வான்சித்ரசேன
காட்டிலேயேபோர்க்கொரு காமதேனு அக்கணையும் (ன்
பாற்பசுக்கள்தன்னையிந்தப் பாவிமடக்கிக்கொண்டான்
ஆயிரமிடையரையும் அதிகமாய்க்கொன்றுவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுப்பினார்என்னப்பன்
கைப்பிடியாய்க்கொண்டுவர கட்டளையுமிட்டார்காண்
அவர்சொன்னபடியினாலே அமாதுசெய்தேன்காண்
இவனுடையசேனைகளை எல்லாம்நான்கொன்றழித்துமின்
விரைவாகக்கைப்பிடியாய் விண்ணுலகங்கொண்டுபோறே

என்றவுடனேகேட்டு என்னசொல்வானர்ச்சுனனும்
ஆறுதல்சொன்னானே அடிபேடொருவார்த்தை
சாபம்புமேனியரும் தருமராஜரெங்களண்ணர்
என்னைவிடுவித்து இங்கேவாவென்றுசொன்னார்
என்னையனுப்பினார் இயமனதர்மராஜர்
அழைத்துவாரச்சொன்னாரே அண்ணனுமிப்பொழுதே
உன்முகத்திற்றான்விழிப்பேன் என்றுமே தருமராஜர்
கட்டியனுப்பினார் குறிப்பாகவுந்தனையும்
என்மேற்றயவுவைத்து இங்கேயனுப்புமென்றான்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனனேதுஞ்சொல்வான்
மாமேடைக்கிப்பவனதுயிரைக்கொன்றவனை
கைப்பிடியாய்க்கொண்டுவரக் கடிகியனுப்பினார்
ஆனையாய்க்கொண்டுபோறேனருச்சுனனென்னசெய்வேன்
ஆறுதல்சொன்னானே அடிபேடொருவார்த்தை
அருச்சுனன்வந்து அழைத்துப்போறேனென்றுசொல்
ஐயரென்றுசொன்னானே அதிகமனமகிழ்வார் (னும்
அவ்வாகேபாயானும் அழைத்துமேபோனாலே
என்வார்த்தைதள்ளிநீர் இட்டுக்கொண்டுபோனாலே
அன்றைவைதானைக்கு அமராபுரம்வருவேன்
தேவேந்திரபுரத்தைச் சிதறவேகொள்ளைகொள்வேன்
ஆடுமாடுகளை அங்காளைவருகளை
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிகளும்
அங்காடிவீதிகளும் அரண்மனைத்தெருவுகளும்
அத்தனையுங்கொள்ளையிட்டு அதம்பண்ணிப்போட்டிடுவே (ன்
என்வார்த்தைதான்கேட்டு இவனைவிடுவிடென்றான்
சித்ரசேனன்கேட்டுச் சிந்தைமகிழ்ந்தவனும்
சந்தோஷப்பட்டவனும் சர்ப்பக்கொடியோனை
கட்டவிழ்த்துவிட்டுவிடுங்காணென்றான்சித்ரசேனன்

சித்ரசேனன் தேவேந்திரனைக் காண்கிறது.

---

போய்வாரேனென்றவனோ புறப்பட்டான்தேரேறி
அமராபதிதேடி அடைவுடனேதானடந்தான்
தேவேந்திரனுக்கு சித்ரசேனன்தெண்டனிட்டான்
அருச்சுனன்தன்னுடைய அதிசயச்சேதிகளும்

அரவக்கொடிவேந்தன் அகப்பட்டசேதிகளும்
இவ்விருவர்சேதி இபலாகத்தர்சேதி
தகப்பனுடனுரைக்கச் சந்தோஷமாகினர்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனை
திரியோதிரனுரைத் தேர்விஜயன்கூட்டிவாருன்
அண்ணாருகாக அழைத்துவந்துவிட்டாராம்
அண்ணர்தருமருக்கு அடிபணிந்தான் திரியோதிரன்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
எமன்மகன் தருமராயன் எடுத்தணைத்தான் திரியனையும்
எங்கிருந்துவந்தீரப்பா எனக்கறியச்சொல்லுமென்றார்
அத்துவானகானகத்தில் ஆரணியம்வந்ததென்ன
அந்தரமாகவே ஆர்காணும்கொண்டுசென்றார்

திரியோதிரன் தருமருக்குத் தன்வரலாறுகூறல்.

---

திரியோதிராஜன் சொல்லத்தொடங்கினன்
ஆசையாம்பாசமதா லண்ணாவேபார்க்கவந்தேன்
எத்தனைநாள்காடுறைந்தீர் இட்டுபோகவேணுமென்று
அஸ்திணபுரத்துக் கழைத்துக்கொண்டுபோவோமென்று
என்னுதுமெண்ணினன் இக்காடுதேடிவந்தேன்
என்னை—ஆரோதெரியாது அந்தரமாய்க்கட்டிப்போனார்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்தானுமங்கே அமர்செய்துஇட்டுவந்தான்
எத்தனைநாள்காடுறைவீர் இபலானராஜாவே
பாரவனவாசம் பரதேசந்திரிவானேன
வேடரைப்போலாக வில்லியரைப்போலாக
பரதேசம்திரிவானேன் பட்டணத்தில்வாங்களென்றான்
அஸ்திணபுரத்தை ஆண்டிடுவீர்வாங்களென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
ஆறுவருஷமாச்சு ஆரணியம்வந்துநாங்கள்
இன்னஞ்சிலகாலம் இப்படியேநான்திரிந்து
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்து
வந்தபிறகாக மனதுவைத்துயென்மேலே
சொன்னபடிசீமை துரைத்தனந்தாருமென்றார்

---

வீமன் கனிபறித்துவர திரியோதிரன்புசித்து
தருமரிடத்திற் செலவுபெற்று அஸ்
திறுபுரம் செல்லுகிறது.

---

வெற்றிமதயானை வீமாமதகரியே
அண்ணர்களையாகி அதிகப்பசியானூர்
காடெல்லாந்தான் திரிந்து கனிபறித்துவாருமென்றூர்
வெற்றிமதயானை வீமனெழுந்திருந்து
அறுநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தையும்
காட்டுவிளாம்பழமும் கருநெல்லிப்பழங்களுடன்
வேரில்பழுத்திருக்கும் வெடித்தபலாப்பழமும்
மலைத்தேன்சுனைத்தேனும் மாங்கனியுந்தேங்கனியும்
மட்டில்லாப்பழம்பரித்து மதவீமன்கொண்டுவந்தான்
தெக்கிலேதான்பறித்து திறல்வீமன்கொண்டுவந்தான்
பறித்தகனிகளெல்லாம் பசியாறஉண்ணுமென்று
கைக்குச்சலங்கொடுத்துக் கட்டழகருண்டுபண்ணூர்
ஆசனந்தான்போட்டு அமுதுபுசியுமென்றூர்
விஷநாகங்கொண்டவனும வேநதனும்தான்புசித்தான்
எண்ணுதமென்னுகிறூன் எரிநாகங்கொண்டவனும்
இப்படிக்கொத்த இபலானபஞ்சவர்கள்
எப்படிக்குச்சாவார்கள் இக்கனியைத்தின்றவர்கள்
அஸ்திறுபுரத்திற்போய ஆலோசனைபண்ணவேண்டும்
எப்படியும்பஞ்சவரை இக்காட்டிற்கொல்லவேணும்
என்றுமனதிலெண்ணி இருந்துகனிபொசித்தான்
பசியாறஉண்டானே பாதகன் திரியோதிரன்
கைபூசிக்கொண்டானே காதகன் திரியோதிரன்
சாயாம்புமன்னவனூர் தருமர்பெருமாளும்
பின்னுஞ்சிலகனியை பெருமூட்டையாகக்கட்டி
அப்பாதிரியோதனு அழகானஇக்கனியை
அண்மனைக்குக்கொண்டுபோய் அனைவருந்தான்புசிக்க
எடுத்துப்போமென்றுசொல்லி ஈந்தாரே அக்கனியை
வாங்கியேஅக்கனியை மன்னவனுந்தோளிலிட்டான்
ஐயாபோய்வாரேனென் றடிபணிந்தான் திரியனுமே
சாயாம்புமன்னவனூர் தர்மாவரேதுசொல்வார்
காண்டீபஅர்ச்சுனரே கடுகியெழுந்திருந்து

அண்ணன் திரியன்முன் னக்கனியின்மூட்டைகொண்டு
காடுகடக்கவும் கைமூட்டைநீவாங்கி
அண்ணரைவழிகூட்டி அனுப்பிவாதம்பியென்றார்
தருமருரைகேட்டு தார்விஜயன் தானெழுந்து
கனிமூட்டைதோளில்வைத்து கடுகியேபின்னடந்தான்
திரியோதிரன்பின்னே நடந்தானேதேர்விஜயன்
காடுசெடியுங் கடியவனாந்திரமும்
ஆறுஞ்சுனையும் அல்லலுழந்தான்கடந்து
காடுகடந்தபின்பு கைமூட்டைவாங்கிக்கொண்டு
தென்னமுடிவேந்தன் திரியோதிரனேதுசொல்வான்
தூரநில்லும் அர்ச்சுனரே தொல்லுலகில்வாராதே
கடக்கநில்லும் அர்ச்சுனரே காசினியில்வாராதே
காடுமெரித்தகாலால் என்னாடுமிதியாதே யை)
அரைக்ஷணப்போகையிலே அறுத்தெறிவேனுன்தலை
தருமர்பெருமையினால் தணிந்துவிட்டேன்கோபமதை
என்றுதிரியன்சொல்லி இசைந்துவழிநடந்தான்
அண்ணரருகாக அருச்சுனன்வந்தழுதான்
அப்போதிரியோதிரன் அதிகவிரைவாக
காடுசெடியுங் கரியமலைகடந்து
அஸ்திநாபுரத்துக்கு ஆனமுகன்போயடுத்தான்
சிங்காதனமீதிற் சென்றானே திரியோதிரன்
ஆசாரிஐவரையும் அனந்தமகாராஜாவையும்
மாமன்சகுனியையும் மைத்துனன்சயிந்தவனையும்
அத்தண்டபேரையும் அழைத்தான்திரியோதிரன்(தான்
கொண்டுவந்தகாய்க்கனியைக் கொப்பெனமுன்னேவைத்
இக்கனியையுண்ணுமவரெப்படிகாண்மாண்டிடுவார்
தேவேந்திரன்மகனார் சித்ரசேனனெனைப்பிடித்தார்
தேரிலெனைக்கட்டி தெய்வலோகங்கொண்டுசென்றார்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்வந்து சமரதுசெய்தான்காண்
என்னைவிடுவித்து இட்டுவந்தானண்ணரண்டை
ஐவரையுங்கண்டேனே அனேசமானவார்த்தைகளை
உச்சிதமாகவேதான் ஒற்றுமையாய்வார்த்தைசொன்னே
இந்தக்கனிதான்புசிக்கும் எழிலானபஞ்சவர்கள் [ன்
எப்படிக்குமாண்டிடுவார் இயலானபஞ்சவர்கள்
என்றிவர்கள்தான்பேசி யிருந்தார்சிலநாள்கள்

இப்படியாக இருக்கின்றவேளையிலே
ஆரும்வருஷம் முடிந்தது ஐவருக்கு
ஆருவது காமதேனுபர்வதம்
முற்றிற்று

## 7-வது. கெந்தர்வபர்வதம்.

ஏழாம்வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போனார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடத்துவழிகூடி
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
கெந்தர்வபர்வதத்தில் வந்தாரேபஞ்சவர்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணுர்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணு
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
அங்கேபெருமாளும் அலைகங்கைஸ்நானம்பண்ணி
ஈராமுலர்த்தி இசைசேர்ந்தபட்டுடுத்தி
சாம்பமூர்த்திபூசைகளும் சகலமுந்தான்முடித்து
ஆசனமிட்டுமல்லோ அரிராமர்பூசைபண்ணுர்
அரிபூசைகுருபூசை அனைத்துங்கடன்முடித்து
கைதனிலேதீர்த்தமள்ளிக் கதிரோனைபூசித்து
எரிக்குங்கதிரோனை எம்பெருமாள்தோத்தரித்து
கண்ணிரண்டுமுடியே கையிரண்டுமேந்திக்கொண்டு
சிவஞானமாகவே ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்

எம்பெருமாள் செபம்பண்ணும்வேளையில் கெந்தருவன்
தம்பலம் உமிழப் பெருமாள்கோபிக்கிறது.

ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மாயனென்னும்கெந்தருவன் வாரானேநேரேறி
நேரேறிவருகையிலே நின்றுஉமிழ்ந்தானே

சொல்மினகுவலரிசி வாசமுள்ளஜாதிபத்திரி
வெத்திலையும்பாக்குகளு மென்றுஉமிழ்ந்தானே
மாயவனார்கைதனிலே வந்துவிழுந்தது
துப்பியதம்பலமும் துயராய்மேல்கையில்விழ
கண்திறந்துபார்த்தாரே கைதனிலேதம்பலத்தை
சுற்றியங்கேபார்த்தாரே தோணவில்லைவேறொருவர்
ஆகாயவீதியிலே அவனுரோதெரியாது
கைதனிலேதம்பலத்தை காரியுமிழ்ந்தானே
செபதபஞ்செய்கையிலே செய்ததிவன்கெருவமென்ன
கண்கள்சிவந்தாராம் காந்தாளமானாராம்
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுமாம்
நீலவிழிக்கண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாகுது
கோவைப்பழம்போலக் கூர்விழிக்கண்சிவக்கும்
பாவற்பழம்போலப் பத்தினிபேகண்சிவக்கும்
சக்கரத்தைத்தானெடுத்து சாமிபெருமானும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலரெம்பெருமாள்
மந்திரதூபமிட்டு வலதுகையில்தானெடுத்தார்
தம்பலமுமிழ்ந்தவன்றன் தலையைநீவாங்கிவா
அரைக்ஷணப்போதையிலே அறுத்துவா அவன்தலையை
அரனார்வந்தெதிர்த்தாலும் அமரர்வந்தெதிர்த்தாலும்
பிரமதேவன்வந்தாலும் பிரியங்கள்சொன்னாலும்
தேவபிரான்வந்தாலும் தெண்டனிட்டுக்கொண்டாலும்
கர்த்தரேவநது கையமர்த்திகொண்டாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்தடுத்தாலும்
ஆரார்தடுத்தாலும் ஆரவாரம்பண்ணுலும்
அரைநாழிக்குள்ளாக அறுத்துவா அவன்தலையை
இக்கணமேசென்றுநீ இருதுண்டம்போட்டுவா

மாயன் கெந்தருவன்மேல்கோபித்து சக்கரத்தை
அனுப்புகிறது.

சக்கரத்தைதூபமிட்டு சாமியார்விட்டுவிட்டார்
வருகுதுசக்கரந்தான் வானுலகந்தானதாண்டி
இ[illegible]பாய்வழிதனிலே எதிர்பட்டார்நாரதரும்
நாரதமாமுனிதான் நமஸ்கரித்தார்சக்கரத்தை
இத்தனைகோபத்துடன் எங்கேநீர்போறீர்காண்
அரிராமர்சக்கரந்தான் அம்முனிக்குவதுசொல்லும்

நாரதர் சக்கரத்தை நீர்போகிறகாரியம் என்ன
வென்றுவினவ சக்கரஞ் சொல்லுதல்

---

ஸ்ரீராமசிரம்பெருமாள் செபதபஞ்செய்கையிலே
வாசங்கள் தான் தின்று வல துகையில் துப்பினான்
ஆகையால்சுவாமியவர் அப்போதுகோபமானார்
என்னையனுப்பினார் அவன் தலையறுக்கவென்று
கெந்தருவன்றலையை முந்த அறுக்கவந்தேன்
அவ்வார்த்தையைக்கேட்டு அந்தமுனிபோய்நடந்தார்
கெந்தருவன் தன்னருகே வந்தாரே நாரதரும்
ஆரடாகெந்தருவா ஆயரவர்பேரில்
தம்பலமுமிழ்ந்ததினால் சாமியார்கோபமுடன்
சக்கரம் அனுப்பியுந்தன் தலைபைத்தரிக்கவென்று
வருகுதுசக்கரந்தான் மாளவிதியாச்சே
ஆதிசிவனருகே அபயமிட்டுப்போனக்கால்
பரமசிவன் தான்பார்த்துப் பட்சம்வைத்தாரானால்
ஆதிசிவன் தன்னாலே ஆகும்உனைகாக்க
அல்லாதேயானால் அறுத்துவிடும்உன்தலையை
தப்பிப்பிழையுமென்று தவமுனிசொல்லுகையில்
அவ்வார்த்தைதான்கேட்டு அஞ்சிபயந்தவனும்

கெந்தருவன் சக்கரத்திக்கஞ்சி மும்மூர்த்திகளண்டை
போய் முறையிட்டு தீராமைபால் அருச்சுன
னண்டை போகிறது.

---

மெய்வேகமாகவே வழிபிடித்தான்கெந்தருவன்
சக்கரம்வந்திடவே தான்புலம்பிஓடுகிறான்
ஆதிசிவனருகில் அபயமிட்டுஓடுகிறான்
அரவாபரணனே ஐயாஉனக்கபயம்
சங்கராநான்சரணம் சதாசிவாஉனக்கபயம்
சாந்தலிங்காநான்சரணம் தாணுவேஉனக்கபயம்
வெள்ளரிஷபமேறுங் வித்தகாநான்சரணம்
மாபூதனைந்தரித்த மகாதேவாஉனக்கபயம்
முக்கண்படைத்தவரே முதல்வரேஉனக்கபயம்
திரிபுரமெரித்தவெங்கள் தேவாஉனக்கபயம்
காமனைக்கண்ணாலெரித்த கடவுளேநான்சரணம்
எமனையுதைத்தவரே ஈசாஉனக்கபயம்

கங்கையணிந்தோனே கடுங்கைகரித்தோனே
திங்களைத்தன்சிரசில் தரித்தசிவனாரே
அபயமபயமையா அந்திவண்ணா உனக்கபயம்
அபயக்குரல்கேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
ஆரடாகெந்தருவா அபயமிட்டவாரேது
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தவபணங்கள் வார்த்தைஉரையுமென்றார்
ஆண்டவனேயென்சாமி அடியேனொருவிண்ணப்பம்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
காயாரக்காய்த்ததொரு கமுகினதுபாக்கை
வாயாரத்தின்று மண்மேலேதுப்பினேன்
தாமரைப்பொய்கையிலே சாமிபெருமாளும்
தினகரனைத்தான்பார்த்து செபதபஞ்செய்தாராம்
நானுமிழ்ந்ததம்பலம் ராமர்கையிற்றான்விழவே
கோபாலசுவாமியார் கோபம்பெரிதாகி
சக்கரத்தையனுப்பினார் தலையைத்தரிக்கவென்று
என்னைக்கொல்லவருகுது இபலானசக்கரந்தான்
ஆகையாலாண்டவனே ஆதரிப்பீரென்றுவந்தேன்
என்னைநீகாத்தருளும் ஈசாவெனப்பணிந்தான்
காக்ககடனுனக்கு கார்வண்ணன்மைத்துனனே
இவ்வார்த்தைதான்கேட்டு ஈஸ்பரருமேதுசொல்வார்
நான்வேறுவிஷ்ணுவேறோ நானிலத்தில்கெந்தருவா
ஆயருக்குப்பகையாகி அருகேவரலாமோ
உன்னைநான்காத்தாக்கால் உலகளந்தாரென்னசொல்வார்
கார்வண்ணரெந்தனுக்கு கடிகிப்பகையாவார்
சாக்கவேமுடியாது கடக்கவேபோய்விடுங்காண்
பிரமதேவன்தன்னருகே போனீரேயாமானால்
அவராலேயாகுங்காணாதரிக்கவல்லபிரான்
என்றுஉரைத்தாராம் எண்டோளரப்போது
அழுதுபுலம்பியே அப்புரம்போய்புகுந்தான்
பிரமலோகந்தான்புகுந்து பிரமர்அருகில்வந்தான்
அபயமபயமையா யாதரிக்குங்கர்த்தாவே
என்னையேயாதரியும் என்றல்லோதெண்டனிட்டான்
ஆயுளைப்பார்த்தெழுதும் அரிபிரமனேதுசொல்வார்
ஆருக்குஅபயமாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்

ஆண்டவனேஜபாவே அப்பனேநீர்கேளும்
ஆகாயவீதியிலே அமகுரதமேறிவந்தேன்
அடைக்காயும்வெறறிலையும் அப்பா நான்மென்றுதின்று
வாசங்கள் தின்றுநான் மண்மேலே துப்பினேன்
மாயவனுர்கைதலத்தில் வந்துவிழுந்ததாம்
மாயன்வெகுகோபமாகி வரவிட்டார்சக்கரத்தை
என்னைவெகொல்லவென்று இபாய னுப்பினார்
ஆகையாலாண்டவனே யாதரிப்பிரென்றுவந்தேன்
எந்தனையா தரியும் என்றல்லோ அடிபணிந்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான் நான்முகனும்
நான்வேறுவிஷ்ணுவேறோ நானிலத்தில்கெந்தருவா
மாயருக்குப்பகையாகி வந்தாயேபாதகனே
உன்னையேயாதரித்தால் உலகளந்தாரெந்தனுக்கு
பொல்லாப்புநேர்ந்துவிடும் பெரும்பாவியெந்தனுக்கு
உன்னையேயாதரிக்க உத்வாதுளந்தனுக்கு
எமபுரமேகிநீ எமனுட னுரைத்தால்
எந்தவிதமாகிலும் எமனுன்னேக்காத்திடுவான்
கடிக்நடவுமென்று கைவிட்டார்பிரமதேவர்
அழுதுபுலம்பியே அதிவிரைவாய்த்தான்வாரான்
எமனருகில்வந்து இளைத்துப்புலம்புகிறான்
காலனுங்கண்டு கடுகவேயேதுசொல்வான்
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமமதைவாய்திறந்துசொல்லுமெனமுன்
அப்போதுகெந்தருவன் அவருக்கெடுத்துரைப்பான்
அந்தரமார்க்கத்திலே அமகுரதமேறிவந்தேன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்துதாம் மாயருடகைதலத்தில்
ஆகையால் கோபித்து அனுப்பினர்சக்கரத்தை
என்னைக்கழுந்தறுக்க எதிரிருகுதென்றான்
என்னையுமாதரியு மென்றனேகெந்தருவன்
காலனுங்கேட்டுமவன் கடுகியெடுத்துரைப்பான்
மாயருக்குப்பகையானுல் மன்னவனேகார்க்கலாமோ
மாயருடஊழியத்தை மன்னவனேசெய்திடுவேன்
உன்னையேகாத்தாலே உலகளந்தார்கோபமுற்றால்
எதிர்த்துப்புறப்பட்டால் எதிர்நிற்கப்போமோவேனே
காக்கமுடியாது கட்டழகாகெந்தருவா

உமாபதியோனும் அழகானதெய்வபிரான்
தேவேந்திரரருகில் சென்றுநீபோவிராகில்
காக்கவும்வல்லபிரான் கடிதுநீபோகுமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமவன் அழுதுபுலம்பிவாரான்
தெய்வலோகந்தனிலே தேவேந்திரரருகே
அபயமிட்டு அடிபணிந்தான் ஆனதொருகெந்தருவன்
ஆடாதம்பிரீ அரியவுரையுமென்றான்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவார்த்தை
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
வெற்றிலைப்பாக்கும் வால்மிளகுஜாதிபத்திரியும்
ஜாதிக்காய்எலரிசி சன்னலவங்கமுடன்
வாசங்களதின்றுநான் மண்மேலே துப்பினேன்
வந்துவிழுந்ததுதாம் மாயவனார்கைதலத்தில்
ஆகையாலெம்பெருமாள் அடியேன்மேல்கோபமாகி
சக்கரத்தையனுப்பியெந்தன் தலையையரியுமென
வருகுதுசக்கரந்தான் வல்லுயிரைவாங்கவென்று
கொல்லவருகுது கொப்பெனவேசக்கரந்தான்
ஆதரித்தென்னைரட்சி அனேககோடிமோட்சமுண்டு
என்றவுரைகேட்டு பேதுசொல்வாரிந்திரரும்
மாயருக்குப்பகையாகி வந்தவனை ஆதரித்தால்
எதிர்த்தாரேயானாலும் எதிர்நிற்கப்போறேனோ
மாயனுக்குச்சரியானோர் வையகத்தில்யாருமில்லை
உன்னையேயாதரிக்க உலகத்தில்யாருமில்லை
தருமருடதம்பியவன் தார்விஜயனர்ச்சுனன்தான்
அருச்சுனனுன்னை ஆதரிக்கவேமுடியும்
அபயக்குரல்கேட்டு ஆதரிப்பான்வாள்விஜயன்
ஆதிசிவனை அரனுருவந்தாலும்
எழுதும்பிரமாவும் எம்பெருமாள்வந்தாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்வந்தாலும்
ஆர்வந்தெதிர்த்தாலும் ஆரவாரம்பண்ணாலும்
அர்ச்சுனராஜனென் அனைவோரைவென்றிடுவான்
வாழ்விஜயனருச்சுனனும் வல்லமையுள்ளவன்காண்
அர்ச்சுனனைவாகோரி அபயமிட்டுப்போனீரானால்
ஆதரிப்பான்வாழ்விஜயன் திவிரைவிற்போய்ச்சேரும்
என்றவுரைகேட்டு எழுந்தானேகெந்தருவன்
அழுதுபுலம்பியே அர்ச்சுனனைத்தேடிவாரான்



பெருமாள் சக்கரத்துக்குப்பயந்து கெந்தருவன் அர்ச்சுனனிடத்தில் அபயமடைதல் பெருமாள் திரியோதனனுடன் கலந்து அர்ச்சுனனிடம்போர் செய்தல்.

கேடிபோ அபயம்விட்டு தேவலோகம்விட்டுவந்தேன்
ஆசரித்திராமனால் அவ்வவர்க்குக்கிட்டுமென
இவ்வார்த்தைதான்கேட்டு எழில்விஜயனர்ச்சுனனும்
என்னதுமெண்ணுகிறானென்னமனக்கலனாகிறு
மாமருக்குப்பகையாகி வந்தவனக்காக்கவோ (ன்
ஆயருக்குமைந்தனுக்கும் அடுத்தாற்பகையாமே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிவிசாரமிட்டு
ஐவர்சகாயரல்லோ ஆயர்பெருமானும்
நம்பினோனென்றவனை ரட்சிக்கவேணுமல்லால்
காக்கிறேனென்றுசொல்லி கைவிடலாகாது
ஆயர்பெருமானுக்கு அன்பானவார்த்தைசொல்லி
எந்தவிதத்திலேயும் இவன்றனைக்காக்கவேணும்
அல்லவென்றுகோபமிட்டால் அமராடுசெயதுணிவோம்
என்றுநினைத்தவனும் என்னசொல்வான்வாள்விஜயன்
திங்களுஞ்சூரியனும் தெற்குவடக்கானாலும்
அழகானதாமரையும் அடியிலேபூத்தாலும்
நறுக்கிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
நாவாலேசொன்னதெல்லாம் நான்தவறப்போறதில்லை
எந்தவிதத்திலேயும் இடறகற்றிக்காத்திடுவேன்
என்றல்லோயாதரித்தான் இபலானவாள்விஜயன்

அருச்சுனன் கெந்தருவனுக்கு பயந்தீர்க்க பெரு
மாளுக்கு கோபம்வந்து சக்கரத்தை
யனுப்புகிறது.

---

வருகிறசக்கரந்தான் மன்னுவின்னுங்கொள்ளாமல்
கண்கள்பொறிபறக்க கடுகிவருகுதே
அருச்சுனராஜனண்டை அருகேவந்துதெண்டனிட
என்னருகேகாரியமென் எங்குவந்தீர்சக்கரமே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றான்
சாமியனுப்பிவைத்த சக்கரமேதுசொல்லும்
மாயனுக்குப்பகையான மாபாவிகெந்தருவன்
அருச்சுனரேஉன்னிடத்தில் வந்தானரும்பாவி
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினார்மாயவரும்
ஆகையாலனுப்புங்காண் அருச்சுனரே அவன்தலையை
அறுத்தெரித்துயான்போறேன் அவனையனுப்புமென

கனந்தொனையப்போது சங்காத்தூக்கேது சொல்வான்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனவனை
மானந்தாரணர்க்கு பகையாளுமென்றறிவேன்
அபயமபயமென்றான் ஆதரித்தேனவனை
காக்கிறேனென்றுசொல்லி கைவிடலாகாது
ஆகையால்சக்கரமே ஆருக்குச்சேதிசொல்லும்
கோடிசரணம்நான் கும்பிட்டேனென்றுசொல்லும்
ஆயிரந்தெண்டனிட்டு அடிபணிந்தேனென்றுசொல்லு
சக்கரத்தாழ்வாரும் தார்விஜயற்கேதுசொல்லும் (ம்
ஆறுதல்போய்வாரேனென்று அப்போ திரும்பிவந்து
மாயவரைக்கண்டு வணங்கிநமஸ்கரித்து
ஆதிசிவனருகில் அபயமிட்டுஓடுகையில்
ஆதரிக்கமாட்டோமென்று அவரும்விலக்கிவிட்டார்
அருச்சுனர்தன்னருகில் போனானபயமிட்டு
வணங்கிநமஸ்கரித்து மாயாவுன்வார்த்தைசொன்னேன்
உனக்குப்பகையான உண்மையெல்லாம் நானுரைத்தேன்
எத்தனைசொன்னாலும் இரங்காமல் ஆச்சுனரும்
ஆண்டவனேயுன்னருகே அனுப்பினான்சொல்லுமென்
இவ்வார்த்தைகேட்கலுமே எம்பெருமான்கோபமாகி (று
ஆங்காரகோபமுடன் அரிராயரென்னசொல்வார்
ஜாமைக்காப்பதற்கு ஆண்டவனாய்நாமிருந்து
இத்தனைநாள்காத்திருந்தேன் இபாண்டுபஞ்சவரை
எனக்குப்பகையாளி தனக்குப்பகையல்லோ
ஆதரிக்கநாயமுண்டோ அரியானேனென்சமர்த்தை
மறுக்காதொருதரம்நீ வாள்விஜயனருகிற்சென்று
நானுரைத்தவார்த்தையெல்லாம் நல்விஜயனுக்குரைத்
மாயவர்க்குவேண்டாத மாபாவியானவனை (து
விட்டுவிட்டாலல்லாது வேணபகையாகுமென்று
குருகுலவம்மிசத்தார் கூட்டோடழியுமென்று
தொல்லைநினைப்பார்காண் குடிகேடுவருதுமென்று
சொல்லிப்போவாருமென்று சொன்னாரேமாயவனார்
அப்போசக்கரத் தாழ்வாருந்தானடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
அருச்சுனராஜரண்டை அருகேவந்துதெண்டனிட்டு
மாயவனார்சொன்னதொருவார்த்தையொன்றுந்தப்பாமல்

காண்டீபனருச்சுனற்குக் கரியமால்சேதியெல்லாம்
உண்டானவார்த்தையெல்லாம் ஒளியாமலேயுரைத்தான்
காண்டீபனருச்சுனரும் கடுகியேயேதுசொல்வான்
வசதிரனென்கந்தருவன் ஏழையானுன்னடியேன்
வாள்விஜயனருச்சுனன்மேல் வன்பனைபுகுந்தனுக்கேன்
ஏதுகுற்றமானாலும் எனக்காகமனப்பொறுத்து
ஆயிரந்தெண்டன் அடிபணிந்தேனென்றுசொல்லும்
காக்கிறேனென்றுசொல்லி கைவிடஞாயமுண்டோ
நதிக்கிப்பிடித்துவென்னை நரகத்திற்போட்டாலும்
கைவிடான்விஜயனென்று கண்ணனுக்குநீயுரையும்
ஊழியுள்ளகாலமட்டும் உனைமறவானருச்சுனனும்
வணங்கினனென்றுரையும் மாயருக்குநீ தாழும்
அனேககோடிநமஸ்காரம் அருச்சுனன்செய்தானென்று
தாமோதரன்றனக்கு சக்கரமேபோய்ச்சொல்லும்
சக்கரமேபோய்ச்சொல்லும் சரணஞ்சரணமென்று
சொல்லித்தொழுதானே சுவாமிபெருமானை
சக்கரத்தாழ்வாற்குத் தனஞ்சயன்விடைகொடுக்க
சக்கரத்தாழ்வாருந் தானுமங்கேபோய்நடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைதாண்டி அதிகனைந்தாண்டி
மாயருகில்வந்து வணங்கியேதெண்டனிட்டு
வாள்விஜயன்சொன்னதொரு வார்த்தைகள்தானுரைக்க
ஆயரவர்கேட்டு ஆங்காரக்கோபமதாய்
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்பிறந்ததென்ன

சக்கரம் அருச்சுனன் மனமறிந்து பெருமானுக்குச்
சொல்ல பெருமான்கோபித்து சாத்தகியை
அனுப்புகிறது

---

கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
வேண்டாங்காண்வாள்விஜயா வீண்பகைதேடாதேயென்
அருச்சுனற்குச்சொல்லி அதிவிரைவிலோடியந்த
கெந்திருவனதன்தலையை இந்தக்ஷணமறுத்து
ஒருக்ஷணப்போதையிலே உத்தரவுகொடுமென்றும்
என்றவுரைகேட்டு எழுந்துநடந்தாராம்
காடுசெடிங்கரியமலைதான்கடந்து

அருச்சுனன்தானிருக்கும் ஆரணியம்போய்ச்சேர்ந்தான்
அருச்சுனனைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டான்
மாயனுரைத்ததொரு வார்த்தையொன்றுந்தப்பாமல்
ஒன்றுமொளியாமல் உரைத்தாரேசாத்தகிதான்
அரிராமர்சேதியெல்லாம் அருச்சுனன்தான்கேட்டு
எத்தனைவார்த்தைக ளிரக்கமாய்ச்சொன்னாலும்
இங்காயன்மாயவரும் எதிர்க்கவும்ஞாயமுண்டோ
ஆயன்பெருமாளும் அறியாரோஎன்சமர்த்தை
பெண்டுகள்பேச்சுகளோ பேசுகிறுரெம்பெருமாள்
கைவலுமையுண்டானால் கடுகிவரச்சொல்லும்
மூலையிலேதாமிருந்து மொருகிறதுஞாயமுண்டோ
மைதானவெளியிலே வரச்சொல்லுஞ்சண்டைபண்ண
காக்கிறேனென்றவனை கைவிடப்போறேனோ
மாயவருடனேநமயேஸ்வரனுர்வந்தாலும்
பெருமாளுடனேகூட பிர்மதேவர்வந்தாலும்
எவரெதிர்த்துவந்தாலும் இளப்பேனென்றுபாராதே
போவென்றுசொன்னான் போர்விஜயன்கோபமதாய்
சாத்தகியாழ்வாருந் தானடந்தானபொட்டெனவே
ஆயாருகில்வந்து அடிபணிந்துதெண்டனிட்டான்
அருச்சுனன்சமர்த்துகளும் ஆண்மைகள்பேசினதும்
சண்டைக்குமுஸ்தீப்பாய் தான்வரச்சொன்னதுவும்
அவ்வார்த்தைசொல்லுகையில் ஆயரும்கோபமுற்று
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரியாகுதுபார்

அருச்சுனன்மேல் பெருமாள் கோபமாகி சண்டைக்குப்
போக திரியோதிரனை வரவழைக்கிறது.

---

கோபம்பெரிதாச்சு கோபாலமாயருக்கு
சாத்தகியைத்தானழைத்து சாமியாரேதுசொல்வார்
திரியோதிரனுற்குச் சேதியுரையுமென்றார்
மாயவற்குப்பகையானுர் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
ஐவரைக்கொல்லவென்று ஆயர்பயணமிட்டார்
உன்னுடையசேனைகளும் யுத்தமானராஜர்களும்
சேரத்துணையாகச் செப்பிவரச்சொன்னார்காண
வாருங்களென்று வரவழையுந்திரியனைத்தான்
இப்போசமயம் இதோபயணம்வாங்களென்று

நாகக்கொடிவேந்தன் ராஜாவைபறையுமென்றார்
சாத்தகியாரும் சரணமிட்டுப்போய்நடந்தார்
ஹஸ்திநபுரத்துக்கு அடைவுடனேபோய்ச்சேர்ந்து
திரியோதிரனுறகுச் சேதிகள்சொல்லலுற்றார்
ஐவரைக்கொல்லுகைக்கு ஆயர்மனதாகி
அழைத்துவரச்சொன்னார்காண் அரவக்கொடியோனே
வருவீரோமென்றுசொல்லி வாய்மொழிகேட்கலுற்றார்
சாத்தகிசொல்லலுமே சர்ப்பக்கொடியோனும்
திரியோதிரன்கேட்டு சிந்தைமனங்குளிர்ந்து
ஐவரைக்கொல்லுகைக்கு அதிகமனதாகி
நல்லசமயம் நமக்குக்கிடைத்ததென்று

திரியோதிரன் பெருமாளிடம் வருகிறது.

---

அங்கேநட்டான்சண்டாவை அடியுமென்றான்பேரிகை
இன்றுவெளிக்கூடாரம் இப்போதுபோடுமென்றான்[யை
கானலுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
யானையின்மேல்டங்காவும் குதிரையின்மேல்டேராவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைசெவிடுபட
யானையுஞ்சேனையுடன் அரசுமன்னர்பயணமிட்டார் (ர்
துரியோதிரன்தம்பிமார்கள் தொண்ணூற்றுஒன்பதுபே
கருணன்சகுனியும் காந்தாரிபிள்ளைகளும்
துரோணரசுவத்தாமன் சொற்பெரியகாங்கையனும்
கிருபன்கிருபசாரி கீர்த்தியுள்ளமன்னர்களும்
பிள்ளையவன்லக்குணனும் பேர்மிகுந்தமந்திரியும்
மற்றுஞ்சிலராசர்களும் மந்திரிகள்பயணமானார்
அமரதருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
எண்ணூறாகு ஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
நாலுபக்கத்திலுள்ள ராசாக்கள்சேனையுடன்
கார்மேகம்போலே கறுத்தானைக்கூட்டம்வரும்
மேகத்துமின்னலைப்போல் வெள்ளானைகூட்டம்வரும்
வானத்துமின்னலைப்போல் பணிர்தோசைந்துவர
செவ்வானம்போலே சிவந்தபுலிகளும்

அச்சுகிறுகிறென்ன யானைநெடுந்தேரசைய
வண்டிக் கிறுகிறென்ன மதயானைகோஷ்டமிட
குதிரைகளைக்குமங்கே கொக்கரிக்கும்பாளையங்கள்
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள் ரணங்களென்று ரணபேரிதான்முழங்க
தேர்களசைந்துவரச் சிகரக்கொடிபறக்க
மாயவனூர்பட்டணமே வாரார்களெல்லோரும்
அங்கேநட்டான்சண்டாளை அங்கிரங்கிப்பாளையங்கள்
திரியோதிராஜன் ஸ்ரீகிருஷ்ணரருகில்வந்து
மாயவரைக்கண்டு வணங்கிபேதெண்டனிட்டான்
வழுலகமுண்டசாமி எம்பெருமானேதுசொல்வார்
மாநாகங்கொண்ட மகாராஜா! நீர்கேளும்
காலையில்தானெழுந்து கனிவாய்முகங்கழுவி
தினகரனைத்தோத்தரித்து செய்தேன்ஜெபதபங்கள்
ஆகாயவீதியிலே அரும்பாவிகெந்தருவன்
வாசங்கள் இன்றுமெந்தன் வலதுகையில்தானுமிழ்ந்தா
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினேன்சக்கரத்தை (ன்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனராஜனவன் ஆதரித்துக்கொண்டானும்
ஆகையாலருச்சுனனை அதமாக்கவேணுமென்று
உந்தனுக்குசேதிசொல்ல உரகதனேவாருமென்றேன்
என்வார்த்தைதள்ளாமல் என்மேல்தயவாகிவந்தீர்

ஐவரையுங்கொல்ல திரியோதிரனும் அவன்சேனை
களும் எம்பெருமாளும் அவர்சேனைகளும்
சண்டைக்கு வருகிறது.

---

ஐவரைக்கொல்லுகைக்கு அனைவரும்போவோமென்றார்
பயணம்பயணமென்று பயணபேறியடியுமென்றா
அமரகரும்சமாதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் சன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
அந்தண்டராணுவமும் அல்லவரும்பாணமென்று
துரோணரசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்

கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றமன்னனுமே
எண்ணன்கு ஆயுதங்கள் எடுக்கரைபிற்கட்டினார்கள்
ஏறினார்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
தேரணியுமாவணியும் சேனைத்திரளுடனே
வாரணங்களெல்லாம் மட்டுமிதங்களில்லை
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
வனமாய்வனங்கடந்து வருகுதுபாளையங்கள்
தினகான்வனந்தனிலே சேர்ந்தார் துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னர்வந்தார்கள்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தாரன்னேரம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காமதேனுபர்வதத்தில் கடுகிவந்தார் துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
கெந்தமாபர்வதமே கிட்டிபோனார்கள்
ஒற்றனொருவனை ஓடியேசொல்லுமென்றான்
துரியோதனன்படையும் ஸ்ரீகிருஷ்ணசேனைகளும்
வருகிறாரென்றுசொல்லி வாள்விஜயனுக்குரையும்
என்றுசொல்லிபர்ச்சுனற்கு அனுப்பினான் தூதுவனை

## அருச்சுனற்கு எம்பெருமாள் சண்டைக்குவருகிறா னென்று தூதனிடம் சொல்லியனுப்புதல்.

---

ஓடினான் தூதுவனும் ஒருநொடியிற்போய்ச்சேர்ந்தான்
அர்ச்சுனராஜனுக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மாயனும்உரகதனும் வருகிறார்சண்டைபண்ண
எச்சரிக்கையாகவே இருமெனறார்எம்பெருமாள்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தானருச்சுனனும்
தருமராருகில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
அண்ணர்தருமருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மச்சுரதமேறி வருகிறவேளையிலே
வாசங்கள் தின்று மண்மேலேதுப்பினான்
அவனுமிழ்ந்ததம்பலங்கள் அரிராயர்கையில்விழ
மாயனெம்பெருமாளும் மகாகோபத்தானாகி

சக்கரத்தைவிட்டார்காண் தலையைத்தரிக்கவென்று
அபயமபயமென்று அலறிப்புலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனவனை
ஆதரித்தேனென்றுசொல்லி அமர்செய்யவந்தாராம்
ஜோனைக்கொல்லவென்று அரிராமர்வாறாராம்
மாயருடன்சண்டைபண்ண வாரீரோஅண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுரைப்பார்தருமருமே
போருக்குமாயருடன் போகாதேதம்பியென
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
அஞ்சாதேதம்பியரே அதமாக்கிப்போட்டிடுவேன்
திரிபோதிரன்படையு ஸ்ரீராமர்சேனைகளும்
எல்லோரையுங்கொன்று எமலோகஞ்சேர்த்திடுவேன்

வீமனும் அர்ச்சுனனும் சண்டைக்குப் புறப்படுகிறது.

---

என்றுமதவீமன் எழுந்தானேகோபமுடன்
தருமரையுந்துரோபதையுந் தம்பிமாரிருவரையும்
அபயமிட்டகெந்தருவன் அவனையுந்தானழைத்து
உச்சிமலைநடுவே உள்ளேகுகையிருக்கும்
அந்தகுகையிலே அனைவோரும்போயிருங்கள்
வந்ததிரளையெல்லாம் மண்ணுக்கிரையிடுவோம்
எம்பெருமாள்சேனைகளை எமலோகஞ்சேர்த்திடுவோம்
எச்சரிக்கையாகவே இருமென்றானப்பொழுது
அப்படியேதருமரவர் அதிவிரைவாய்கதானெழுந்து
உச்சிமலைநடுவே ஒருகுகையிற்போயிருந்தார்
வீமரருச்சுனரும் விரைவாகத்தானெழுந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெறிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமேல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
அம்புவில்லுந்தானெடுத்து ஆயுத்தப்பட்டார்கள்
வடக்குமுனையிலே மதவீமன்வந்துநின்றான்
தெற்குமுனையிலே தேர்விசயன்வந்துநின்றான்
வருதுதுபாண்டவர்கள் மண்ணுவின்னுங்கொள்ளாமல்

ஆனைகுதிரைரதம் அளவில்லாச்சேனைகளும்
வருகிறஜனங்கள்தனை மாயவனார் தானழைத்து
திரியோதிரனுரை சேரவரவழைத்து
உன்னுடையசேனைகளை உகமையுள்ளராசர்களை
சமரதுசெய்யவந்த சமர்த்துள்ளமன்னர்களை
ஆனைகுதிரைகளும் அரசுமன்னருள்ளவரும்
மாவணியுநதேரணியும் மற்றுமுள்ள ராணுவமும்
உன்னுடையபாளயத்தை ஒன்றாகவேகூட்டி
வடக்குமுகத்திலே மகவீமன தன்மேலே
சண்டைபோய்செய்யுமென்று தான்சொன்னார் திரியனுக்கு
தெற்குமுகத்திலே தேர்விஜயன் தன்னருகே (கு
என்னுடையசேனைகளெல்லோரும்போயெதிர்த்து
அருச்சுனன்றன்னுடனே அமரதுசெய்திடுவோம்
என்று அனுப்பிவைத்தார் இபலானமாயவரும்
தவளச்சங்கூதினார் சண்டைக்குவாரேனென்று
ஊதினார்சின்னமய உலகளந்தார்பாளயத்தில்
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
செந்துளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்துளெழும்புகுது கதிரோனைகப்புகுது
வந்துஎதிர்த்தார்கள் வாள்விஜயன்றன்னுடனே
அந்தசமயத்தில் அரவக்கொடியோனும்
தன்னுடையசேனையுடன் தான்வடக்குத்திசைதனிலே
வந்துஎதிர்த்தானே மதயமன்தன்னுடனே
எண்ணெணச்சேனையுடன் எச்சரித்துதான்வளைத்தார்
சிங்கநாதந்தானூதி சேனைகளும்கொக்கரித்தார
கண்டான்மதயமன் கண்கொள்ளாச்சேனைகளை
எல்லவரைக்கொல்லவென்று எழுந்தான்மதகரியான்
கோபம்வருகுது கொற்றவனார் மனுக்கு
அவ்வரிககண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுது
கண்ணையுருட்டிக் கதும்பினான் சேனைகளை
எட்டினான்கல்மலையை எகிறவிட்டான்பாளயத்தில்
மலைகளைத்தான்பிடுங்கி மதவீமன் வீசுகிறான்
குன்றுகள்சேர்த்தெடுத்துக் கொப்பெனவேபோடுகிறான்
ஆனைகுதிரைகளும் அறிக்கலங்கிடும்பம்
அச்சுகளுந்தான்முறிந்து அனேகரதம்விழுமாம்

வண்டிற்முறிந்துசில மச்சுகேர்தாறெடியும்
ஜெனங்கள்மடியுது செர்புரவிஓடுகுது
கண்டங்கண்டமாகுது கடுந்சேனைபத்தனையும்
அம்மாடிபென் றுசொல்லி அலையுதுபாளையங்கள்
செத்தஜெனங்களென்றால் மட்டுமிதங்களிலே
ரத்தாறுஓடுகுது ரணங்கள்மிகக்கொப்பளிக்க
ஐயோசிவனேயென்று அலையுதுபாளையங்கள்
பார்த்துமுடியாது பாவியுடஜனங்கள்
சொல்லிமுடியாது திரிபோதிரன்பாளையங்கள்
இந்தவிதமாக ஏழில்வீமன்கொல்லுகிருன்
இப்படியாக இவ்ரசண்டைபண்ணுகையில்
ஆறுமருமன்னன் அருச்சுனன்தன்னுடனே
வந்துஎதிர்த்தாரே மாயர்பெருமாளும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
மார்பிரளத்தாவெடுத்து தோளபிரளவாங்கிவிட்டான்
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
சொர்ணமழைபோலே சொரிகிருர்பாணமது
சங்கரன்மாரிபோலே சரமேற்சரம்விடுத்தார்
அருச்சுனன்பின்னிடையான் அகோரச்சரம்பொழிந்தா
ஆகாயந்தன்னளவாய் அம்பாலேபந்தலிட்டு (ன
சூரியனைத்தான்வளைத்தான் சூராதிசூரனவன்
வில்பிடித்தகைத்தலத்தில் மெத்தசிவப்பேரும்
வளைத்தவில்நிமிராமல் மாரிச்சரப்பொழிந்தார்
வாயுவினஸ்திரமும் வருணஸ்திரமும்விட்டார்
பின்னையும்அஸ்திரங்கள் பிரளயமாய்த்தான்விடுத்தார்
நாலுகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணுர்
ஒருவற்கொருவர் உகந்துபின்வாங்காமல்
சண்டையமர்க்களத்தில் தாக்கிப்பொருதலுற்ருர்
விலக்குவாரில்லை மிகுந்தசமாதனை
மாயன்பெருமாட்கு வருகுதுமெத்தகோபம்
என்றுமில்லாக்கோபம் எழுப்புதுமாயருக்கு
விட்டதொருபாணமெல்லாம் மட்டறுத்தான்வாள்விஜய
அருச்சனனைக்கொல்ல அரிராமர்கோபமதாய் (ன்
சக்கரத்தைதானெடுத்தார் சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலர்அர்ச்சுனனை
மதித்துமதியிட்டு மாயவனுரேதுசொல்வார்

அருச்சுனன்தன்சிரசை அரைநொடியில்வாங்குமென்று
கூற்றியெடுத்தாரே சுவாமியுஞ்சக்கரத்தை (ர்
கண்டார்னேவாள்விஜயன் காந்தாளமாபெரும்பி
தானுமெடுத்தானே தன்னுடையசக்கரத்தை
சக்கரத்தைமந்திரித்து சாமியைக்கொல்லவென்று
எடுத்தானேசக்கரத்தை இமையோர்கள் தானறிய
சக்கரத்தைமந்திரித்து சாமியைக்கொல்லவென்று
வாவென்றழைக்க வகையறியானருச்சுனனும்

சாமிபெருமாள் சக்கரமெடுக்கத் தனஞ்சயன்
பதில்சக்கரமெடுக்க இருவரும்
சமாதானமாகிறது.

---

கண்டார்பெருமாளும் கனமோசம்வந்ததென்று
நாமல்லோகற்பித்தோம் நல்விஜயனர்சகுனர்க்கு
சக்கரத்தைவிட்டாக்கால் தானழைக்கவகையறியான்
சக்கரம்வந்துதானால் தலையைத்தரித்திடுமே
மோசம்வருகுதென்று முகில்வண்ணரேதுசெய்வார்
தன்னுடையசக்கரத்தை சாமியார்தேரில்வைத்தார்
தேரைவிட்டிறங்கினர் ஸ்ரீராமர்பொட்டெனவே
கண்டானே அருச்சுனனும் கடுகியிறங்கினான்
தேரைவிட்டுத்தானிறங்கி ஸ்ரீராமக்கெதிரானான்
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்

எம்பெருமாளும் அர்ச்சுனனும் சமாதானமானதை
திரியோதிரன்கண்டு பொறாமைப்பட்டுச்
சொல்லாமல் ஓடுகிறது.

---

கண்டான்திரியோதிரன் கரியமால்மோசமதை
தனஞ்சயனுமாயனுமே தழுவிவிளையாடுவதை
எண்ணுதுமெண்ணினான் எரிநாகங்கொண்டவனும்
மாயன்கெடுத்தானே வஞ்சனைகள்செய்தானே
பொல்லா நினைவுகொண்டு பெருமாளழைத்துவந்தான்
நம்மையேகொல்லவென்று நாரணரழைத்துவந்தார்
அறியாமல்வந்துவிட்டோம் அமரதுசெய்வோமென்று
மாயனைநம்பி வருவதுநீதியல்ல
ஐவர்சகாயரென அவனியதிற்கேட்டிருந்தும்

உம்மையேதெய்வமென்று உயிர்கொண்டுலாவுகிறோம்
என்றுவணங்கினர் இபலானதருமரவர்
உள்ளங்குளிர்ந்துமே உலகளந்தாரேதுசொல்வார்
அருச்சுனனைத்தான்பார்த்து அரிராமரேதுசொல்வார்
சென்றதுஉன்சபதம் தேவேந்திரன்மகனே
அபயமிட்டபேர்களைத்தா னுகரிக்கவல்லபிரான்
செப்பியதுதான்தவறுமோ் தேவேந்திரன்மகனே
மார்க்கண்டனுக்காக மயேஸ்வரன்சொல்லிவிட்டார்
நிலையறியார்பரமசிவன் நிலையறிந்தான்நாமறியோம்
உன்னிலும்வல்லபிரான் உலகத்திலாருமில்லை
சந்தோஷமாச்சுது காமர்பஞ்சபாண்டவரே
இந்தவனம்விட்டு இனியவனம்போயிருங்கள்
ஏதுவினைவந்தாலும் என்னைநினைந்திடுங்கள்
போய்வாரேனென்று பெருமாளெழுந்திருந்தார்

எம்பெருமாள் விடைபெற்று தன்னிருப்பிடம்
செல்லுகிறது.

---

ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
காடுசெடியும் கரியமலைதான்தாண்டி
மாயனுர்போனபின்பு வாள்விஜயனேதுசொல்வான்
வாராய்நீகெந்தருவா வார்த்தையொன்றுநீர்கேளும்
உன்-ஆபத்துதீர்ந்தது ஆண்மையுள்ளகெந்தருவா
உந்தனரண்மனைக்கே உளமகிழ்ந்துபோய்ச்சேரும்
என்றுவிடைகொடுத்தார் எழில்விஜயனர்ச்சுனனும்
அப்போகெந்தருவன் அருச்சுனற்குத்தெண்டனிட்டு
நான்செய்தபாவத்தை இராஜாவேதீர்த்துவிட்டீர்

கெந்தருவன் அருச்சுனர்கையில் விடைபெற்றுக்
கொண்டு தன்னிருப்பிடம்போய்ச் சேருகிறது.

---

ஆபத்தைத்தான்தீர்த்து ஆதரித்தீர்வாள்விஜயா
உனக்கேதுநான்தருவேன் உயிர்க்கேத்தராஜாவே
பாராசாரிவெண்புரவி பஞ்சவர்ணநற்புரவி
சாகாப்புரவிநான் தாரேன்கொண்வாள்விஜயா
உந்தன்ரதத்திற்கு உற்றபுரவியொன்றுண்
ஆணழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்

வனவாசந்தீர்ந்துதாங்கள் வந்தபிறகாக
அப்போதுவேணுமென்று லப்புரவிதானனுப்பும்
எந்தன்மேல்தயவு நீ என்றும்மறவாதே
போய்வாருமெனறுசொல்லி புண்ணியருங்கூறினார்
மாயனைனும்கெந்தருவன வணங்கிபேகெண்டனிட்டு
போதச்சரணமென்று போய்நடந்தான்கெந்தருவன்
ஏழாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
இந்தக்கதைதன்னில் இடறுகளுண்டானால்
ஜகத்தினிலுள்ளவர்கள் சரியாகயிக்கதையை
இகழ்ச்சியாயுள்ளதெல்லாம் புகழ்ச்சியாய்தான்திருத்தி
அகத்தினிற்றான்பொருத்தி அன்பாகத்தான்படித்தால்
சுகத்துடன்தான்வாழ்ந்து சுவர்க்கபதிசேர்வார்கள்
இந்தப்படியாக வெப்போதும்வாழ்ந்திடுவார்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாயவனாப்போது
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்

ஏழாவது கெந்தர்வ பர்வதம்

முற்றிற்று

---

# 8-வது: குருபர ரிஷிவனம்.

---

எட்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமாடு வனவாசம்போனார்கள்
குருபரிஷிவனத்தில் குடித்தனமாய்ப்போனார்கள்
அந்தவனத்திலே ஐவர்குடித்தனமாய்
ஐந்தடுக்குபர்னசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலைமேலாகப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாட்சென்றபின்பு

## துரோபதை வனசாரிவந்து பாரிஜாதபுஷ்பம் கேட்கிறது

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
ஒற்றையொருநாளில் ஒண்டியாய்த்துரோபதையாள்
அந்தனைத்தின திசயத்தைப்பார்த்துவர
வரத்திற்பெரியவராம் மகாரிஷியானவராம்
யோகத்திற்பெரியவராம் உத்தகுருபராஷியும்
சாமியிலும்பெரியவராம் தவத்திலமிகுந்தவராம்
அவர்பூசை பண்ணுந்தீர்த்தம் பொய்கைபோலாகுது
ஒடுமந்சலத்திலே ஒதுங்கிவரும்பூமலரும்
பாரிசாதபூமலரும் பரிமளமாய் சுகுது
ஆற்றிலடித்துக்கொண்டு அலைந்துவருகுது
கண்டாளே துரோபதையாள் கடிமனது கொண்டாள்
மெத்தஆசைபட்டாளே வேல்பொருந்தும் கண்ணாளும்
என்னுதுமெண்ணுகிரு வெண்ணிற துரோபதையும்
ஆரோடேசொன்னுலே ஆகும்இந்தகாரியங்கள்
எவரோடேசொன்னுலே எடுத்தளிப்பாரிம்மலரை

## துரோபதை பீமனைப் புஷ்பம் கேட்கிறது

வெற்றிமதயானை வீமருடன்சொன்னுமானல்
பறித்துதருவார்காண் பரிமளத்தைநாமறிய
என்றுநினைந்தாளே இளங்கொடி துரோபதையும்
டர்ணசாலைமேலாகப் பாஞ்சாலிவோடிவந்து
வெற்றிமதயானை வீமனைத்தான்பார்த்து
ஏலபசுங்கிளியாள் இளங்கொடியாளே துசொல்வாள்
ஆண்ணவனேஐயாவே அடிபேருலின்னைப்பம்
காணுதுகண்டேன்காண் கண்டாசைபட்டுவந்தேன்
பாராதுபார்த்துவந்தேன் பார்த்தாசைப்பட்டேனையா
என்மனதுக்கேறறபடி எனக்குவிடை தாரும்
வெற்றிமதயானை பீமரவரே துசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணே பச்சைப்பசுங்கிளியே
ஏதுநினைத்துவந்தாய் எனக்குரியச்சொல்லுமென்றூர்
தோராவடிவழகி துரோபதையாளே துசொல்வாள்
அகிலாண்டகாவேரி ஆறென்றுதான்வருது



வீமன் பாரிஜாதமலர் கொண்டுவரச் செல்லல்.

ஆற்றங்கரையருகில் அங்கொன்றுதான் வருது
பரிமளத்தோடிருக்குது பார்க்க வந்தேன் பாரிசாதம்

### பீமன் பாரிஜாதபுஷ்பங் கொண்டுவரப்போகிறது

---

வெற்றிமதயானை பீமனெழுந்திருந்து
இங்கேயிருப்போமண்ணே என்றெழுந்திருந்து
நண்டியின்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடையாம்
மண்ணியின்கால்களுக்கு மாகளிப்பூச்சல்லடையாம்
குந்தியின்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடையாம்
துக்கிளைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடையாம்
கட்டிவரிந்துகட்டி காமனைப்பூச்சுருக்குவிட்டு
தெண்டாயுதமெடுத்து சிலைவீமன்வாரானே
ஆற்றங்கரைபோறம் அங்குவீமன்வாரானே
பூமரத்தைத்தேடியே போறானும்வீமனவன்
யோசனைக்குயோசனை உயரமுள்ளபூமரமாம்
இதுவென்னசிறுமமாம் இட்சணமேகொண்டுவாரேன்
எழுநற்றுவேலிகளாம் இருபக்கமாமலையாம்
மாமலைகன்னரிலே வல்லனுமார்காவலதாம்
பூவனத்திற்போகவென்று போகையில்வீமனவன்
வாசற்படியிலே வல்லனுமார்படுத்திருந்தார்
கண்டாரனுமாரும்கரிவீமனைப்பார்த்து

### வீமனுக்கும் அனுமாருக்கும் சண்டையாகிப் பின்பு சமாதானப்படுதல்,

---

ஆரடாராட்சனே அஞ்சாமற்போகவந்தாய்
இந்தவனத்திலே யேதுக்குபோறாயென்றார்
போகவிடேனென்றானே போரனுமானப்போது
வெற்றிமாதயானை பீமனுந்தான்கேட்டு
கோபம்வருகுது கோலாகல பீமனுக்கு
சாணுண்டுஇக்குரங்கு சடைப்படுத்துதென்று சொல்லி
கைகளிரண்டும்நீட்டியே கட்டழகன்பீமனவன்
கோடையிடிபோலே குத்தினான்நடுமுதுகில்
அந்தஅடிச்சத்தம் அந்தவனங்கிடுகிடென
அந்தவனத்திருந்த அநேகமிருகமெல்லாம்
பறுகாலொருவனத்தே மருண்டோடுதேமிருகம்

அனுமாருடரோமங்கள் வியர்த்துகொடுத்ததுகாண்
கோபம்வருகுது கோபாலதூதுவற்கு
என்னையடித்தவனை இப்பொழுதேகொன்றிடுவேன்
என்றுசொல்லித்தானெழுந்து நின்றானேநல்லனுமானை
அடித்தானே வீமனை அடியானது இடிபோல
கோடையிடிபோல குத்தினன்மார்கலங்க
அந்த அடிபட்டவுடன் அங்கேகளைத்தானும்
மண்மேல்விழுந்தானும் மல்லாத்தபாவனையாய்
விழிகள்பிதுங்கியே விழுந்தானே மூர்ச்சையதாய்
மாண்டவன்போல மண்மேல்விழுந்தானே
அநேகநெடுநேரம் ஆனபிறகாக
மூர்ச்சைதெளிந்து முடிமன்னன்தானெழுந்தான்
கண்டானே நல்லனுமான் நடுங்கியவனே துரைப்பான்
என்னுடையசண்டையிலே எவரும்பிழைத்ததில்லை
இவன்-ஆரோவொருவன் ஆங்காரமுள்ளவன்காண்
அடித்தஅடிபோடே அவனியில்விழுந்தவன்காண்
தவறியெழுந்தவன்தான் தப்பிப்பிழைத்தானே
என்றுமனதிலெண்ணி இவனனுமானே துரைப்பான்
ஆரடாராட்சதனே ஆங்காரமுள்ளவனே
ஆரென்றிருந்தீர்தான் அரிராமர்தூதரல்லோ
லங்கைபழித்தவன் நான் ராவணனைக்கொன்றவன்காண்
அஞ்சனாதேவிபெற்ற அனுமந்தன் நானலவோ
என்னோடெதிர்த்து இனிப்பிழைக்கப்போறீரோ
என்றவுரைகேட்டு இப்பலவானவீமனவன்
உற்றதுகேட்டு மெத்தப்பயந்தவனும்
அண்ணனென்றறியாமல் அமரதுசெய்தோமே
என்று-பச்சைத்தழையுருவி பாதத்திற்றான்போட்டு
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
கண்டந்தநல்லனுமார் கடுகியே ஏதுரைப்பார்
ஆடாதம்பிநீ அறியவுரையுமென்றான்
உன்-ஊரேதுபேரேது உன்னுடையபேரென்ன
ஆருடையபுத்திரன்காண் அரியவுரையுமென்றான்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
என்தகப்பன்வாயுராஜர் என்தாயார்குந்தியம்மாள்

மந்தாரக்குந்திபம்மாள் பெற்றெடுத்தமகாராஜன்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலமணிகளைவருண்டு
தருமராஜர்தம்பி தாக்குடையவீமனெனபேர்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான் நல்லனுமான்
உத்தமனேநாமிருவர் ஒக்கப்பிறந்ததினுல்
என்னுடையசண்டைக்கு எவருந்பிழைக்கவில்லை
தம்பியென்றதாரசையினுல் தப்பிப்பிழைத்தீரே
மாளாமல்நீபிழைத்தாய் மதவீமனுசையினுல்
என்று-ஒருவர்க்கொருவர் உறவாடித்தான்பேசி
ஏதுவகையாக இங்குவந்தாய்தம்பியரே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
வெற்றிமதயானை வீமராமரேதுசொல்வார்
இந்தவனமதனில் வந்தோம்வனவாசம்
பாஞ்சாலன்பெற்றமகள் பஞ்சவர்ண நறகிளியாள்
பாரிஜாதபூமலரைப் பார்த்தாசைப்பட்டாளாம்
காணுதபூமலரைக் கண்டாசைப்பட்டாளாம்
பாரிஜாதபூமலரைப் பறிக்கவென்றுஇங்குவந்தேன்
வேண்டுவந்தபூமலரை வேல்வேந்தேதாருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுமந்தனேதுசொல்வான்
குருபாரிஷிவனத்தில் கோடியுண்டுகாவலர்கள்
எழுலட்சங்கிங்கிலியர் இவ்வனத்திற்காவலுண்டு
இத்தனைகாவலிலே எப்படிக்குப்போய்வருவாய்
அந்தரிஷியறிந்தால் ஆக்கினைசெய்திடுவான்
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
ஆருமறியார்கள் அவருடையபுஷ்பவனம்
என்னசெய்வேன்தம்பியரே எப்படிப்போய்நீவருவாய்
உனைவால்முனையில்கட்டிநான்வனத்திலேவிட்டிடுவேன்
ஆருமறியாமல் அம்மலரைநீபறித்து
வாலைபசக்கிவிட்டால் எடுத்துநான்வந்திடுவேன்

வீமன் அனுமான்வாலின் வழியாகச்சென்று
ராட்சதரையெல்லாங் கொல்லுகிறது.

---

என்று-வாலிலேகட்டினன் மதகரியான்பீமனைத்தான்
வாலைக்கிளப்பி வனத்திலேபோகவிட்டான்
இந்தபுதுமை எல்லாமறியவென்று

வாலையபவிழ்த்தானே மதகரியானப்போது
அசக்கிவிட்டானென்றுசொல்லி அனுமாரும்வாங்கினார்
பீமனைக்காணாமல் மெத்தமனந்தளர்ந்தார்
ஆயாசப்பட்டு அனுமந்தன் தானிருந்தார்
வெற்றிமதயானை பீமனவனேதுசெய்தான்
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கவென்று
சுற்றிவருகிறான் சுந்தரமாயவ்வனத்தே
மல்லிகைமுல்லை மலரோடுசெண்பகமும்
பாரிசாதபுஷ்பமங்கே பரிமளம்வீசுகுது
வீசுகின்றபுஷ்பமரம் வேருடனே தான்பிடுங்கி
படுத்துப்புரண்டானே பரிமளத்தைத்தானறிந்து
அந்தவனமெல்லாம் அதம்பண்ணுனப்போது

பூமரங்களை பீமன் அதம்பண்ண காவலர்கண்டு
சண்டைபண்ணி இறந்தவர்போக மற்றவர்
ரிஷியாருக்குச் சொல்லல்.

---

அந்தவனத்திலே அனேகம்பேர்ராட்சதரும்
எல்லவருந்தான்வந்துஎட்டினார்பீமனண்டை
வந்துவளைத்தார்கள் மதகரியான்பீமனுடன்
எட்டினார்சண்டை எழும்புதுசமரும்போ
ஒருவர்க்கொருவர் யுத்தங்களாகுது
வெற்றிமதயானை வீமன்வெகுண்டெழுந்து
அடிப்பான்கெதையாலே அனேகம்பேர்கீழேவிழ
அனந்தம்பேர்ராட்சதரை அதமாக்கிக்கொன்றானே
இந்தவிதமாக எண்கோடிராட்சதரை
கொன்றுவதைத்தானே கோடானகோடிகளை
கொன்றவர்தான்போக நின்றதொருராட்சதர்கள்
குருபாரிஷியருகே கொப்பெனவேவோடிவந்தார்
அபயமபயமென்று அடிபணிந்துதெண்டனிட்டார்
வ துக்க பயம் என்னகருமமென்றார்
ஆரோ ஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
சிங்காரப்பூவனத்தைச் சிரழித்தான்பாவியவன்
மரங்களைத்தான்பிடுங்கி வனமெல்லாம்அதமாக்கி
எழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்ப்போட்டுவிட்டா
இவ்வார்த்தைகேட்டு எரிக்குங்கதிரவன்போல் [ன்

காயுங்கதிரவன்போல் கண்சிவந்தார்குருபரரிஷியும்
கோபம்வருகுது கொடுங்காலருத்திரன்போல்
என்னுடையபூவனத்தில் ,எவரொருவர்வாறதில்லை
தேவர்முனிவர் தீண்டொணுப்பூவனத்தை
ஆரடா துவரே ஆயிரம்பேர்போங்களென்ருர்
கைப்பிடியாய்த்தான்பிடித்துக் கடுகெனவேகொண்டுவாங்
என்றசத்தங்கேட்டு எழுந்தார்களாயிரம்பேர் [கள்
வாய்வேகமாகவே வனத்திலேபோயிறங்கி
ஆரடாராட்சதனே ஆங்காரக்கோபமுடன்
வனத்தை அதமாக்கி வந்தவரைக்கொன்றவனே
எங்களுடையாரும்மை இட்டுவரச்சொன்னுரே
குலத்திற்பெரியவர்காண் குருபரமகாரிஷியும்
உன்னை அழைத்துவரச்சொன்னுர்காண் ஐயருமிப்போது
கடுகெனவேவாருமென்று கையைப்பிடித்திழுத்தார்
கைபோடேனைபிடித்தான் கடியவேனையைவிட்டார்
ஆயிரந்தூதுவரை அரைக்ஷணத்தில்தட்டிவிட்டான்
அத்தனைபேரையும் அவனொருவன்கொன்றுவிட்டான்
நானொருவன்தப்பிவந்தேன் நல்வார்த்தைசேதிசொல்ல
என்றவன்கூறலுமே எழில்குருபரமுனிகேட்டு
கோவைப்பழம்போலே கூர்விழிகள்தான்சிவக்க
சவுரிப்பழம்போலே தன்னிரண்டுகண்சிவக்க
நெருப்புப்போல்கண்சிவக்க நெறநெறென்றுபல்கடித்து
சுவாசமனலெழும்பச் சுரணையொன்றுந்தோன்ருமல்
தானுகவந்து சபிக்கமனந்தானுகி
எதிர்னுர்கனகதண்டி யெழில்குருபரமுனியவரும்
பாரவனத்திருக்கும் பங்களாதன்னருகே

புஷ்பவனத்தை யழித்தவனே சபிப்பதற்காக குருபர
முனிவருகிறதை எம்பெருமாளறிந்து அவ
வரையும் சமாதானப்படுத்துதல்.

---

வருகிறவேளையிலே மாயனிதுவறிந்தார்
காவலர்கள்பஞ்சவர்க்குக் கைமோசம்வந்துதே
மோசங்கள்வந்து முடிந்துதேபஞ்சவர்க்கு
பொல்லாதகாலம் பிறந்ததுபஞ்சவர்க்கு
ஆகாதகாலம்!ஐவருக்குவந்ததையோ

உள்ளங்கைநெல்லிக்கனி உருக்குலைந்துபோகுதையோ
தோளிற்செபமாலை தொண்டழிந்துபோகுதையோ
பெட்டியிலேஆபரணம் பெருமைகுலையுதையோ
எழிற்குருபரிஷியுடனே எதிர்ப்பாரொருவரில்லை
மாமாக்கிகல்லாக்கி வனத்திலேகொன்றிடுவார்
ஐவரைக்கொன்றிடுவார் அனர்த்தம்வரநாளாச்சே
காத்தருளாக்தோமே கடைப்போகக்காப்போமென்று
வட்டமாங்கருடனேறி வாராரேமாயவனார்
ஐவரிருக்கும் ஆரணியம்வந்துவிட்டார்
சாபாம்புமன்னன் தருமருங்கண்டாராம்
கூடிவெழுந்திருந்து கார்வண்ணரைத்தொழுதார்
சரணமடைந்தார்கள் தர்மமுடிராஜாக்கள்
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீமர்விற்றிருக்க
இட்டசிங்காதனத்தில் ஏறியிருந்தாராம்
சாபாம்புமன்னர் தருமமவரேதுணைப்பார்
இந்நேரவேளையிலே எம்பெருமாளெங்குவந்தீர்
அடியாரைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
அடியளந்தமாயனார் ஆதிமூலமேதுசொல்வார்
நாலிருக்கையிலே நல்ல காமியமெங்கேயென்றார்
வெற்றிமாயானை பீமராஜனெங்கேயென்றார்
தருமர்பேசேனென்றார் தம்பியனைக்காணேனென்றார்
தோரவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
பாரிசாதப்பூமலரைப் பார்த்தாசைப்பட்டேனையா
பிரியமாய்வேண்டுமென்று பிணங்கினேன்பீமரண்டை
பூப்பறிக்கவாரேனென்று போய்விட்டார்பீமராசன்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
மைமோசம்வந்ததுகாண் கபடமில்லாத்தருமராயா
ஐவர்பஞ்சபாண்டவரே அனர்த்தம்வரலாச்சே
குருபாரிஷிவனத்திற் நொப்பெனவேபோய்ப்புகுந்தான்
மாதவையிடிபியவன் மனதாசமாக்கிவிட்டான்
எழுவட்சம்ராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
அந்தவேழைதை அதமாக்கினபடியால்
[illegible] பெனவேமாமுனியும்
தவத்திற்பெரியவர்காண் சகலகலை [illegible]
வரத்திற்பெரியவர்காண் வல்லகுருபாமுனியும்

இன்னேரவேளையிலே எங்குவந்தீர்சொல்லுமென
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
வனத்திலேபோய்புகுந்து மரங்களைத்தான்பிடுங்கி
ஏழுலட்சநதூதுவனை எல்லவனைக்கொன்றுவிட்டான்
பொல்லாதபாவியைக் கொல்லவென்றுபோரேன்காண்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரோதுசொல்வார்
உம்முடையவனத்திலே ஒருவர்வரப்போறதில்லை
தெய்வலோகத்தாரும் தீண்டாதபூவனத்தை
அமரர்சித்தர்முனிவராலும் ஆகாதுன்வனமழிக்க
ஐயரேஉந்தன்வனத்தை அதமாக்கும்பாலகனை
இட்சணமேசொல்லுகிறேன் இட்டுவரச்சொல்லுமென்
இருவருமாகவே வேகமாய்க்கொல்லவென்று (ரூர்
ஆரடாதூதுவனே அழைத்துவாராட்சதனே
என்றுஅவர்பேசுகையில் இபலானதருமரவர்
நகுலனைத்தானனுப்பி தல்லீமர்க்கேதுரைப்பார்
அண்ணனுந்தம்பியரும் ஆதிநாராயணரும்
குருபாரிஷியருகே கூடிப்பேசியிருப்பார்
கொல்லவென்றுதூதுவரைக் கூட்டிவரச்சொல்வார்கள்
அப்போதுதூதுவர்களழைத்தும்மைதான்வருவார்
வந்தவுடனும்மை வணங்கிநமஸ்கரிப்பார்
அப்போதுநீரண்ணு ஆசீர்வதிப்பீரென
சொல்லிவரச்சொன்னூர்காண் துரிதமுடனேயென்று
தருமரிவையுரைக்கத் தார்வேந்தன்நகுலனுமே
வாயுவேகமாகவே வந்துவிட்டான்பீமனண்டை
அண்ணையதபீமா அண்ணருங்கிருஷ்ணரும்
இப்படிக்குச்சொல்லச் சொன்னூர்களென்னையென்று
பீமனுக்குச்சொல்லி வந்துவிட்டான்நகுலனுமே
வனத்தில்தருமரிடம் வந்துவிட்டான்நகுலனுமே
தம்பிமார்புடைசூழ தருமர்வருகையிலே
அங்கேவரபடபார்த்து அரிராமர்தானெழுந்து
அடிபணிந்துகொண்டனிட்டு அவனைவணங்கிநிற்க
பார்த்தார்குருபாரிஷி பயந்தவருமேதுசொல்வார்
எந்தவூர்எந்தநாடு இவர்பேச்சைசொல்லுமென்றூர்
மாயனபெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
ஜெபத்திலும்தபத்திலும் செய்திடுமோர்நிஷ்டையிலும்
அதிகமுடையவர்காண் அழகானதருமரிஷி

ஆதிகைலாசம் அரனிடந்தனிலே
உன்னுடையபேர்விளங்க ஒருமணியடிபடுது
முனிவரிவராலே மூன்றுமணியடிபடுது
அன்னநாளங்களிலே அதிகமுடையவர்காண்
யோகத்திற்பெரியவர்காண் உன்னிலும்வல்லபிரான்
ஏரெடுத்துப்பார்த்தாலே எரிந்துவிடும்லோகமெல்லாம்
பொய்வசனஞ்சொல்லாதார் புகழான தருமரிஷி
தருமரிஷியாரைத் தழுவியணைத்துக்கொண்டு
சிங்காதனத்தில் சிறாகவீற்றிருந்தார்
திக்குபுகழுடைய தருமரிஷியேதுசொல்வார்
சாமிபெருமானே சன்யாசியானவரே
இருவருமாகவே இங்குவந்தவாரேது
என்றுதான்சொல்லுகையில்பேதுசொல்வார்குருபரரிஷி
தருமரிஷியாரே சாமியே நீர்கேளும்
என்னுடையதோட்டத்தில் எவரொருவர்வந்ததில்லை
அந்தரலோகத்து அமரர்கள்வந்ததில்லை
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
வந்துபுகுந்து வனத்தைபாழாக்கினான்
எழுலட்சம்ராட்சதரேஇருதுண்டாய்ப்போட்டுவிட்டான்
ஆகையாலிங்குவந்தேன் அவனை அதமாக்கவென்று
இவ்வார்த்தைதான்கேட்டு பேதுசொல்வார்தருமரிஷி
உம்முடையதோட்டத்தை அழிப்பாரொருவரில்லை
இங்கேயவரையுங்கள் இக்ஷணமேசபித்திடுவேன்
என்றவர்சொல்லுகையில் இட்டுவந்தார்பீமனை
திக்கெனவேதானெழுந்து ஸ்ரீராமர்மாயவரும்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்வீமருக்கு
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டார்குருபரரிஷி கடிகிபேபேதுரைப்பார்
அவன்-யாரென்றுதெண்டனிட்டார் ஆயன்பெருமானே
ஆறுலுங்கேளுமையா அரியரிஷியாரே
ஆதிகயிலாசம் அரனிடந்தனிலே
உம்முடையபேராலே ஒருமணியடிபடுது
தருமருடபேராலே மூன்றுமணியடிபடுது
அந்தரிஷிபேராலே ஐந்துமணியடிபடுது
யோகத்திற்பெரியவர்காண் உத்தமரிஷியாரும்
ஆதிசிவனிலும் அதிகமுடையவர்காண்

தினமூன்றுவேளையிலே சிவனைமறாராம்
அவரிருக்குமிடங்களிலே அன்னக்களஞ்சியங்கள்
ஆரோஎவரோ அறியாமல் கொல்லவந்தேன்
இன்று அவர் நினைத்தால் எல்லவரைக்கொன்றிடுவார்
என்றுசொன்னபோதே எழுந்தார் தருமரிஷி
தருமரிஷியெழுந்திருந்து சாஷ்டாங்கதெண்டனிட்டார்
குருபரமுனியும் கொப்பெனவேதெண்டனிட்டார்
அடியார்கள்செயததெல்லாம் அப்பாமனம்பொறுத்து
தெரியாதார்செய்ததெல்லாம் தேவர்மனம்பொறுத்து
வனத்தையழித்ததொரு மகிமையைச்சொல்லுமென்றார்
ஆசனம்போட்டார்கள் அமர்ந்துகொலுவிருந்தார்
அப்போதுராமரிஷி அங்கவர்க்குயேதுசொல்வார்
குருபரரிஷிபெருமை குவலயத்திற்சொன்னார்கள்
அந்தப்பேர்சொல்லுகையில் அதிசயப்பட்டிருந்தேன்
பார்க்கப்பிரியமாக பார்தலத்தில் நான் திரிந்தேன்
அந்தவனத்திலே அனந்தங்கோடிராட்சதர்கள்
எந்தனைக்கொல்ல எழுந்தார்கள் ஆதுவர்கள்
ஆரென்றுகேளாமல் அல்லவருங்கொல்லவந்தார்
ஆக்ருஷம்வந்ததினால அல்லவரைக்கொன்றுவிட்டேன்
இதுவேகருமமென்றான் ஓயலானபிரமரிஷி
குருபரமுனியவரும் கொப்பெனவேதெண்டனிட்டு
அடியார்களசெய்ததெல்லாம் ஐயாமனம்பொறுத்து
பாக்கியஞ்செய்ததினால் பாதங்கிடைத்ததுகாண்
கருதிதவஞ்செய்தாலும் காணஅரிதாகும்
பார்த்தபடியாலே பாவத்தொலைந்துவிட்டேன்
வருகாததேவர்கள் வந்தபடியாலே
என்னுடைய ஆச்சிரமம் எல்லாரும்வாங்களையா
பாலடிசலுண்டு பழவர்க்கந்தான்புசித்து
போஜனஞ்செய்துநீங்கள் போவர்கள்வாங்களென்று
குருபரரிஷியாரும் கொப்பெனவேதெண்டனிட்டு
பட்டுரத்னபாய்போட்டு பாய்மேலேவீற்றிருந்தார்
மாயவருந்தருமரிஷி மதம்பெரியராமரிஷி
தம்பிமார்நால்வருடனே தாமுங்கொலுவிருந்தார்
ஐவருமொன்றாக இருக்கின்றவேளையிலே
குருபரரிஷியுமங்கே கொப்பெனவேதானெழுந்து
தூதுவரைத்தானழைத்துச் சொல்லுவாரோர்வார்த்தை

ஆயிரக்கல அரிசி அடிசில்சமையுமென்றார்
காயுங்கனியும் கடுகச்சமையுமென்றார்
நல்லபொரிக்கறியும் ராஜாக்கள்போஜனமும்
அடிசிற்சமைத்தோமென அடிவணங்கிதெண்டனிட்டார்
குருபரமுனிகேட்டு கொப்பெனவேதாமெழுந்து
கடுகசரணமென்று கைக்குச்சலங்கொடுத்தார்
பலாயிலைதைத்துப் படைத்தார்களன்னமதை
சமைத்திட்டசாகங்கறி தானேபுசித்தார்கள்
உபசாரம்பண்ணியவர் உண்ணுங்கள்சாமியென்றார்
அத்தண்டபேரும் அமுதுபுசித்தார்கள்
சந்தனம்புட்பமும் தாம்பூலம்வாங்கிக்கொண்டார்
அத்தண்டபேரும் ஆலிங்கனஞ்செய்துகொண்டார்

பஞ்சவர்களைந்துபேரும் பெருமாளு மவரவ
ரிடஞ் செல்லுகிறது.

---

போய்வாரோமென்றுமே போதநடந்தார்கள்
பர்ணசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
ஏழுலகைபாண்டவராம் எம்பெருமானேதுசொல்வார்
வெற்றிமதயானை பீமன்செய்தகாரியத்தை
நாமிருந்தபடியாலே நாடியுமைக்காக்கவந்தோம்
அல்லாதேயாமாகில் அனைவருமாண்டிடுவீர்
எங்கேயிருந்தாலும் இடறல்லோசெய்திரான்
ஆகாதகாரியங்கள் அழும்புகள்செய்பலாமோ
இந்தவனத்தைவிட்டு ஏகுங்களடுத்தவனம்
அந்தவனத்தில் ஐவரும்போயி நங்கள்
ஆண்டுகழிந்தது அவ்வனத்தில்வீற்றிருந்தார்
போய்வாரோமென்று போகலுற்றாரெம்பெருமாள்
எட்டாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

எட்டாவது குருபரமுனிவனம் முற்றிற்று.

---

## 9-வது: ரோமரிஷி வனம்.

---

அந்தவனத்தைவிட்டு அப்புறம்போனார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மனனிவைத்தசீமாடு வனமேகுடியிருப்பு
சுபரோமரிஷிவனத்தில் துரிதமுடன்வந்தார்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
நெஞ்சில்ரோமமாமுனியை நினைத்தார்தருமராஜர்

ஐவரிடத்துக்கு ரோமரிஷிவர தருமர் தனது துன்பத்தை அவரிடத்திற்சொல்ல அவர் அதற்கு வழிமானஞ் சொல்லுகிறது.

---

ஆசனம்போட்டு அடிபணிந்தார்தருமராஜர்
எந்தவூர்எந்தநாடு எங்கிருந்துஇங்குவந்தீர்
ஊர்பேருரைத்து உத்தமனேசொல்லுமென்றார்
வந்தவபணமதை வகையாகச்சொல்லுமென்றார்
அப்போதருமரவர் ஆண்டவருக்கேதுரைப்பார்
குருகுலவம்மிசத்தில் குந்திமைந்தரைந்துபேர்கள்
தருமன்நான்பீமனவன் தம்பிதனஞ்சயனும்
நகுலசகாதேவ ராஜர்களைவரையா
தருமபுரமென்னுந் தாரணியையாண்டிருந்தோம்
பங்கும்பகையாளி பாதிநான் தாயாதி
சென்மப்பகையாளி சேனநான் தாயாதி
பெரியதந்தைபிள்ளை பேரானதுரியோதனன்
ஐவரைக்கொல்லவென்று ஆலோசனைதேடி
விருந்துண்ணவாருமென்று விருந்தோலைதானனுப்ப
மெய்யானவோலையென்று விரைவாகப்போனோமையா
வரவழிதனிலே வைத்தானே தண்ணீர்ப்பந்தல்
வசநாபித்தண்ணீர்ப்பந்தல் வைத்தானேபாவிபயல்
கொல்லநினைத்தானே கொப்பெனவேஎங்களைத்தான்

தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருபோசனையும் செய்தான்பெரும்பாவி
வருகிறவழியிலே வசிகளை நாட்டினான்
உருக்கூசிசெப்பூசி ஒருகோடி நாட்டினான்
எழுகூசிபனைகமொடு இரும்பூசி தான்புதைத்தான்
கோடிமுன்னூகத்திகளும் குழக்கேபுதைத்துவைத்தான்
மாண்டுமடிவாரென்று வசிகளை நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருபோசனை செய்தான்பெரும்பாவி
பொய்க்குழியைவெட்டிமேபோட்டுவைத்தார்சிம்மாசனம்
ஆழக்குழியிலே பாட்களையுள் நிறுத்தி
ஆயுதத்தனுடனே ஆள் நிறுத்திவைத்தானே
கொல்ல நினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருபோசனை செய்தான்பெரும்பாவி
என்னையிட்டுக்கொள்ளுமென்று எங்களுக்குச்சொல்லி
வழுவட்ச மல்லர்களை எங்களிடந்தானனுப்பி (பவன்
என்னையிடச்சே என்னுயிரைவாங்குமென்றான்
அதற்கும்பிழைத்தோமே ஆண்டவனும் புண்ணியத்தால்
பின்னுமொருபோசனை செய்தான்பெரும்பாவி
அரப்புகின்னாங்கைகொடுத்து அபிஷேகமாடுமென்றான்
திரிவசிநாட்டி வைத்தானே நிர்மூடன்
பாரவசிகளை பர்வதம்போல் நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருபோசனை செய்தான்பெரும்பாவி
உண்ணுகிறசாதத்திலே ஒருக்கார் மருந்தையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைக்காரன் நஞ்சையிட்டான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருபோசனை செய்தான்பெரும்பாவி
சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
நாடுபறித்து ராச்சியத்தைக்கொள்ளைகொண்டான்
சீமைத்துரைத்தனமுந தேசத்தைக்கொள்ளைகொண்டான்
ஜீவனையுங்கெலித்து ஆஸ்தானமுங்கெலித்து
காற்றுநுழையாத கல்லறைக்கிடங்கில் வைத்தான்
ஐவருடனே கிருஷ்ணை அப்பாலத்திற்கொண்டுவந்து
தமையனுடபெண்சாதி தாயென்றெண்ணாமல்

மூலையிலிருந்தபெண்ணை மூத்தத்திலிழுக்துவந்து
அம்பலமேற்றியவன் அவமானத்தாழ்வுபண்ணுன்
வாடியென்றும்போடியென்றும் வம்புசிலபேசிஞன்
அரசர்சபைநடுவே அம்பலத்துரைகள்முன்னே
சொல்லாதுசொல்லியே துகிலுமுரிந்தானே
பாரவனவாசம் பரதேசம்போனபின்பு
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்தபின்பு
அக்ஞாதவாசமல்லோ ஆரணியமொருவருஷம்
வேஷம்விட்டுவேஷமாறியிற்றிருக்கவென்றுசொன்னன்
பதிமூன்றுவருஷஞ்சென்று பட்டணத்தில்வந்தாக்கால்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்முன்
ஆகையாலாண்டவரே ஆரணியம்வந்துவிட்டோம்
வருஷமொன்பதும்பிறக்க வந்தோமிவ்வனந்தனிலே
உங்கள்வனந்தனிலே ஒருவருஷம்வனவாசம்
உம்மைவருந்திஞேன் உண்மையுள்ளரிஷியாரே
இந்தவனந்தனிலே இருக்கசெலவருளும்
என்றல்லோதருமரவர் இறங்கியேகெண்டனிட்டார்
தவத்திற்பெரியவர்காண் சன்யாசியானவரும்
உற்றுற்றுக்கேட்டாரே உரோமரிஷியாரும்
ஆயாசப்பட்டுமவர் அறவேமனஞ்சலித்து
இத்தனைவஞ்சனைகள் இடறுசெய்கபாவியவன்
கொல்லநினைத்தானே கொடும்பாவிதுரியோதிரன்
நாடுகொடுப்பதில்லை ராச்சியந்தருவதில்லை
சீமைகொடுப்பதில்லை சிங்காதனந்தருவதில்லை
ஐவர்தனிலேயொருவன் அரன்பதியேபோனீராகுல்
ஆதிசிவன்கையில் அஸ்திரப்பேறுபெறுகுல்
மாத்தானைக்கொன்றிடலாம் வையகத்தையாண்டிடலாம்
அல்லாதேயாமாகுல் அரசுனக்கிட்டாது
என்றதுசொல்லுகையில பேதுசொல்வார்தருமரவர்
ஐவரிலேயொருவர் அவ்விதிபை அடையவென்ருல்
ஆயர்சொல்லல்லாது ஆகாதொருக்காலும்
மாயன்சொல்லல்லாது மற்றொன்றுமாகாது
அவ்வார்த்தைதான்கேட்டு அரியரிஷியேதுசொல்வார்
மாயன்பெருமானே வாவழைப்புமிங்கேயென்றூர்

———

## தருமர் எம்பெருமானை நினைத்து தோத்திரம் பண்ணுகிறது.

சாயாம்புமன்னவனுர் தருமரவரேதுசொல்வார்
அடியனந்தமாயவரே ஆண்டவரேவாருமென்முர்
எழுமலையாண்டவரே எம்பெருமாள்வாருமென்முர்
மச்சவடிவுகொண்டு மறுகடலிற்பள்ளிகொண்டாய்
ஆலிலையிற்பள்ளிகொண்ட ஆண்டவரேவாருமென்முர்
தருமர்வருந்துகையில் சாமியவரறிந்து

## தருமர் தோத்திரம்பண்ணினதை பெருமாளறிந்து தருமரிடம் வருதல்.

எழுமலையாண்டவனுர் எம்பெருமாள்வாராராம்
வட்டமாய்கருடனேறி மாயவனுர்வந்துவிட்டார்
ஆயரைக்காணுகையில் ஐவருந்தாமெழுந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
தேடித்தும்பைமலரெடுத்து சிங்காதனம்போட்டார்கள்
சிங்காதனத்தின்மேல் ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
என்னையழைத்தது யேதுகருமமென்முர்
மனதிலிருக்கின்ற மர்மமுறையுமென்முர்
சாயாம்புமன்னவனுர் தருமரவரேதுசொல்வார்
மற்றென்றுமில்லையையா மாயவரேநீர்கேளும்
இந்தவனத்திலே யிருக்கின்றரோமரிஷி
மாமுனியைத்தெரிசித்து வணங்கியடிபணிந்தோம்
ஆரென்றென்னைக்கேட்டார் அரிதானமாமுனியும்
வந்தகருமங்களை வார்த்தையெல்லாம்நானுரைத்தேன்
திரியோதினன்செய்த சேதியெல்லாம்நானுரைத்தேன்
அத்தனையுங்கேட்டு ஆயாசப்பட்டவர்காண்
திரியோதிரன்றன்னைச் செயிக்கவேவேணுமென்று
ஐவரிலேயொருவனையும் அரன்பதிபோகவென்முர்
பஞ்சவரிலொருவனையும் பரமபதிபோங்கவென்முர்
ஆதிசிவன்கையிலே அஸ்திரம்பெற்றுவந்தால்
மாற்றானைவென்றிடலாம் வையகத்தை ஆண்டிடலாம்
போங்களென வுரைத்தார் புனிதமகாமுனியும்
ஆகையாலும்மை அழையுமென்முர் அந்தரிஷி

மாய்ந்துகின்றவேளையிலே வந்தீரோமாயவரே
இனிநடக்குங்காரியங்கள் எம்பெருமான்சொல்லுமென
ஆயன்பெருமானும் அவருமங்கே சொல்லுவார்
வாரும்பெரியவரே வனம்வாழ்தபோதனரே
ஐவருடவார்த்தை அதிகாரமெத்தவுள்ளோன்
பஞ்சவர்கள் தங்களுக்குப் பாட்டனிருக்கிறான்காண்
அவரையுமிங்கே அழைத்தாற்தெரியுமென்றார்
வேதவியாசனை வேண்டியழையுமென்றார்

ஐவரும் வியாசபகவானை நினைத்துவணங்க

## வியாசர் வருதல்.

---

ஐவர்பஞ்சபாண்டவர்கள் அன்னேரமேதான்வணங்கி
வேண்டிநமஸ்கரித்து வியாசரைக்கைதொழுது
வாருமென்றுதானினைக்க வந்தார்வியாசரிஷி
சடையுஞ்சடையழகும் தம்பிரான்போலேவாரார்
ஐவருக்குமந்த அடவியில்வந்தாரே
ஏழைகையாண்டவனார் எதிர்கொண்டார்வியாசருக்கு
ஐவரெழுந்திருந்து அடிபணிந்தார் இவருக்கும்
ஆயரும்வியாசருமே ஆலிங்கனம்பண்ணிக்கொண்டார்
ஆசனத்திலேமேடாக அனைவோரும்வீற்றிருந்தார்
வேதவியாசருமே வேந்தனைப்பார்த்துரைப்பார்
என்னகருமமாக என்னையழைத்தீர்கள்
மனதிலிருக்கின்ற மர்மத்தைச்சொல்லுமென்றார்
மாயப்பெருமானும் வார்த்தையங்கேதுசொல்வார்
பரமன்பதம்நோக்கி பாரதவஞ்செய்யவென்று
பாசுபதம்பெறுபெற்று பாரதத்தைவெல்லவென்று
ஆரைநாம்போகச்சொல்வோம் அரன்பாதங்காணுதற்கு
தருமனைப்போகவிட்டால் சாமிபாதந்தானறியார்
வெற்றிமதயானை வீமனுமாகாது
நகுலசகாதேவ ராஜராலாகாது
அர்ச்சுனனைப்போகவிட்டால் அரனாரைக்காணவல்லா
பரமசிவனருகில் பாசுபதம்பெறுபெற்று [ன்
வேணவரம்வாங்கி விஜயன்வரவல்லவன்காண்
என்றுமவர்யோசனையால் எழில்விஜயனைப்பார்த்து
பார்த்திபா அர்ச்சுனரே பரமன்பதிநோக்கி

அதுவுமேயல்லாம லாண்டவனேயெந்தனுக்கு
போறவழிதனிலே புதுமைநடந்தாலும்
சிவனூர்பதியிலே செய்யுந்தவமழிக்க
மழுவேந்துஞ்சிவனு மெம வஞ்சனைகள்செய்தாலும்
எதுவினைவந்தாலும் எந்தனுக்குத்துணையாரும்
மகாதேவனைக்கண்டு வாங்கிவாரேன்வரங்களென்றான்
அப்போதுமாயவரும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
போறவழியிலே பொற்கொடியாளொருகன்னி
ஆதிசிவனைநோக்கி அருந்தபசுசெய்பவள்தான்
அம்பலமான்போலே அழகில்மிகுந்தவள்தான்
அர்ச்சுனரேவுமைமேலை அதிகவரம்பெற்றவள்தான்
உன்னைக்கலியாணம்பண்ண உகந்திருக்கிறாள்தான்
அவள்-வந்துவழிமறிப்பாள் வாள்விஜயமன்னவரே
மாதரைக்கண்டுநீ வார்த்தையொன்றுஞ்சொல்லாதே
தாயென்றும்தங்கையென்றும் தார்வேந்தாசொல்லாதே
வரும்போதுபெண்ணேயுனை மாலையிட்டுக்கொள்வேனென
சாயம்புமேனியனை கண்டடங்கப்பறகா (ன்று
தக்கதுசொல்லிப்போம் சாமியுடபதிக்கு
அதிகவரம்பெறுபெற்று அருச்சுனரேவரும்போது
ஏலகன்னிமாதரசை இளங்கொடியைமாலையிட்டு
வரும்போதுமாலையிட்டு வந்துவிடும் அர்ச்சுனரே
மற்றொருவினைவந்தால் வந்துநான்காத்திடுவேன்
போய்வாருமென்றுசொல்லி பெருமாள்செலவுதந்தார்

## அருச்சுனன் சிவனைக்காணப் போவதற்கு சோடித்தல்.

---

சூலபாணிரூபர்போற் சோடித்தானர்ச்சுனனும்
எந்தெந்தமூலஸ்திப்பு இளவிஜயன் தான்தரிப்பான்
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
குத்துசடையங்கே குலுங்கஅர்ச்சுனற்கு
உள்ளமெல்லாம்லிங்கம் உடம்பெல்லாம்வெண்ணீறு
ஆவியெல்லாம்லிங்கம் அங்கமெல்லாம்வெண்ணீறு
காவிகாசாம்பரமுங் கட்டினான் அரைதனிலே
அன்றரிக்குமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கயிலாசமான்தோலும்

காதிலேகுண்டலமுங் கையிற்கமண்டலமும்
ஏகவேஷ்டிதானணிந்தான் இபலான வர்ச்சுனனும்
சிரமுடிக்காழ்வடங்கள் பெரியருத்திராட்சமணி
பஞ்சமணித்தாழ்வடமாம் பலவிதமாலைகளாம்
நாகமணிக்கங்கணமாம் லாடமிகச்சங்கிலியாம்
வேலாயுதஞ்சூலாயுதம் வெண்புலித்தோலாசனமாம்
அரைசுத்திகிண்கிணியாம் அழகுமயில்தாழ்வடமாம்
குருயோகபுத்தகமாம் சுரையோடுகமண்டலமாம்
கஞ்சாக்குடுக்கைகளாம் கௌதமர்சோளிகளாம்
சங்குஜெபகண்டிகை தானணிந்தாரருச்சுனனும்
கணுக்கால்சிலம்புகளாம் காலில்மிதியடியாம்
அஷ்டாபரணமெல்லாம் அருச்சுனன்தான்தரித்தான்
வியாசருமாயவரும் மிக்கவரமொன்றுதந்தார்
ஒருவன்சிவனேயென்ன உலகஞ்சிவனேயென்னும்
ஐவருக்குளுந்தனுக்கு அநுக்கிரகந்தந்தோமென்றார்
போய்வாருமர்ச்சுனரே பொன்னுலகந்தான்தேடி

அருச்சுனன் ஈஸ்வரரைக் காணப்போகிறது.

---

அந்தசமயத்தில் அருச்சுனனுந்தானெழுந்து
எல்லாரையும்பணிந்து எழுந்தானருச்சுனனும்
போய்வாரேனென்றுசொல்லி போனானருச்சுனனும்
அர்ச்சுனன்போனபின்பு அங்குவியாசருமே
எல்லாரையும்வாழ்த்தி யிருவருமேபோய்நடந்தார்
மாயன்பெருமானும் வாழ்கருடன்மேலேறி
ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
வில்வேந்தருச்சுனனு விரைவாய்வனந்தாண்டி
காடுசெடிதாண்டி கடுகியேவாரேனே
அரனையவன்காணவென்று அதிதுரிதமாகவாரான்
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாரேனே

எம்பெருமான் பெண்வேஷமாய் வருகிறது.

---

அருச்சுனன்மனமறிய அரிராமரேதுசெய்வார்
மோககன்னிபெண்போல் முடிமன்னர்வடிவுகொண்டார்
சின்னஞ்சிறியபெண்ணைப் ஸ்ரீராமர்வடிவுகொண்டார்
மின்னலொளிபோல மேகவண்ணர்வடிவெடுத்தார்

அல்லார் தலைமயிரும் ஐந்துமுழம் ஆறுமுழம்
ஆரணங்குகூந்தலது அறுபத்தாறுமுழம்
காசாம்பழத்திலும் கறுத்தகருப்பழகும்
ஈச்சம்பழத்திலும் இருண்டகருப்பாகும்
வாரிக்குழல்முடித்து மாணிக்கவரியுட்சொருகி
கொண்டைக்குக்குப்பியிட்டு கொலுசுமுத்துத்தொங்கலி
கம்மல்ஜிமிக்கிகளும் காதிலேயிட்டாளாம் (ட்டு
கழுத்திலணிந்தாளாம் கனகமணிக்காரைவடமும்
நல்லதொருபொன்காரை நடுக்கழுத்திலேதரித்தாள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுரமாம்பொன்சரிகை
இரட்டைச்சரடுகளாம் இராஜாங்கப்பொன்தாலி
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
அரைக்கிசைந்தவொட்டியாணம் ஆடைமேற்றரித்தாளாம்
காலுக்குத்தண்டைகளாம் கனத்தகொலுசுகளாம்
கலாழிபீலிகளுங் கல்லணையும்புல்லணையும்
அழகுபணிகளெல்லாம் அலங்காரப்பண்ணினாள்
கதம்பமுஞ்சந்தனமுங் கஸ்தூரிமணங்கள்வர
அன்னம்போலேநடந்து ஆண்டவனார்வாராரே
அருச்சுனன்போனதொரு அடவியிலேவந்துவிட்டார்
அருச்சுனனைத்தான்பார்த்து ஆண்டவரேதுசொல்வார்
ஐயா! பெரியவரே அறிவுள்ளசங்கமரே
இப்படித்தவமே தெளிவுள்ளசங்கமரே
இத்தாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
ங்கிருந்துபோறீர்காண் இபலாவசங்கமரே
நாடிசரணமையா கும்பிட்டேன்சுவாமியென்றார்
உன்னழகுப்பாவனையும் உலகத்திற்கண்டறியேன்
உம்மைக்கண்டபோதே உருகுதேதேகமெல்லாம்
காமவிகாரத்தாற் கலைதாங்கிப்போரேனையா
போகவிகாரத்தால் மூர்ச்சைபட்டுப்போரேனையா
காமக்கனலைத்தான் கலிதீர்க்கலாகாதோ
மாகவிகாரமதை மூர்ச்சையைத்தீருமையா
ன்மதனைப்பதகணை மார்புருகிப்போகுதையா
சித்தசன்தொட்டகணை சிதமார்புருகுதையா (தோ
அரைநாழிபொன்னுடனே அணைந்திருந்துபோகொணா
ஒருநாழிபொன்னுடனே உளமகிழ்ந்துபோகொணாதோ
மார்பைப்பார்த்தோம்பார் வெண்ணெய்த்தனத்தைப்பார்



ஸ்ரீகிருஷ்ணபகவான் மோகினியுருவெடுத்து அருச்சுனனைத் தடுத்தல்

எந்நாளும்பாவினையும் வெறுத்துப்பாருமையா
என்னைப்போல்பெண்கள் எங்கேகிடைப்பார்கள்
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
நாளைக்கிடையாது கலியுகத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைத்து மகாவிடாய்தீருமையா
தோளோடேதோளணைத்து சுகந்தையென்னதாருமையா
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சிவிளையாடுமையா
சுகமெத்தையிலே கூடிவிளையாடுமையா
வாருமையாசங்கமமீரே என்றுவழிமறித்தாள்

அருச்சுனன் மோகினியைப்பார்த்து சொல்லுகிறது.

---

வெறுத்துப்பார்த்தானே எழிலாமருச்சுனனும்
என்னதுமென்னுகிறான் இளவிஜயனப்போது
மாயவனார்சொன்னதொரு வார்த்தைஎல்லாம்மெய்யாச்சு
என்றுசொல்வான்விஜயன் எதுரைப்பான்கன்னியற்கு
ஆதிகைலாசம் அரன்பதியேபோரேனம்மா
கர்த்தனைக்காணவென்று கைலாசம்போரேனம்மா
வம்புகளைச்சொல்லாதே வழிதனைமறிக்காதே
பெற்றுவளர்த்ததொரு பேர்பெரியதாயல்லவோ
கூடப்பிறந்தவள் நீ கூட்டுப்பாலுண்டவள்தான்
தங்கைதமக்கையுநீ தாயாருநீயல்லவோ
தூரத்திலும்ஆச்சியரே தோதங்கள்பண்ணாதே
இடையதிலும்ஆச்சியரே என்னருகேவாராதே
என்றுநடந்தானே வெறுத்துப்பாராமல்
மற்றுமந்தகன்னியரும் வார்த்தைகளேதுசொல்வார்
சேரவென்றுவந்தேனே செல்லுமென்றுசொல்லலாமோ
பெண்சாதியென்றுவந்தால் பெற்றதாயென்னலாமோ
ஆத்தாளென்றெண்ணலாமோ அடுத்தமுறைவந்தாலே
தாயென்றுற்றுன்போமோ தனிமுறைவந்தாக்கால்
ஆண்டிக்குமுறையுமில்லை அரிவாளுக்குறையுமில்லை
எருதுக்குப்பேச்சுமில்லை இடையனுக்குமுறையுமில்லை
அரைநாழிபோகம் அடர்ந்திருந்தால்போதுமையா
மார்போடேமார்பணைத்து மருவிமுத்தந்தாருமென்று
இன்னெப்படியிருக்க வேணதூரம்போவானேன [ன

பொட்டைக்கலைக்க மறந்திரோபுண்ணியரே
ஆனைதனைத்தாங்கப்பற்ற மறந்திரோஅச்சுதரே
என்னகோபமுந்தனுக்கு மற்றுமையாஉந்தனுக்கு
அப்போதுமாயவரும் அருளாவரேதுசொல்வார்
ஆயன்பெருமாளும் அர்ச்சுனனோடேதுசொல்வார்
மாமனுக்குநடந்ததுட மனைவிதுணைமையென்னசொல்வேன்
அர்ச்சுனனுந்தனுட ஆண்மையுமென்னசொல்வேன்
வானவிஜயாஉந்தனுட மனதறியவந்தேன்காண்
கர்த்தரைக்காணவல்லாய் கடிதிவரம்வாங்கவல்லாய்
பரமனைக்காணவல்லாய் பாசுபதம்வாங்கவல்லாய்
சர்வபரனைக்காணவல்லாய் இனியவரம்வாங்கவல்லாய்
போய்வாருமென்றுசொல்லி பெருமாளனுப்பினர்
அனுப்பவுமவன் அர்ச்சுனராசதுரை
விடைபெற்றுக்கொண்டானே வேந்தனர்ச்சுனனும்
அர்ச்சுனன்போனபின்பு அரிராமரேதுசெய்தார்
வட்டமாக்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்திருக்கும் மூங்கில்வனந்தாண்டி
இலவன் அடர்ந்திருக்கும் செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போய்ச்சேர்ந்தார்

ஒன்பதாவது ரோமரிஷிவனம்

முற்றிற்று.



## 10-வது: பேரண்டவனம்.

---

பத்தாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடியார்க்கைகானகத்தில்
சோலிவைத்திமோடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்திமோடு வனவாசம்போனார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகுளந்தாண்டி அதிகவனந்தாண்டி
பேரண்டவனத்திலேதான் பிரியமாய்பஞ்சவர்கள்

வந்தார்குடிக்கனமாய் வனத்திலேவாசம்பண்ண
ஐந்துதிருப்பர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஆறடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
பூதநாதனைத்தேடி போனானேவாள்விஜயன்
அரகராவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
ஓம்சிவாவென்றுசொல்லி ஒலித்தானேசங்குதனை
ஒருவனை அரனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
இருண்டவனத்திலே இருக்கிறபோண்டன்
அனேகநாளாய்ப்போயிருந்தா னாரத்தேடிவர

போண்டச்சி அருச்சுனன்மேல் மோகித்தல்.

---

போண்டராட்சசன்றன் பெண்சாதியானவளும்
தன்னந்தனியவளாய் தானிருந்தாள்மண்டபத்தில்
அரகராவென்றசத்தம் ஆணைக்குதான்கேட்டு
கொத்தளம்போல்முக்கழகும் மத்தளம்போல்புட்பங்களு
ஒவ்வொன்றுசிகுரங்கதலை ஒன்றுமுதுகழகாம் (ம்
செம்பட்ட மயிரழகாம் சிங்காரபல்லழகாம்
பனைமரம்போற்பல்லழகாம்பருவதம்போற்கண்ணழகாம்
கழுத்தைச்சுற்றிகண்டமாலைஇடுப்பைசுற்றியரைகடுவன்
தாடையைச்சுற்றிஒட்டுபுண் தோளைசுற்றிபெருஞ்சிரங்கு
தீயெருமேளபாமாகி நிலத்தில்விழும்இரண்டுதனம்
இன்னமுஞ்சொல்லுகிறேன் இரண்டுதனத்தழகை
கப்பலின்மேல்வாரதொரு கொப்பரைத்தேங்காய்போல்
தோணிமேல்வாரதொரு சொரக்காய்போல்தானிருக்கும்
பல்லிலேபடிந்திருக்கும் பாசிபடர்தாமரைபோல்
சீழுஞ்செலந்திரும் தேகமெல்லாம்நாற்றம்வரும்
காயமதிற்படிந்தழுக்கு கற்றாழைநாற்றம்வரும்
அருகேவந்துநின்றாலே அசங்கிதநாற்றம்வரும்
மரவுரியைத்தானுடுத்தி வாராளேபோண்டச்சி
ஆண்டிபெரியவர்தான் அருகில்வந்தாள்ராட்சசியும்
பண்டாரம்பெரியவனைப் பார்த்தாசைப்பட்டாளாம்
வாயைத்திறந்தவள் வார்த்தைகளைச்சொல்வாள்

...றுமையாசக்கயரே நெடுந்தூராய்ப்போகாதே
...ன்றாசைப்பட்டதல்லால் உலகில்வெருசையில்லை
...பார்கேளைப்பார் மருவிவிளையாடவேபார்
...யிடன்னுடனே அமர்ந்திருந்துபோங்காணு
...வீர்வரு-மென்று வழிபார்த்துக்காத்திருந்தேன் [ம்
...பாணைமது மார்பு ?இப்போருணைதபா
...காரமைக் மூர்ச்சையைத்திருமையா
...ப்போல்பெண் ணுமக்கு எங்கேகிடைப்பார்கள்
தேடிப்புறப்பட்டாலும் தேசத்திற்கிட்டாது
...போடேமார்பணைந்து மருவிவிடாய்திருமையா
தோளோடேதோளணைந்த சுகங்கள்தெளியுமிப்போ
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சியிருப்போமென்றாள்
எடுத்துப்பாரானே என்னென்றுங்கேளானே
ஆகரா அரனேயென்று ஆண்டியுந்தானடந்தான்
காமவிகாரத்துடன் கடுகியந்தராட்சசியும்
பெண்டராட்சசியும் பின்னேதுவார்த்தைசொல்வாள்
கண்டாசைபட்டுவந்தேன் கண்ணெடுத்துப்பார்க்கவில்லை
என்னென்றுகேட்கவில்லை ஏறமுகம்பார்க்கவில்லை
என்னை ...போமல்போனீரே பாதகனுனையாலே

பெண்டச்சி அருச்சுனனுடன் சபதங்கூறுதல்

என்புருஷன்வந்தபின்பு இட்டுன்னைவரவழைத்து
என்னெண்ணப்பிரகாரம் இருந்துமருவிடுவேன்
என்றுசபதமிட்டு இயலானராட்சசியும்
காமவிகாரக்கலையுடன் தானடந்தாள்
மோகவிகார மூர்ச்சையுடன் தான்போனாள்
வளையலைத்தானுடைத்து மார்பெல்லாந்தான்சிழித்தாள்
முகத்தைமறைந்துகொண்டு மோதிப்புலம்புகிறாள்

பெண்டச்சி யழுதகுரல்கேட்டு பெரண்டன் வருதல்

அழுதகுரல்சத்தம் அறிந்தானேபெண்டனும்
எதுக்கழுகிறாள் என்னுடையதேவியரும்
வயிறுபசியாகி வாய்விட்டழுதாளோ
என்று-ஐம்பதுயானை அவன்வாயில் தானெடுத்து
மென்றுதின்றானே தேவியருகில்விழ
பின்னும்புலம்புகிறாள் பெண்டராட்சசியும்



அருச்சுனன்மீது காதல்கொண்ட அரக்கியின்கணவனைக் கொன்று
தெய்வப்பெண்கள் வேண்டுகோளால் மீண்டும் அவனை எழுப்பல்.

மந்த்ரவுபதேசஞ்செய்து மார்புரணவாங்கினன்
மேலிட்டுராதட்சதன்மேல் விழுந்தது அஸ்திரந்தான்
பேரண்டன்தன் தலையைப் பிடரிவிட்டுத்தானறுத்தே

## அருச்சுனன்பாணத்தால் பேரண்டன்தலைவிழ பேரண்டச்சி புலம்பல்

---

அறுந்ததலைதேவிரா தாகாசமாமெழும்ப
மற்றொருகணைதொடுத்தான் வால்விஜயனருச்சுனனும்
அறுந்ததலையுமப்போ அவன்தேவிவாசலிலே [ன்
கொண்டுபோய்போடுமென்றுன்கொப்பெனவேவாள்விசய
கள்ளிப்போய்விட்டதுவே சண்டாளன்தன் தலையை
அவன்மாண்டபிற்பாடு அருச்சுனன்தானடந்தான்
அந்தச்சமயத்தில் அடைவானபேரண்டச்சி
தலையைப்பார்த்துபேரண்டச்சி தன்புருஷன் தலையென
கண்ணீரைச்சோரவிட்டுக் கதறிப்புலம்புகிறாள் [வே
விழுந்தாளெழுந்தாள் மண்மேலேபுரண்டழுதாள்
மாரடித்துத்தோளடித்து மண் தூத்திபோயழுதாள்
கோவென்றசத்தமுடன் குமுறிப்புலம்புகிறாள்
மலைபோலபருவதமே மண்மேலேசாய்ந்தீரோ
மேகமலையேநீ விண்ணுலகம்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியங்கள் நின்னைப்பத்தைநானறியேன்
வச்சிரதூணேநீர் மண்ணோடொழிந்தீரோ
கல்லான தூணைக் கறையானரித்ததுவோ
இரும்பான தூணேநீ இற்றுவிழுந்தாயோ
எங்கேயோவானம் இடித்ததென்றிருந்தேன்
தப்பாமல்வானந் தலையிலிடித்ததையோ
தெருவிலேகைகளைவிட்டுத் தினகரனைசாட்சியென்றாள்
சந்தியிலேகைகளைவிட்டுச் சந்திரனைசாட்சியென்றாள்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தழுகண்களெல்லாம் வேற்றழுகங்காணுதையோ
மலைபோலபருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலைபோலருதமே செத்துமடிந்தீரோ
செத்துமடிந்தீரோ சிவலோகஞ்சேர்ந்தீரோ
மாண்டுமடிந்தீரோ வைகுந்தஞ்சேர்ந்தீரோ

நீயழுங்காரியத்தின் நிண்ணயங்கள் நானறியேன்
சந்தனமிருபுஜத்தைச் சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுஜத்தைக் குளிரவெட்டிப்போட்டாரோ
கொண்டைபரிகொடுத்த கோழியைப்போலானேனே
செட்டைபரிகொடுத்த செம்பருத்துபோலானேன்
உன்னைப்பரிகொடுத்து ஊதாரிபோலானேன்
அடிவானத்திடிபோல அழுதுபுலம்புகிறாள்
பேரண்டராட்சியாள் பிரண்டுபிரண்டழுதாள்

## பேரண்டச்சியழுகிறது கேட்டு தெய்வகன்னிகள் வருதல்

அந்தச்சமயத்திலே அழகானதெய்வகன்னி
ஏழுபேர்சந்தகன்னி இளங்கொடிமாதர்களும்
தீர்த்தங்களாடவென்று தெய்வகன்னிவாரார்கள்
அழுதகுரல்கேட்டு ஆயாசப்பட்டார்கள்
ஒருவர்க்கொருவர் ஒற்றுமையாய்ப்பேசுகிறார்
ஆரோதெரியாது அழுதுபுலம்புகிறாள்
இத்தனைநாள்வரையில் இவ்வோசைகேட்டதில்லை
அழுதகுரல்கேட்டு அப்புறம்போகொண்ணாது
அழுதவிடத்திலே யாவரும்போவோமென்று
புலம்புமிடத்திலே பொட்டெனவேவந்தார்கள்
ஆரடிமங்கையரே அழுதுபுலம்புவதேன்
பேரண்டராட்சியும் பிரண்டழுதுசொல்லலுற்றாள்
அரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுத்தியானேனே
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன் பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சே
ஏதென்றுநானுரைப்பேன் என்னுடைய அக்கமாரே
ஆரோவொருபண்டாரம் அரண்பதிக்குப்போறான்காண்
வாடியென்றும்போடியென்றும் வம்பாகப்போசினானே
சொல்லாததுஞ்சொல்லியே சேர்ந்துஅணையவந்தான்
புருஷனுடனுரைத்தேன் போய்க்கேட்டார்சங்கமனை
என்-கணவனைக்கொன்றுவிட்டு கடிகியேபோனார்காண்
மங்கிலியப்பிட்சை வரங்கொடுத்துப்போங்களம்மா
என்றவுரைகேட்டு இபலானகன்னியர்கள்
ஆயாசப்பட்டுமெல்லே அதிகமனஞ்சலித்து

## தெய்வகன்னியர் அருச்சுனனைக்கண்டு இரக்கஞ் சொல்லல்.

---

சங்கமரைத்தேடியே நடந்தார்கள் தையலர்கள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தகற்றவரே
நில்லும்நில்லும்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
போறவழிதனிலே பொல்லாங்குசெய்யலாமோ
சீவவதைபண்ணி சிவன்பதியேபோகலாமோ
ஆதிசிவன்வாழும் அரன்பதிக்குப்போனாலும்
கோரும்வரத்தைக் கொடுப்பாரோபரமசிவன்
ஐயையாசங்கமரே இப்படிக்குச்செய்யலாமோ
ஆகாதகாரியங்கள் அழிவுதேடிப்போகலாமோ
என்றுமறித்தார்கள் இளங்கொடிமார்கன்னியர்கள்
ஆணழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
சிவனூர்பதிக்குநான் தெரிசிக்கப்போறேனென்னை
அவள்-வந்துவழிமறித்து வார்த்தைகள்பேசினாளே
சொல்லாதுஞ்சொல்லியே சேர்ந்துஅணையுமென்றாள்
அவள்புருஷன்வந்தென்னை அந்தமாய்க்கொல்லவந்தா
எத்தனைசொன்னாலும் இரங்காமற்கொல்லவந்தான் (ன்
ஆயுதத்தினாலே அறுத்தேனவன்றலையை
என்மேலேகுற்றமுண்டோ ஏனோதடுக்குறீர்
இருவர்விசேஷமெல்லா மெதிராகக்கேட்டிடுவோம்
வாருமையாவென்றுசொல்லி வரவழைத்தார்சங்கமரை
பேரண்டராட்சசியாள் பிராண்டுமழுமிடத்தே
அருச்சுனராசாவை அழைத்துவந்துவிட்டார்கள் (வார்
தெய்வலோககன்னியர்கள் தேன்மொழிமாரேதுசொல்
இருவருடவார்த்தைதனை யெல்லாமிவர்கேட்டு
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
புதிதாய்த்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
பெண்ணின்பிழையைப் பொறுத்தருளும்புண்ணியனே
அடியார்கள்செய்தபிழை ஆண்டவனார்பொறுத்து
மங்கிலியப்பிச்சைதந்து மகாதேவர்பதிபோனால்
ஆதிசிவனார் அதிகவரமருள்வார்

எத்தனைப் பற்றியே இவனையெழுப்பிவிடும்
என்றுவணங்கியே இறங்கியே தெண்டனிட்டார்
அருச்சுனராசாவும் அதிகமனமகிழ்ந்து

## தெய்வகன்னியர் அருச்சுனனைக்கேட்க அருச்சுனன்மகிழ்ந்து தேவேந்திரனுக்கு ஓலையெழுதி அனுப்புதல்.

---

சோமக்குருத்தோலை சிக்கெனவேதான்வாரி
வாரியவோலையிலே வக்கணைகள்வைத்தெழுதி
என்னவென்றுவோலை எழுதுகிறானர்ச்சுனனும்
அமராபதியாளும் அம்பிரான்என்தகப்பா
தெய்வலோகமாளும் தேவேந்திரன்என்தகப்பா
மந்தாரக்குந்திபெற்ற வாள்விஜயனர்ச்சுனனும்
ஆதிசிவன்பாதம் அடியேனுங்காணவென்று
வாறவழிதனிலே வதைத்தெரிந்தேன்போண்டனை
அமராதுசெய்தான்காண் அறுத்தேனவன்றலையை
போண்டன்தன்னுயிரை பிர்மலோகத்திருந்தாலும்
இங்கேயிருந்து எமலோகம்போனாலும்
அவனுடையதன்னுயிரை அனுப்பிவையும்என்தகப்பா
எத்தனைப்பற்றியே இட்சணம்அனுப்பிவையும்
அல்லாதேயாமானால் அமராபுரம்வருவேன்
தேவேந்திரன்பதியை சிதறவேகொள்ளைகொள்வேன்
ஆடுகொள்ளைமாடுகொள்ளை அழகானவீடுகொள்ளை
ஐயாவுன்பட்டணத்தை அனைத்துமேகொள்ளைகொள்
என்றுஎழுதினான் இப்படியானவோலையிலே (வேன்
ஓலைசுருள்மடித்து உகந்துசெந்திரிக்கையிட்டு
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
அந்தச்சுருளோலைதன்னை அம்புவாயில்தான்கொடுத்து
ஐந்துமணிபசக்கி அம்பேநீபாயுமென்று
மந்திரஜபமிட்டு வாங்கிவிட்டானஸ்திரத்தை
மார்புளத்தானெடுத்து தோள்புளவாங்கிவிட்டான்
வருகுது அஸ்திரந்தான் வானுவகந்தான்தேடி
தேவேந்திரனுடைய தேசுமணிக்கம்பத்திலே
வாள்விஜயனஸ்திரத்தால் மணிபசைந்தாடிற்று
மணிக்கூண்டருகேவந்து வாங்கினான்அஸ்திரத்தை

### அருச்சுனன் ஓலையைத் தேவேந்திரன்பார்த்து எமனிடத்திற்சென்று சண்டபோரண்டன் உயிரைவாங்கி அனுப்புதல்.

---

செந்திரிக்கரைஓலைச்சுருள் தேவேந்திரன்விரித்து
எழுதியபாசகத்தை இந்திரனுந்தான்படித்தான்
அதிலிருக்கும்லட்சணத்தை யாவுமறிந்துகொண்டான்
இக்கணமேதானெழுந்து தேவேந்திரன்வருவான்
எமபுரந்தேடி எமனருகிற்போய்ச்சேர்ந்தான்
கண்டானேயமனும் சடுதியெழுந்திருந்து
எதிர்கொண்டழைத்துமே இட்டுவந்தான் மாளிகையில்
ஏதுகருமமாய் இங்குவந்தீர்ராஜாவே
அத்திமரப்பூத்ததுபோல் அதிசயமாய்த்தோணுதுகாண்
என்றுமொழிகேட்டவரே துசொல்வாரிந்திரரும்
எல்லாருயிர்வாங்கும் எமதர்மராஜனேகேளும்
பொல்லாதபாவியவன் புகலும்பேரண்டனுயிர்
இங்குவந்ததுண்டானால் எந்தனுக்காய்த்தயவுபண்ணும்
என்றுவுபசரணை இரக்கமாய்த்தானுரைத்தார்
செக்கிலேபோட்டு திருப்புகிறான்னேரம்
என்னையும்புண்ணாக்கா யேற்படுத்தும்போதையிலே
பேரண்டன்தன்னுயிரைபோட்டேனவேதான்கொடுத்தா
மாபாதகனுயிரை மைச்சிமிளிலேயடக்கி (ர்
அப்புவாய்ச்சனிலடக்கி அனுப்பினிந்திரனும்
வாய்வேகமாகவே வந்ததுஅர்ச்சுனர்முன்

### அருச்சுனன் பேரண்டனுக்கு உயிரளித்தல்.

---

மைச்சிமிளைத்தான் திறந்து வல்லுயிரைமாற்றினான்
வெண்ணிழுதான்போட்டு வேறுபட்டதலையெடுத்து
அறுத்ததலைமுண்டமும் அனைத்துந்தண்ணீர்தெளித்தா
தட்டியெழுப்பினான் தன்னுடையபொற்பிரம்பால் (ன்
தூங்கிவிழித்தவன்போல் திடுக்கிட்டெழுந்திருந்தான்
ஆரடாபண்டாரம் அறிவுகெட்டசங்கமனே
என்றுஎழுந்தானே இப்பாவிபேரண்டனும்
எழுபேர்கன்னியர்கள் இளங்கொடிமாரேதுசொல்வார்
ஆங்காரரட்சதனே ஐயரைச்சரணம்பண்ணும்

மூக்கோடே மூக்கணைந்தால் மூச்சைநெளிந்திருப்பே
மார்போடே மார்பணைந்தால் மகாவிடாய்தீர்ந்திருப்பே[ன்
தோளோடே தோளணைந்து சுகங்களைத்திருமையா [ன்
வாருமென்று சொல்லி மறித்தாளே ஏலகன்னி
வாளைப்பறித்தானும் வண்ணமுகம்பாரானும்
என்னென்றுசொன்னாலும் வேறுமுகம்பாரானும்
சிவனைமறவாமல் சிவன்மேலே தியானமானான்
அரனைமறவாமல் அரன்மேலே தியானமானான்

ஏலகன்னி அருச்சுனனைக்கோடுகிழித்து ஆணையிட்டு நிறுத்தல்.

---

ஏலகன்னிமாது இளங்கொடியாள்கோபமானாள்
ஏழுகோடுகீறிக்கிழித்து இங்கேநீர்நில்லுமென்றாள் [தே
உன் - குருவின்மேலாணைகாணுங் கோடுவிட்டுப்போகா
ஐவர்மேலாணைகண்டாய் அடிவிட்டுப்போகாதே
தம்பிதமையன்மார் தாய்மேலே ஆணையிட்டாள்
ஆணையிட்டுஏலகன்னி அரண்மனைக்குப்போய்ச்சேர்ந்தா
மாளிகைவாசலுக்குள் மண்டபத்தில்நின்றிருந்தாள் [ள்
அவன் - வருவதற்குள்ளாக வாள்விஜயனேதுசெய்தான்
எண்ணதுமெண்ணியே ஏதேதானினைப்பான்
ஆரைநினைத்தானே அளவற்றசிந்தையிலே
எவரைநினைத்தானே எண்ணமுற்றசிந்தையிலே
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகமெல்லாம் வேறுமுகமாகுதையா
எவரைநினைத்தாலே இந்தவேளைகாத்திடுவார்
ஆபத்தைக்காப்பதற்கு ஆராலேஆகுமென்று

கோட்டில்நிற்கும் அர்ச்சுனன்காளியைத் தோத்திரம்பண்ணல்.

---

அந்தவனக்கன்னியரை அருச்சுனன்தானினைந்தான்
குலிசபாலியம்மா சுந்தரிதுர்க்கையரே
சண்டப்பிடாரியம்மா சங்கரீயோகவல்லி
நன்றாப்பிடாரியம்மா வைக்காதிதுர்க்கையரே
ஆபத்துவேளையிலே ஆதரிக்கவேணுமம்மா

## அருச்சுனன் காளியை நினைக்க காளிவந்து வரலாறு வினவல்.

---

என்று நினைக்கானே இயலானகாளியம்மை
வாள்விஜயன்தான்வருந்த மாகாளிதான்வருவாள்
டேகையொருகையில் டமாரமொருகையில்
வாளுமொருகையில் வில்தடியொருகையில்
அம்புவில்லுங்கைபிடித்து ஆயுதமாகவந்தாள்
ஆரடாதம்பிநீ அடவியிலேயென்னை நினைத்தாய்
ஊரேதுபேரேது உன்னுடையவண்மையென்ன
என்றவள்கேட்கையிலே யிறங்கிசரணமிட்டான்
ஆமென்றுகேட்டாயே ஆச்சியரேசொல்லுகிறேன்கேள்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களைவருண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவரில் அருச்சுனராஜனென்பேர்
மாயவனார்மைத்துனன் வாள்விஜயனென்பேரும்
ஆதிகைலாசம் அரன்பதிபோறேனம்மா
பரமனைநோக்கியே பாரதவஞ்செய்யதான்
போறவழிதனிலே பொற்கொடியாளோர்கன்னி
கலியாணம்பண்ணென்று கட்டியென்னைமறித்தாள்
கோடுகிழிக்குளென்னைக் குறுக்கேதடுத்தாளே (டாள்
ஆணையிட்டுயென்னைமறித்து அரண்மனைக்குப்போய்விட்
மறுபடியும்வாறேனென்று மாளிகைக்குப்போய்விட்டாள்
ஆகையாலென்தாயே அபயமிட்டுஉனையழைத்தேன்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாள்சுயம்பரியும்

## காளியம்மன் அருச்சுனனை ஆணைவிடுவித் தனுப்புதல்

---

அஞ்சாதேயென்மகனே ஆணையிட்டேன்தோஷமில்லை
மூக்காலுந்தோஷமில்லை முத்திரையைநீகழற்றி
நீகழிச்சமுத்திரையை நிலந்தனிலேவைத்துவிடும்
இந்தவனங்கடந்து என்னைநினைத்தாக்கால்
உந்தனுடமுத்திரையை உனக்கேதாஞ்செய்வேன் (யன்
என்றுசொல்லிக்காளியம்மாள் ஏகிவிட்டாள்வாள்விஜ
தரித்திருந்தமுத்திரையைத் தாயாரின்கைக்கொடுத்தான்

## காளி அருச்சுனன்போல்நிற்பதை ஏலகன்னி கண்டு தான் அலங்காரப்பண்ணிக் கொள்ளல்

---

வாள்விஜயன்போனபின்பு மாகாளிபெண்ணசெய்தாள்
அருச்சுனனைப்போலாக அங்கேவடிவுகொண்டாள்
காவிநாசாம்பரமுங் கட்டி அரைதனிலே
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
வாள்விஜயன்போலேயறைப்பிலே நின்றாளாம்
இப்படிக்குகாளி யிருக்கின்றவேளையிலே
ஏலகன்னிமாது இளங்கொடியாளேது செய்தாள்
மஞ்சள்குளித்தாள் மைபெழுதிப்பொட்டுமிட்டாள்
வாரிமுடித்தாளாம் மான்சவுரியுட்சொருகி
கொண்டைக்கழகாக கொண்டைமயிர் தான்முடித்தாள்
சந்திரபிறைசூரியபிறை தலையிலணிந்தாளாம்
ஆண்மயிலும்பெண்மயிலும் அழகாகத்தான்முடித்தாள்
முத்தாலேசுட்டியும் முன்னாலேதொங்கவிட்டாள்
காதுக்குபொன்னோலை கைக்குவளையலிட்டாள்
செண்பகப்பூநாசியிலே சேர்த்தணிந்தாள்மூக்குத்தி
தோள்வத்திலைகவத்தி தொடுத்தாள்ரவிக்கைதன்னை
கண்டசரமாய்க்கல்புதைத்தபோதிரமாம்
கொத்துசரப்பளியாம் கோத்தமுத்துத்தாழ்வடமாம்
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
சல்லாப்பின்னல் தாழ்வடமாம் தாயித்துபேரொளியாம்
கடகஞ்சரிபவளங் கைநிறையபொன்வளையல்
தண்டைகொலுசுடனே சதங்கையும்பாடகமும்
காலாழிபீலி கல்லணையாம்புல்லணையாம்
அரைக்கிசைந்தஒட்டியாணம் அலங்காரம்பண்ணாளாம்
பொன்னிழைத்தபட்டாடை பூவாடைதான் தரித்தாள்
சாந்துசவ்வாதுடனே சந்தனமும்பூசினாள்
மருவுமருக்கொழுந்தும் மல்லிகைப்பூமுடித்தாள்
வாசனைபரிமளிக்க வாராளேயேலகன்னி
ஆரடிதாதி அலங்காரத்தோழிகளே
எடுத்துவாராகதண்டி இட்சணமேபோகவேணும்
தாதிமாரோடிவந்து தண்டிகைகொண்டுவந்தார

ஏறினாள் தண்டிகையை எடுத்தார்நெடுங்குடையை
சங்கமர்தானிருக்கும் தாவுகேடிவாறாராம்
பல்லக்கைவிட்டிறங்கிப் பாதஞ்சரணமென்றாள்
ஆணையிட்டேன்தோஷமில்லை ஆண்டவனேவாருமென்
றேறினார்பல்லக்கில் இயலானசங்கமரும் (றாள்
ஏலகன்னிதானும் ஏறினாள்பல்லக்கில்
மாளிகைவாசலிலே வந்திறங்கினாராம்
ஆசனத்தின்மேலே அமர்ந்தாளேஏலகன்னி

ஏலகன்னி அருச்சுனனுக்கு விருந்திடச்
சமயல்பண்ணல்

———

இளங்கொடிமாதரை ஏலகன்னிதானழைத்து
அடிசிற்சமையுமென்றாள் அரண்மனையிலெல்லவர்க்கும்
சர்க்கரைப்பால்போஜனங்கள் சமையுங்கள்மாதர்களே
பஞ்சணைமெத்தையும் பள்ளியறைஜோடியுங்கள்
இவ்வார்த்தைசொல்லி இருந்தார்கள்தோழியர்கள்
நித்தமுறைசெய்யுஞ் சித்தினிதாதியர்கள்
இந்தமுறைஎங்களது என்றெழுந்தார்கள்
அடுப்புமெழுகுவார் அட்சதைக்காப்பிடுவார்
வெங்கலப்பானையிலே பன்னீருலைசாய்ப்பார்
பால்சம்பாவரிசி பதிங்கலந்தான்களைந்து
கொதிப்பாற்றியேயிறக்க கொப்பெனவேதான்சமைத்தார்
வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பரிவார்
ஈழப்பலாக்காய் இளமுள்ளுபோக்கிடுவார்
கொத்தவரைக்காயதனைக் கூட்டியரிந்திடுவார்
செப்பொனவரைக்காய் சேர அரிந்திடுவார்
பாவற்காய்தானரிவார் பரங்கிக்காய்தானரிவார்
இளஞ்சுரக்காய் இளந்தமர்த்தைதானரிவார்
தேங்காய்திரிகிடுவார் மாங்காயரிந்திடுவார்
பாம்புப்புடலங்காய் பாகரிபீர்க்கங்காய்
பிஞ்சுமுருங்கக்காய் பேரானகொத்தவரை
சுண்டக்காய்வண்டக்காய் சுத்தமுள்ளமுள்ளாங்கி
வள்ளிக்கிழங்குகளும் வாழைத்தண்டுகீரையுடன்
சிறுகிழங்குசிறுவள்ளி சிறப்பானசேமத்தண்டு
கருணைகாராக்கருணை கா[illegible] ஆள்வள்ளியும்

அரைக்கீரை சிறுகீரை அத்திமுருங்கக்கீரை
முன்னைமுசுட்டை முக்குரண்டைக்கீரையுடன்
காரைபிரண்டையும் கடற்கீரையுள்ளதுவும்
பொங்கிஞரிளக்கீரை பெருமைகொத்தமல்லி
கடலையுந்துபச்சை காராமணிப்பருப்பும்
துவரைதொவரையொடு அநேகஞ்சிறுபருப்பும்
கொள்ளுடனேஎன்றுகங் கோதுமையுங்கலந்து
பத்துவகைத்தப்பளமும் பாங்கானகூட்டமுது
பத்துவகைப்பச்சடியும் பாங்கானகீரையுடன்
புளிக்கீரை துவர்க்கீரை பிரட்டினகீரையுடன்
ஆயிரங்கெட்டு அறிக்கறிபொறிக்கறியும்
ஐன்னூறுவகைக்குழம்பும் அடவுடனேதான்சமைத்து
காரமுப்பும் கலந்த அறுசுவையும்
புத்துருக்குநெய்த்துளியைப் போதவேதான்வார்த்து
மிளகப்பொடிபோட்டு மணிச்சீரகம்போட்டு
சீரகமும்வெந்தயமும் சீராகத்தான்போட்டு
கருவேப்பிலையும் கறிக்குத்திட்டமாய்ப்போட்டு
மையுஞ்சுசையுமென்ற தனித்தனியேதானமணக்க
மணக்கமணக்கமென்ன மாதர்க்குப்புறையேர
தாளித்திறக்கினர் தர்மரவர்கையாலே
செம்பொன்பிரியணைமேல் சேரஅடுக்கினர்
வரியகாய்சேர்ந்த உகமைகளைச்சொல்கிறேன்கேள்
இஞ்சிபெலுமிச்சை இபலானதயர்த்தையும்
நாரத்தைகிச்சிலியும் நல்லகடுக்காயுடனே
மூங்கில்குருத்துடனும் முற்றவள்ளிக்கிழங்கு
அத்திக்காய்மாவுலிங்கம் அழகானதூதுவளை
வில்வக்காய்சுக்கங்காய் விளாம்பிஞ்சுப்பசடியாம்
சுண்டைக்காய்களாக்காயும் சுருக்கானமுள்கருணை
மாங்காய்முதலான மற்றுமுள்ளஊறுகாயும்
வத்தல்வகைசேர்ந்த வகைமானங்கேளுங்கள்
ஆதண்டங்காயும் அரிதானசுக்கங்காயும்
பாவக்காய்கோவக்காய் பச்சைமிளகாயும்
சுக்கங்காய்தூதுவேளை சுருக்கானபாவற்காய்
அறுசுவைவாக்கமுடன் அற்புதஊறுகாயும்
பழவகைகள்தான்சேர்த்த பலவகையைத்தான்கேளும்
மாம்பழம்வாழைப்பழம் மலையின்பலாப்பழமும்

செவ்வாழைகரிவாழை இரண்டகொட்டைவாழையும்
மாதுளைகிச்சிலியும் மாவொட்டுமாம்பழமும்
அன்னாசிபருநெல்லி அழகுகொய்யாப்பழமும்
தமரத்தம்பழங்களும் தலைவிரித்தமாதளையும்
மற்றுமுண்டானபழ வகையெல்லாஞ்சேர்த்தார்கள்

ஏலகன்னிக்குத் தாதிகள் பள்ளியறை

சோடித்தல்

---

அதிலேயொருதாதி ஆனைக்குதானெழுந்து
பள்ளியறைதான்திறந்து மைக்கிளியாள்கட்டிலண்ணி
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரச்சுவர்பூசி
கண்சுமன்றுடைய நவவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேபணைகோலி
காம்பரிந்தமல்லிகையைக் கட்டிலின்மேலேசொரிந்து
கண்ணாடிசல்லிகட்டி கவரிமானசங்குவிட்டு
மாவிலைதோரணமும் மல்லிகைமாலைகட்டி
எங்குமலங்கரித்து யேந்திழைமாரோடிவந்து
ஏலகன்னிமுன்னாலே இளங்கொடியார்தெண்டனிட்டார்
அடிசல்சமைத்ததென்று ஆரணங்குதெண்டனிட்டார்
கெண்டியிற்றீர்த்தமது கொண்டுவந்துமுன்னேவைத்தாள்
ஏலகன்னிராசகுமரும் எழுந்திருவருமாய்
கைபூசிக்கொண்டு கடிகிபோயமர்ந்தார்
வாழையிலைபோட்டு வரிசையுடன்நீர்தெளித்து
இட்டாரேபோசனங்கள் இருவருக்குமாக
பச்சென்றபழவகையும் பச்சடியும்பாலித்தார்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
காராவின்நெய்வார்த்து கடுகிப்புசியுமென்றார்
சிமிட்டிமுழிப்பளவில் செகமாதாகாளியம்மை
வைத்தபொருசாதமெல்லாம் மாயமாயுண்டுவிட்டாள்
மற்றுமொருக்காலே வட்டித்தார்போசனங்கள்
மறுபடியும்போசனத்தை மாயமாயுண்டுவிட்டாள்
ஆயிரம்பேருக்கு சமைத்தஅடிசிலெல்லாம்
ஐயமொருவருக்கு அன்புடனேவட்டியென்றாள்

போகசெலவுதாராய் போய்வாரேன்பெண்மயிலே
ஆணையிட்டாலல்லாது அடியேன்செலவுகொடேன்
என்றதுகேட்டுமே ஏதுசொல்வான்வான்விஜயன்
ஆணையிட்டுத்தந்தாளே ஆரணங்கைவிவாகஞ்செய்ய
மாதாசெல்வுதர வான்விஜயன்போய்நடந்தான்
அந்தவனங்கடந்து அப்புறம்போகலுற்றான்
பத்தாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
பேரண்டவனம் முற்றிற்று

---

## II-வது சபாமிருக வனம்.

---

அந்தவனத்தைவிட்டு ஐவர்பஞ்சபாண்டவர்கள்
கூடைதலைமேலே குடிவார்க்கனாகத்தில்
கோலிவைத்தசிராடு கூடைதலையேவைத்தார்
மன்னிவைத்திமாடு வனமேகுடிபுகுந்து
காடுசெடிகடந்து கரியமலைதான்தாண்டி
சபாமிருகந்தானிருக்கும் தனிவனத்திற்போனார்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அங்கேகுடித்தனமாய் ஐவர்கள்தானிருந்தார்
இப்படியாகச் சிலநாளிருக்கையிலே
சபாமிருகவனந்தனிலே தனஞ்சயனப்போது
வெள்ளானைவனந்தனிலே வில்விஜயன்வாருனும்
உலகமதிர்ந்திடவே உத்தமனாய்வாருனார்
ஒருவன் அரனேயென்ன உலகம் அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
சிவசிவாவென்றுசொல்லி தொனித்தானேசங்குதனை
சங்குதொனிகேட்டு சபாமிருகந்தானெழுந்து
வால்கிளப்பிகுமாளமிட்டு வருகுதுவெள்ளானை
தன்னிழலைப்பார்த்து தானேறிமத்தானை
கொம்பினால்மலையைபந்து குத்திக்கிளப்பிவிடும்
அருச்சுனரைக்கொல்லவென்று ஆனைவருகையிலே



சிவபெருமானுடைய நந்தவனக்காத்திருந்த பிராமணன்பார்வதி
பி[illegible]ளைக்காவற்பெண்ணை இச்சித்ததனாலுண்டான சாபம்விமோ
சனமானது.

## அருச்சுனன் யானையைக் கொல்லுகிறது

கண்டானவ்வாள்விஜயன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்லைத் துதாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அர்த்தசந்திரபாணமெடுத் தஸ்திரத்தை உச்சரித்தான்
மதயானையைக்கொல்லவென்று மார்புளவாங்கினான்
அருச்சுனன்விட்டதொரு அர்த்தசந்த்ரபாணமது
மதயானைதன்னையே வகுத்ததுஇருபிளவாய்
விரிட்டுவிழுந்ததே விஜயன்தன்கையால்

## அருச்சுனன்கையினால் விழுந்தயானை ஒரு பிராமணனாக வந்தது

ஆனைமடிந்திடவே அதிலொருபிராமணன்தான்
பஞ்சாக்கப்பிராமணனாய் பார்ப்பான்வெளியானான்
கண்டானே அருச்சுனனும் கடுகிப்பிராமணனை
ஒரும்பிராமணரே மதயானைமுழுங்கிற்றோ
ஆறறகேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
தெய்வலோகந்தன்னிலே சிவனுடையபூங்காவனம்
ஐயர்பூங்காவனத்தில் அதிகாரமென்னதுகாண்
அம்மைப்பூங்காவனத்தில் அலங்காரப்பெண்களுண்டு
அம்மைவனத்தார்கள் ஐயர்வனம்போகொணாது
ஐயர்வனத்தார்கள் அம்மைவனம்போகொணாது
ஒற்றைஒருநாளில் உச்சிதத்தைப்பார்ப்போமென்று
அம்மைவனங்களிலே அதிகாலைபோகையிலே
ஆயிரப்பெண்களிலே அதிலேஒருகாதி
கண்ணுக்கினியபெண்ணை கண்டாசைபட்டேனே (ன்
பார்த்தாசைப்பட்டேனே பைங்கிளியைக்கைப்பிடித்தே
என்னைத்திமிறிவிட்டு ஈஸ்பரியாள்பக்கஞ்சென்றாள
ஈஸ்பரியாள்தன்னுடனே இச்சேதியுரைத்தாள்காண்
அம்மையதுகேட்டு ஆதிசிவன்பக்கஞ்சென்றாள்
உமையவளதுகேட்க உம்பர்பிரான்பக்கல்வந்து
ஐயரேஉன்வனத்தில் அதிகாரஞ்செய்கிறவன்
எந்தன்வனக்கன்னியரை இவன்பிடிக்கஞாயமுண்டோ
என்றுமிகச்சொல்லுகையில் ஈஸ்பரனுந்தான்கேட்டு
[illegible]வாவழைத்து ஈயந்தார்பெருஞ்சாபம்

என்னுடையசாபமது எப்போதுலையுமென்றேன்
ஆதிகைலாசம் அருச்சுனன் வருகிறான்
அருச்சுனனைக்கொல்லவே ஆங்காரமாய்ப்போகையிலே
அருச்சுனன்கோபமுற்று அப்போதேகொன்றிடுவான்
என்றதுபோல் நீரும் என்சாபம்போக்கிவிட்டீர்
வாருமென்றிருவருமாய் வனத்திலேபோனார்கள்
போகப்பிராமணனும்புதுமையொன்றுசொல்லலுற்றான்

அருச்சுனற்குப் பிராமணன் குயவன்

வரலாறு கூறுதல்

———

ஆனாற்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
செப்புமொழிதவறான் திருநீலகண்டரவர்
கோடுகடவாதார் குயவன்குயத்திலாரும்
இப்படியாக இவரிருக்கும்நாளையிலே
மகாராஜன்வாசலிலே மங்களகாரியத்தால்
கோவுங்குயமுட்டி கொண்டுவாவென்றுரைத்தார்
அக்ஷணம்நீலகண்டன் அனேகமுட்டிசொப்பனிட்டு
பொன்போலிழைத்துமே போட்டான்பெருஞ்சூளை
சூளைகலைந்து சுட்டசிறுமுட்டிகட்டி
மகாராஜன்வாசலிலே வைத்தானேகொண்டுவந்து
மகாராஜன்தான்பார்த்து மகிழ்ச்சியாய்க்குயவனுக்கு
சொர்ணமணிமுத்தும் துகிலாடையுமெடுத்து
நீரிக்லாப்பூஷணத்தை நீலகண்டனுக்கருளி
போய்வாருமென்றுமே போகச்சிலவருள
வெகுமானம்பெற்றுமவன் வீதிவருகையிலே
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
காற்றுமழையுங் கடிகிவருகுது
தேவதாசிவீதி தெருத்திண்ணையோரத்தில்
வந்துயிறங்கினான் வான்மழைபோகளவும்
அந்தச்சமயத்தி லவ்வீட்டுத்தாசியவள்
போஜனமுண்டுமே பொற்கலத்தைத் தான்கழுவி
சன்னல்கதவைபவள் தாள் திறந்துஊற்றினாள்
மண்ணுடை யான்தன்மேலே வந்துவிழுந்தது
சம்போசிவசங்கரனே சலந்தெளித்தாரென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதாசியவள்

அச்சப்பயந்துமே ஆரென்றுகேட்கலுற்றாள்
மன்னனுடையான் தானசானும் வந்தேனிதுவழியாய்
வான்மழைக்குமாதரசே வந்துஒதுங்கினேன்
ஆரோதெரியாது அள்ளிஜலந்தெளித்தார்
என்றதுகேட்டுமே ஏலப்பசுங்கிளியாள்
மெத்தப்பயந்துமவள் வீட்டோரங்கொண்டுசென்று
அப்பேதைகமாட்டிவைத்தாள் ஆனந்தமாயனுக்கு
ஈரமுலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
ஆபரணமிட்டு அலங்காரப்பண்ணினாள்
போஜனமிட்டுமவன் புட்பமுந்தான்கொடுத்தாள்
சந்தனமுந்தாம்பூலம் தான்கொடுத்தாள்தையலரும்
அன்றையராத்திரி அங்கிருந்துகுயவனவன்
மற்றுநாட்காலையிலே வந்தானேவாழ்மனைக்கு

## குயவன் மனையாளுக்குங் குயவனுக்கும் தர்க்கம்.

---

குயவனுடதேவி கொம்பனையாள்கண்டாளாம்
கன்னிபுருஷனைக் கண்ணீரைத்தானுகுத்தாள்
கோவென்றசத்தமுடன் குமுறியழுதாளாம்
ஆரோடேபோகம் அமர்ந்திருந்தீர் மன்னவரே
என்னைவிட்டுப்பிரிவதற்கு என்னமனம்வருமோ
வேசியர்கள்வீட்டிலே விளையாடி வந்தீரோ
உன்னுடனேபேசேனே உன்முகத்தைப்பாரேனே
பெற்றதகப்பனைப்போல் பிரியமுடன்பார்த்திருப்பேன்
குருக்களுடமனை கொள்ளைகொண்டுபோனவர்கள்
தாயில்லாப்பிள்ளைகளை தலையிலடித்தவர்கள்
சிசுவதைபண்ணவர்கள் ஸ்ரீவதைபண்ணவர்கள்
பெரும்பாவிசேருகிற பெருநரகில்சேர்ந்திடுவேன்
என்றுசபதமிட்டாள் இளங்கொடியாளக்குயத்தி
இவ்வார்த்தைகேட்டுமவன் எரிபறந்துநீலகண்டன்
கண்கள்சிவந்துமே காந்தாளப்பட்டானாம்
மெய்யானவார்த்தைதனை விளம்பினேன்மெல்லியற்கு
பொல்லாதவார்த்தையினாற் புலம்புகிறாளே அதுசெய்வேன்
என்றுமனஞ்சலித்து எதுசொல்வான்நீலகண்டன்
இன்றுமுதலாக இனிநெடுநாள்வரைக்கும்
உன்னுடனேபேசினால் உனக்குத்தகப்பனென்றான்

அவ்வார்த்தைகள்ளினால் அனேகபாவஞ்சொல்லுகிறேன்
அபயமென் றுவந்தவனை அவிரியாயப்பண்ணனபாவம் (ன்
பெரும்பாவிசேருகிற பெருநரகம்சேர்த்திடுவேன்
என்றுசபதமிட்டான் இயலான நீலகண்டன்
அப்படியாக அனேககாலந்தானிருந்தார்

## ஆதிசிவனும் பார்வதியும் பண்டாரவேஷமாகவந்து இருவரையும் ஒருமைப்படுத்தி மோட்சமீதல்

---

ஆதிசிவனுக்கும் ஆதிபரமேஸ்வரிக்கும்
பொறுத்துமுடியவில்லை பொல்லாத பதமிது
இருவரையும்பேசிவைக்க ஈஸ்பரனார்வந்தாராம்
மெத்தப்பெரியவராய் மேல்நாட்டுசங்கமராய்
ஆண்டிபெரியவராய் ஆண்டவர்வடிவெடுத்தார்
அம்மையுமையாளும் ஆண்டிசசிவடிவெடுத்தார்
விநாயகன்வீரபத்ரன் வேல்பொருதுங்கந்தனுமே
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கைலாசமான்தோலும்
சடையுஞ்சடைமுடியுந் தம்பிரானைப்போலாக
நீலகண்டனுக்காக நினைத்தார் திருவோடு
கதிரோனைப்பத்திரமாய் கடுகெனவேகைபிடித்து
வாரார்பரமசிவன் வனமாய்வனங்கடந்து
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
நீலகண்டன்வாசலுக்கு நிமலருமவந்துவிட்டார்
ஆரடாபத்தா நீ அறிவுள்ளபுண்ணியனே
என்பிள்ளைபெண்சாதி யிங்கிவர்களெல்லோரும்
பசியோடேதாங்கள் வந்தோம் பசியாற்றி நீரனுப்பும்
பிள்ளைபசியாற்றில் புண்ணியங்கள்வேணதுண்டு
குழந்தைபசியாற்றில் குமாரனைப்பெற்றிடுவாய்
உந்தனுறன்முறையார் உன்னுடையபெண்சாதி
வாழ்ந்துசுகமாவீர் மகாதேவர்புண்ணியத்தால்
என்றுலோசங்கமரும் ஈய்ந்துவிட்டார்வெண்ணீறு
வாங்கியணிந்துகொண்டு வணங்கியேதெண்டனிட்டான்
நல்லதுசங்கமரே நான்செய்தபாக்கியத்தால்
வந்தீர்களிப்போநான் வாழ்ந்துசுகமானேன்

பத்துநாழிகைப்பொழுதில் பசியாறநீங்கள்வந்தால்
போசனமுண்பீர்காண் போய்வாருஞ்சங்கமரே
என்றதுகேட்டுமெள ரேதுசொல்வார்சங்கமரும்

ஈஸ்வரர் நீலகண்டன் மனஞ்சோதித்தல்

---

நான்-போசனம்பண்ணுகிற பொன்னான திருவோடு
இங்கேவைத்துநான்போறேன் எடுத்துமறவாமல்வையும்
ஊர்திரிந்துநான்வாறேன் உன்வசத்திருக்கட்டென்றார்
என்-பாட்டனார்நாளையிலே பண்ணின திருவோடு
பாத்திரம்போய்விட்டால் பழிவந்துநேருமென்றார்
என்றதுகேட்டு ஏதுசொல்வான் நீலகண்டன்
ஆனாற்கேள்சங்கமரே ஐயா பெரியவரே
என்னுடையதேவியுடன் இவ்வார்த்தைநீருரைத்து
சாதங்கறிவகைகள் சமைக்கவேசொல்லுமையா
பாவற்பயிர்பந்தலின்மேல் பாத்திரத்தைவைத்துவையும்
அரண்மனைக்குள்நுழைந்து ஆச்சியரைத்தானழைத்து
மன்னனுடையான்வார்த்தைதன்னை மாதருடனுரைத்தார்
பந்தலின்மேலாகப் பாத்திரங்கள்வைத்ததின்பின்
பாத்திரத்தைப்பார்த்திரென்று பண்டாரந்தானடந்தார்
செப்பிநடந்தாரே திருநீலகண்டனவாழும்
அத்தெருவுதான்கடந்து அடுத்ததொரு திவந்தார்
ஆத்திமூலருகில் ஆதிசிவன்வந்தமர்ந்தார்
அந்தச்சமயத்தில் ஆதித்தன்போய்மறைந்தான்
சக்லோதேவிமகன் சூரியன்தான்மறைந்தான்
குயவனுடதேவியரும் குடிவாழ்க்கைசெய்திருந்தாள்
அனேகநெடும்போது ஆனபிறகாக
மன்னனுடையான்தானெழுந்து வாசலிலேவந்துநின்று
பாவற்பந்தலைப்பார்த்தான்பாத்திரத்தைக்காணுமென்று
தேவியெதிரில்வந்து திகைத்தாற்போல்நின்றுவிட்டான்
கைகட்டிநீலகண்டன கண்காட்டிகேட்கிறான் (ன்
ஆரணங்குமாதுகன்னி அறியேனென்றுரைபண்ணு
மனதுசஞ்சலமாக மண்ணெடுத்துப்பண்ணுகிறார்
பண்ணிருந்தாமெடுத்து பாத்திரம்பண்ணுகிறான்
கடு[illegible]போட்டு கவிழ்த்துவைத்தான்பந்தலிலே
ஜீவரும் அம்மையுமாய் ஆதிசிவன்வாராராம்

திருநீலன்மாளிகையில் சிவசிவாவென் றுவந்தார்
கடிகியே நீலகண்டன் கைக்குச்சலங்கொடுத்தான்
கைப்பூசிக்கொண்டு கடிகியேஉள் நுழைந்தார்
பாத்திரங்கொண்டுவந்தார் பண்டாரம்பார்த்துவிட்டார்
என்னுடையபாத்திரம் எங்கேயென்றார்சங்கமரும்
வைத்துநீர்போனபின்பு மாயமாய்ப்போச்சுதையா (ன்
ஆகையால்ஆண்டவனே அட்சணமேசெய்துவைத்தே
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும் (கை
என்-பாட்டனார் நாளையிலே பண்ணிவைந்தபாத்திரத்
ஏமாத்திமோசம்பண்ணி இல்லையென்றுசொல்லலாமோ
மகாராஜனிடத்தில்வழக்கைப்போய்ச்சொல்வோ
மடிபிடித்துசங்கமரும் வாராரேதானிழுத்து (மென்றார்
முடிமன்னன்றன் சபைக்கு முன்பாகவந்துசொன்னார்
பசித்ததென் றுசோறு கேட்டேன்பகலைக்குவாருமென்றார்
வச்சிரத்தாலிழைத்த மாணிக்கப்பாத்திரத்தை (ன்
இவர்கையில்நான்கொடுத்து இஷ்டரிடம்போயிருந்தே
வந்துபின்கேட்டாலே மாபாவிகாணேமென்றான்
ஆகையினாலேதான் அழைத்துவந்தேனும்மிடத்தில்
அதிதிபரதேசி யாருமில்லையெந்தனுக்கு
ஆண்டியுடைமையென்று அவரிடத்தில்சீர்கேட்டு
வாங்கியேதாருமென்றார் மகாராஜராஜாவே
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மகாராஜன்
ஆடாலேகண்டா அறிவுகெட்டபாதகனே
பரதேசியுடைமையைப் பறிக்கிறதுதருமமோடா
குயவன்குயத்தியரைக் கொப்பெனவேகேட்டுமென்றார்
வெள்ளிப்பிரப்பாலே சிபடியுமென்றார்
மாறிபடியுமென்றார் வந்தகுயவனைத்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தார்தலையாரி
எருக்கமலராலே எட்டியபடித்தாரே
உள்ளம்நடுங்கமேனி உதிரம்வடியுதங்கே
அப்போமகாராஜரிடம் ஆண்டியவரேதுசொல்வார்
இன்னஞ்சிலராஜன்னை இட்டுப்போறேனப்பா
கட்டவிழ்த்துவிட்டிடென்றார் கடிகில்லேகண்டனைத்தான்
அரண்மனையைத்தாண்டி அப்புறம்போகையிலே
ஆதிசிவனும் அங்கேமனமகிழ்ந்து
ஈசன்ரிஷபத்திலே ஈஸ்பரிசிங்கத்திலே

பேழைவயிற்றேனும் பெருச்சாளிவாகனத்தில்
கந்தர்மயில்மேலே கதித்தெழுந்து நின்றார்
தங்களுடைவாகனத்தில் சாமிகளுமேறிவந்தார்
வந்தாரெதிராக முன்னுடையான் கண்டுவிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கந்தெண்டனிட்டான்
குபவன்குபத்தியுட குறைகளைத்தீர்த்தாராம்
காட்சிகொடுத்துக் கைலாசம்போனாராம்
நீலகண்டன்பேறுபெற்ற நிலமாகுமிவ்வனந்தான்
என்றதுகேட்டு எதுசொல்வானருச்சுனனும்
புண்ணியவனத்திலே போய்ஸ்நானம்பண்ணிவந்தால்
எப்பாவந்தீரவே ஈஸ்பரனார்வரமளிப்பார்
என்று பொய்கைதனிலே பொட்டெனஸ்நானம்செய்து
சிவனை நினைந்து திருநீற்றுக்காப்பணிந்து
அரனை நினைந்து அள்ளியிட்டான்வெண்ணீறு
பஞ்சாட்சரமணிந்து பகவானைப்பூசைசெய்து
அரகரா அரனேயென்ன அடித்தானேஜெபகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானேசங்குதனை
ஒருவன்சிவனேயென்றார் உலகஞ்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அந்தவனந்தாண்டினான்
மற்றுமொருவனத்தில் வாராரிருவருமாய்
இந்தவனம் ஆருடையதென்றானிளவிஜயன்

சபாமிருகவனக்கடந்து ஊர்குருவிவனம் சேருதல்

---

ஊர்க்குருவிபேறுபெற்ற வனமென்றானுத்தமனும்
வாயில்லாச்சீவன் மரமேறுபட்சிதான்
எந்தவிதமாய்த்தான் ஈஸ்பரனைக்கண்டதுகாண்
அந்த அதிசயத்தை ஆண்டவனேசொல்லுமென்றார்

பிராமணன் அருச்சனனுக்கு ஊர்க்குருவி
வரலாறுகூறுதல்

---

அப்போபிராமணனும் அர்ச்சுனற்கேதுசொல்வான்
ஊர்க்குருவிபட்சி [illegible] ஒன்றுமாக
இந்தவனமதனி லிருந்தாவர் [illegible]
பிள்ளைகள்பெற்றிருக்கப் பெருங்காவலனாகியே [illegible] (ன்
போவார்வருவார்குஞ்சைப்போய் [illegible] கொள்வார்

இரைதேடிவருவதற்குள் எடுத்துக்கொண்டுபோவார்கள்
கூண்டிலிடமாகக் குருவிவந்துபார்த்தவுடன்
அழுதபுலம்பியே ஆயாசப்பட்டிருக்கும்
மறுகாலொருதரமும் மைந்தனுண்டாயிருக்கும்
பெண்குருவியானது புருஷனுக்கேதுசொல்லும்
என்புருஷா என்கணவா என்வார்த்தை நீர்கேளும்
நான்பெற்றபிள்ளையெல்லாம் நமனுக்கிரைகொடுத்தேன்
வேடனார்வருவாரெந்தன் பிள்ளைகொண்டுபோனார்
இப்போதுபிள்ளைபெற்றால் எவராகிலுமெடுப்பார்
ஆசைகள்தோணுகுது ஆணமகாபென்னைசொல்வேன்
எங்கேநான்பெற்றெடுப்பேன்எனக்கறியச்சொல்லுமென
ஆணுற்கேள்பெண்மயிலே அரணங்கேயொருவார்த்தை
இந்தவனத்திலே இங்கேகுளிகுளித்தால்
நமக்கு அன்னங்கிடையாது அன்னமேநீர்கேளும்
சமுத்திரக்கரையோரம் தாவுண்டுபிள்ளைபெற
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்லும்பெண்குருவி
அலைபெருகிதண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோய்வி
இப்போதும்பிள்ளைபெற்று ஏமாந்துபோவேனே [டுமே
என்றதுகேட்டு ஏதுசொல்லும் ஆண்குருவி
இவ்விடத்தில்பிள்ளைபெற்றால் யேதுகுற்றம்வந்தாலும்
சமுத்திரராஜருடன் சண்டைகள்செய்திடுவேன்
யுத்தங்கள்செய்திடுவேன் உன்பிள்ளைவாங்கிடுவேன்
என்று தலையிலடித்துமே சத்தியங்கள்செய்திடுமாம்
சபதங்கள்பண்ணினதை சமுத்திராசன்கேட்டு
இது எவ்வளவுளர்க்குருவி என்னுடன்சண்டைபண்ணு
சொல்லாதவார்த்தையைச் சொல்லுது சிட்டினங்கள் [ன்
ஆண்மையைப்பார்ப்போமென்றவ்வருணன்தானிருந்தா
அப்போது சிட்டினத்தில் அழகானபெண்குருவி
செத்தையைத்தான்பொருக்கி சிறுவீடுகட்டிடுமாம்
இருமுட்டையிட்டு இருந்து அடைகாக்க
பின்னுமடைகாத்துப் பெற்றதிருக்குஞ்சுகளை
கொப்பெனவேதான்பறந்து குழந்தைக்கிரைதேடும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
தாயுந்தகப்பனுந் தானில்லாவேளையிலே
சமுத்திராஜனவன் தண்ணீர்பெருகிவந்து
குழந்தையிரண்டையும் கொப்பெனவேகொண்டேகி

பாதாளந்தன்னிலே பத்திரம்பண்ணிறாம்
பூட்சிசமர்த்தாகளைப் பார்ப்போமென்றுதானிருந்தார்
அந்தச்சமையத்தில் அழகானபெண்குருவி
அழுந்தைக்கிரைதேடிக் கொண்டுவந்துபார்க்கையிலே
மக்களைக்காணாமல் மருகிப்புலம்புகுது
மார்பிலேயுந்தோளிலேயும் வண்ணமுகத்திலேயும்
அறைந்துபுலம்புகுது ஐயோமகனேயென்று
மக்களைப்பறிகொடுத்து மணமேலேதங்குவேனோ
மைந்தகளைப்பறிகொடுத்து வயிற்றெறிந்துசொல்லும்
பாவிகெடுத்தாயெத்தன் பாலகரைக்கொல்லவென்று
என்றும்பகையாளி யேற்பட்டாயெத்தனுக்கு
புதல்வனைப்பறிகொடுத்து புலம்புதுபெண்குருவி
ஐயைபோதெய்வமென்று அலையுதுபெண்குருவி
அந்தச்சமையத்தி லாண்குருவியேதுசொல்லும்
மனதுசலியாதே மக்களைவாங்கிதாறேன்
சமுத்திராஜருடன் சண்டைமிகச்செய்துமே
புதல்வனைவாங்கித்தாறேன் புலம்பாதேபெண்மயிலே
என்றெழுந்தது இபலான ஆண்குருவி
மூக்கினாற்பனைகிழித்து முனையாலெழுதுது
என்னவென்றோலையெழுதுதிட்டினந்தான்
காக்காய்க்குருவி கழுகுகள்பருந்துகளாம்
மாடப்புறாவாம் மயிலுங்குயிலினமாம்
காடைக்குருவிகளாம் கவுதாரிடேகைகளாம்
அன்னமயிலாழ்வாரும் ஆனமயினமும்
கூளிகழுகுமுகற் கோட்டானும் ஆந்தைகளும்
ஓலைகண்டநாழிகைக்கு ஓடியேவாங்களென்று
சமுத்திராஜருடன் சண்டைபண்ணபோகவேணும்
என்னுடனிருந்தார்களெல்லோரும்வாங்கவென்று
வருத்தியெழுதியே வாயசத்தைத்தானழைத்து
ஓலையைக்கொடுத்து உண்மைசிலதுசொல்லி
தெய்வலோகத்தாருக்கும் சேதிசொல்லிவாருமென
வாயுவேகமாகவே வருகுதுவாயசந்தான்
அவனியிலுள்ளவர்க்கும் அந்தரமுள்ளவர்க்கும்
செப்பித்திரும்புகையில் திருமாலருகிருக்கும்
ஆயருடவாகனம் ஆழ்வாரெழுந்திருந்து
மாயனைத்தெண்டனிட்டு வணங்கியேயேதுசொல்லும்

காடையொருவரிசை கவுதாரியொருவரிசை
புப்புள்ளொருவரிசை புருக்கொருவரிசை
உள்ளானொருவரிசை ஊர்க்குருவியொருவரிசை
நாரையொருவரிசை நாகணவாயொருவரிசை
கொக்கொருவரிசை கோட்டானொருவரிசை
அந்தச்சமுத்திரத்தில் அனேகவிதபட்சியெல்லாம்
அந்தப்புறங்களிலே அவ்வகுப்பாசேர்ந்திருப்பார்
அப்போதமரவர்களும் அயிராவதத்தோனும்
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவர்களும்
ஆகாயமார்க்கமதில் அந்தரமாய்நின்றுகொண்டு
பட்சிகள்நின்றிருக்கும் பாவனைபார்த்தார்கள்
எழும்பியே அந்தரமாய் எட்டிப்பறக்கிறதும்
தாழ்கவேபறந்து தண்ணீரில்தான்குதித்து
இருபக்கம்ரெக்கையிலே எடுத்துசலங்கொண்டுவந்து
பாரெல்லாம்நீர்தளும்ப பறந்துதெளிக்கிறது
அரைநாழிக்கொள்ளையிலே அடியோடேவற்றிவிட
சமுத்திரமானதெல்லாம் தண்ணீர்வரண்டுவிட
சமுத்திரராஜன் சகிக்கமுடியாமல்
தேவர்கள்தன்னுடனே செப்பிமுறையமிட்டான்
அந்தண்டபேரும் அனைவரும்வந்திறங்கி
சிட்டினத்தைதானழைத்து செப்புவார்தேவரெல்லாம்
உன்-தனையனைவாங்கிந்தாரோம் சமுத்திரநீருண்டுபண்
ணும்,எப்போதும்போலே நீர் ஏற்படுத்தும்சமுத்திரத்
தை,என்றுசொல்லப்பட்சியினமெல்லாமொருமித்து
மயிலையருகழைத்து வார்த்தைகளேதுசொல்லும்
கந்தருககுச்சொன்னராலும் கைவேலாலுண்டுசெய்வார்
என்றுசொல்லமயிலினங்களெல்லாமொருமித்து
வேலவனார்தன்பாதத்தில் விழுந்துமுறையமிட்டு
ஆண்டவனேயென்சாமி அடிபேறுமுடியாது
நர்த்தனைத்தாலிக்ஷணமே நீரும்பெருகிவிடும்
துமையேனைப்பற்றியே அலைகடலேஉண்டுபண்ணும்
என்றுபணிந்து இரங்கியேதொழுதுநிற்க

கந்தர்மனமகிழ்ந்து கடிகிபோவில்வளைத்து
வில்லெடுத்துநாரிபூட்டி வேலெடுத்துமந்திரித்து
அலைகடலில்நீரையெல்லாம் அம்பிலொருமூத்தாக
பூமியதிரவே போய்ப்பாயும்வேலிதுதான்
பண்ணிலுள்ளநீரையெல்லாம் வழித்தொருமுத்தாக
முத்தால்வளர்ந்து முனிந்துகடல்பெருக
சந்தோஷப்பட்டானே சமுத்திராசனவன்
குருவியுடபிள்ளையைக் கொண்டுவந்துதந்தாராம்
ஆதிசிவனாரும் அதிகவரந்தந்தாராம்
முப்பத்துமுக்கோடி முனிவர்தேவரெல்லாம்
சுகமாகச்செல்வத் துடனேயிருப்பீரென்று
வாழ்த்திவிடைகொடுத்து மகாதேவர்போய்நடந்தார்
ஊர்க்குருவிபேருபெற்ற ஓங்கும்வனமிதுகாண்
என்றதுகேட்டு எழில்விஜயராஜாவும்
உற்றுற்றுகேட்டு உள்ளமிகமகிழ்ந்தார்
அந்தச்சமயம் அருச்சுனராஜரிடம்
போகவிடைதாருமெனப் புகன்றான்பிராமணனும்
போய்வாருமென்றுசொல்லிபோகலுற்றான்போர்விசயன்

பதினொருவது ஊர்க்குருவிவனம்

முற்றிற்று

---

## 12-வது, காளபயிரவவனம்.

---

பன்னிரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
சோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
அந்தவனத்தைவிட்டு அப்புறம்போனார்கள்
காளபயிரவ வனத்திலேகாவலர்கள்
அங்கேகுடிக்கனமாய் ஐவர்குடியிருந்தார்
[illegible]

அருச்சுனன்செய்யுமந்த அருந்தவசுக்கம்பமதை
தவசுநிலைக்கம்பமதை சமுத்திரத்திற்போடுமென்றார்
அரைநாழிக்கெள்ளையிலே அதமாக்கிவாருமென்றான்
என்றதுதான்கேட்டு எழுந்தானேவாயுராஜன்
ஆயன்பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்தார்
கைமோசம்வந்ததென்றே கரியமாலப்போது
அருச்சுனராஜருக்கு அனர்த்தம்வந்தாளாச்சு
காக்கவேணுமெனறு கரியமாலோடிவந்தார்
மாயபபாய்வந்தாரே வாள்விஜயன்முன்னாலே
கண்டபோதுஅர்ச்சுனரே கைமோசம்வந்ததடா
ஆதிபரமசிவன் அதிகோபங்கொண்டாரே
வாயுராஜன்தன்னையிப்போ அனுப்பினார்மகாதேவர்
தவசுநிலைக்கம்பமதை சமுத்திரத்திற்போடுவாரென்
வாயுவுராஜனுக்கு வலுவாயிருப்பாயா
என்றதுகேட்டு எழில்விஜயனேதுசொல்வான்
உம்மையேநம்பியே உப்பரம்வந்தேன்
ஆசைச்சதமென்பேன் அன்னியனைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாதே
தோளிலிருப்பமாலை தொண்டழிந்துபோகாதே
பெட்டியிலேபூஷணம் பொருளைகுலையாதே
காக்கக்கடனுமக்கு கரியமாலெம்பெருமாள்
அண்ணருந்தம்பியரும் அனுப்பினார்உன்னைநம்பி
ஆரைநம்பிஇங்குவந்தேன் ஆதிகைலாசம்
என்னமாயிருந்தாலும் ஈஸ்வரன்மைந்தனுக்கு
வந்தவினைமாற்றி வரமருள்செய்யுமையா
என்றுவணங்கினான் இயல்மன்னவாள்விஜயன்
சிந்தைமனங்குளிர்ந்து ஸ்ரீராமரேதுசெய்தார்
தருமர்தம்பி அருச்சுனனானன் தவசுநிலைக்கம்பமது
வாயுராஜன்வந்தாலும் வலுமையாயசக்தினாலும்
ஆதிசிவன்வந்தாலும் அசைக்கவலித்தாலும்
தேவாதிதேவரொன்றாய்ச் சேர்ந்து அசைக்கினாலும்

அருச்சுனன்தவசுநிலை அசையாமலிருக்கவென்றார்
பாபவனும் வரங்கொடுத்து வந்துவிட்டார்கைலையிலே
ஆருமறியாமல் ஆதிசிவனருகில்வந்தார்
அந்தச்சமயத்தில் ஆங்காரவாயுராஜன்
மன்னும்விண்ணும்தானதிர வாரானேவாயுராஜன்
தெற்கேயிருந்து திசைவடக்குமுகம்நோக்கி
இறைந்துவந்துமோதினான் இளவிஜயன்தவசடியை
அப்புறத்துக்கப்புறந்தான் அசையாமல்தானிருக்கும்
மறுகாலொருதரமும் வந்து அறைந்தானும்
சாயாமல்நின்றது தவசுநிலைக்கம்பமிது
தன்னாலேயாகாமல் சஞ்சரிக்கமுடியாமல்
திரும்பினான்வாயுராஜன் சிவனுக்குச்சேதிசொல்ல
அருச்சுனனைப்பார்த்து அதிகப்பிரியமுமாய்
என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
அருச்சுனனுக்கு அஸ்திரந்தாரேனென்றான்
வாயுவாஸ்திரத்தை வாள்விஜயன்கைகொடுத்தான்
வாங்கிநமஸ்கரித்து வாள்விஜயனேதுசொல்வான்
எவரனுப்பிவந்தீர்காண் என்தவசைநீரழிக்க
என்றதுகேட்டு யேதுசொல்வான்வாயுராஜன்
ஆதிசிவனழைத்து அனுப்பினார்உன்னிடத்தில்
தவசுநிலைக்கம்பத்தை சமுத்திரத்திற்போடுமென்றார்
ஆஞ்ஞையாலிங்குவந்தேன் அசக்கினேன்கம்பமதை
என்னால்முடியவில்லை இளவிஜயாவுனைசெயிக்க
ஆதிசிவன்வந்திடுவார் அதிகவரந்தந்திடுவார்
என்றுநடக்கையிலே ஏதுசொல்வான்வாள்விஜயன்
உம்பர்பிரானுக்கு ஒருவார்த்தைசொல்லுமையா
என்னவென்றுசொன்னானெழில்விஜயனர்ச்சுனனும்
கிருபைவைத்துபாசுபதம் கிரீடிக்குத்தாருமையா
வேண்டும்வரங்கள்தனை விமலரேதாருமையா
கேட்டவரங்கள்தனை கிருபைவைத்துத்தாருமையா
வரந்தந்தாலொழிய மலையைவிட்டுப்போவதில்லை
தவசுநிலையைவிட்டுத் தனஞ்சயனும்போவதில்லை

ஆண்டவனேஐயாவே அசட்டையாய்நீரிருந்தால்
மண்டைபிளப்பேனென்று வாமதேவருக்குரையும்
தலையையுடைப்பேனென்று சங்கரற்குந்துரையும்
என்றுவிஜய னெடுத்துரைத்தானப்போது
வாழ்த்திவிடைபெற்று வருகிறான்வாயுராஜன்
ஆதிசிவனுக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மான்மழுதரித்ததேவ மலர்ப்பாதம்சரணமையா
அருச்சுனன்தவசழிக்க ஆண்டவனேமுடியாது
உம்பர்பிரானே உம்மாலுமாகாது
காட்சிதராவிடிலோ காண்டிபத்தாலடிப்பேனென்றான்
வரங்கள்கொடாவிடிலோ மண்டைபிளப்பேனென்றான்
என்றதுகேட்டு ஈஸ்பரனுங்கோபமானார்
கேட்டீரோமாயவரே கெர்வத்துடன்சொன்னது
மண்டையுடைக்கவும் வரம்வாங்கும்வல்லவனே
காண்டீபத்தாலடித்து கடிகிவரம்வாங்குவானே
தலையைஉடைப்பேனென்ற தனஞ்சயனைஇப்போதே
மண்டைதனையுடைத்து வல்லுயிரைவாங்கிடுவேன்
என்றுபரமசிவம் எறிபறந்துகண்சிவந்து
ஆரடாஇடிபகவான் அதிவிரைவாய்வாருமென்றார்
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாயிடித்து
அருச்சுனன்றன்றலையை அறுபதுசுக்கலாக்கி
கொன்றுஅதமாக்கிக் கொப்பெனவேவாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆங்காரஇடிபகவான்
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துநடுக்கமுற
எழுந்தானிடிபகவான் ஏழுலகந்தானதிர
அந்தச்சமயத்தில் அரிராமர்ஓடிவந்தார்
அருச்சுனாபார்த்திபா ஆதிசிவன்கோபமானான்
இடிபகவான்தன்னை ஈஸ்பரனனுப்பினார்
தலையைஉடைக்கவென்று தான்வாரானிடிபகவான்
தப்பித்துக்கொள்ளுமென்று சாமியவர்போய்விட்டார்
அந்தச்சமயத்தில் ஆங்காரஇடிபகவான்
தெய்வலோகந்தானதிர தேவர்கிடுகிடென்ன

பாதாள ஆதிசேஷன் பயந்துகிடுகிடென்ன
செப்பக்கிரிகிடென்ன கிளிகள்கமரிக்கொள்ள
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துகிடுகிடென்ன
எட்டுத்திசை நடுங்கபேழுலகந்தத்தளிக்க
மழிவுபுன்கூடிபொரு பேரிடியாய்த்தானிடித்து
அருச்சுனற்குநேராக ஆகாயமீதிருந்து
உருதிராப்பக்கூட்டி உச்சியிலேதானிடித்தான்
வரட்டுமிடிபகவான் என்றல்லோவாள்விஜன்
இடிபகவான்வருகையிலே எழில்விஜயனென்னசெய்தா[ன்
ஒஞ்சரித்துத்தானிழிந்து ஒருபக்கம்இருக்கிலே
கண்மூழ்கிமுன்கூது கண்ணீருந்தாண்வடிய
இளப்புந்தவிபுமா யிருக்குதிடிகேளுருக்கு
மெச்சினேன்மருமகனே விட்டுவிடுமென்னையென்றார்
என்மனையின்னொளிபை சப்ந்திடுவேனுந்தனுக்கு
இப்பொழுதுங்களுக்கு இடிபாஸ்திரந்தாரேனென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
இனிமேல்கலியுகத்தில் எங்கேயிடித்தாலும்
அருச்சுனனென்றுசொன்னால் அப்பால்நீபோரீரோ
என்பேருசொன்னக்கா லேழுகாதம்போரீரோ
அவசியம்போறேனென்று ஆணையிட்டானிடிபகவான்
எவராலுப்பவந்திக்காண் என்னேயிடித்துக்கொல்ல
என்றதுகேட்டு ஏதுசொல்வானிடிபகவான்
ஆதிசிவனார் அனுப்பினருள்ளிடத்தில்
அங்காரத்துடனேவந்து அகப்பட்டேனுன்றன்கையில்
சத்தியவானென்றனைப்ப தப்பவிட்டாய்மகாராஜா
உன்-புண்ணியத்திலே பிழைத்துமேநான்போறேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
ஆதிசிவனார்க்கு அடிபணிந்தேனென்றுசொல்லும்
ஏதுவருத்தங்கள் என்னஇடர்செய்தாலும்
அருச்சுனன்வரத்துக்கு அழிவுவரப்போறதில்லை
ஈஸ்வரரேஉன்கையில் எந்தவிதமானாலும்
வரம்வாங்கவல்லபிரான் வாள்விஜயனென்றுசொல்லும்

இடிபகவானுங்குரைத்து எழில்விஜயன்தானுவப்பீ
அரனைமறவானும் அரன்மேலேதியானமானான்
சிவனைமறவானும் சிவன்மேலேதியானமானான்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனாரிடத்தில்
வந்தானிடிபகவான் வணங்கியேநமஸ்கரித்தான்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம்
உன்வார்த்தைகேட்டுப்போய் உயிரிழக்கநாளாச்சே
எழியயுங்கூடிபொரு பேரியயாய்த்தாலித்தேன்
இறங்கித்தலைசாய்த்து என்னையேபிடித்துக்கொண்டான்
சத்திபவான்அர்ச்சனனும் தப்பவிட்டானென்தலையை
எதுநீர்செய்தாலும் இளைத்துவிடானருச்சுனனும்
வாம்வாங்கிபோகவல்லான் வாள்விஜயனர்ச்சுனனும்
அவனை-சித்தமதில்நினைக்கத் தேகம்நடுங்குதையா
பின்னும்நினைவுகொண்டால் பிராணன்பதைக்குதையா
என்றுசொல்லி இடிபகவான் ஈசனைதற்குரைப்பார்
அத்தனைக்கும்வல்லவனோ ஆண்பிள்ளை அருச்சுனனோ
அரைநாழிக்கொள்ளையிலே அதமாக்கிப்போடுகிறேன்
அனேகமானசெல்லுகளை ஆண்டவனாருண்டுபண்ணார்
செல்லுகளே நீங்களும்போய் சிக்கிரம்விஜயனுட
சரீரமாதியந்தமெங்குஞ் சல்லடைக்கண்களாகத்
துளைத்துவிட்டுவாருமென்று சொன்னார்பாசுபாணி
வருத்துசெல்லுதான் வாள்விஜயன்தன்னருகே
அந்தச்சமயத்தில் அரிராமர்ஓடிவந்தார்
அருச்சுனாவாள்விஜயா அனேகமோசம்வருகுதடா
ஆண்டவன்கோபமதாய் அனேகஞ்செல்லனுப்பிவைத் [தான்
எச்சரிக்கையாகவே இருங்காணருச்சுனரே
என்றதுசொல்லியே எம்பெருமாளேகிவிட்டார்
அந்தச்சமயத்தில் அனேகமானசெல்லுவர
சுரேந்திரன்மைந்தனையுஞ் சூழ்ந்ததுசெல்லுகள்தான்
கண்டானே அர்ச்சுனனும் காண்டிபன்தான்வளைத்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைத்தணத்தொனித்தான்
அக்கினிஅஸ்திரத்தை அருச்சுனனுமுச்சரித்து

மாப்பிளவாக்கினான் வளரவிட்டான் அக்கினியை
அருச்சுனன் தவசுநிலை கம்பத்தருகாக
அக்கினிவருகுது அண்டமுடியாது
செல்லுகளண்டாமல் செந்தணலாய்ப்பத்துகுது
பாத்துபயந்து பறந்ததுசெல்லுநன்தான்
சங்கரன்தன்னருகே சரணமிட்டேதுசொல்லும்
ஐயாவேசுவபரரே ஆண்டவரேநீர்கேளும்
அருச்சுனன் தன்னருகே அக்கினிவளருகுது
ஆற்றமுடியாமல் ஐயாவேவந்துவிட்டோம்
ஆதிசிவன்கேட்டு அதிககோபமுண்டாகிச்
அந்தக்கனைக்கும்பல்லவனே அருச்சுனராசனுந்தான்
என்றுபரமசிவன் எரிபறந்துகோபமுடன்
வருணபகவானை வாருமென்றுதானழைத்து
யானையுடகாலபெருவான் யானைமழைபெய்யுமெனக்
கட்டளையிட்டுக் கடிகியேபோமென்றார்
ஆதிசிவன்வார்த்தை அவ்வருணன்தவறாமல்
சமுத்திரத்தின்நீரையுண்டு தான்வருதம்மேகங்களும்
கார்மேகமேழும் கறுத்துஎழும்பியது
ஆனைக்காலைப்போலவே அவ்வருணன் மழைபொழிய
அந்தச்சமயத்தில் ஆரும்வோடிவந்தார்
அருச்சுனனைவிஜயா ஆண்டவனார்கோபமதாய்
வருணபகவானை மழைபொழிய அனுப்பினார்
எச்சரிக்கையாகவேயிருமென்றுதானடந்தார்
அந்தச்சமயத்தில் ஆரும்வோடிவநதார்
மேகமெழும்பி மின்னல்வருனையிலே
கண்டானையாள்விஜயன் கனமோசம்வருகுதேன்று
வில்வளைத்துநாணிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
சக்கரமாரிபோலே சமேற்சரம்பொழிந்தான்
அம்பினுல்மேற்பந்தல் அருச்சுனன்போட்டுவிட்டான்
வான்மழைபொழியாமல் வாள்சரத்தால்பந்தலிட்டான்
வருணபகவானும் வந்துமழைபொழிந்தான்
வெள்ளமாய்த்தான்பெருக வேணமழைபொழிந்தான்

அருச்சுனன்வளர்த்தின அக்கினிக்குச்சேதமில்லை
வருணபகவானும் மனதுமிக்குளிர்ந்து
சந்தோஷப்பட்டானும் தாள்விஜயனர்ச்சுனன்மேல்
என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
வருணாஸ்திரத்தை வாள்விஜயன்கைக்கொடுத்தான்
வாங்கியேவாள்விஜயன் வருணனுக்கேதுசொல்வான்
ஆரனுப்பநீர்வந்தீர் அமரதுசெப்பமென்று
என்றதுகேட்டுவதுசொல்வான்வருணராஜன்
ஆதிசிவனார் அனுப்பினார்வந்தேனென்றான்
எழில்விஜயாஉனைஜெயிக்க பென்னால்முடியாது
ஈசனார்தன்தமக்கு இவ்வார்த்தைசொல்லப்போறேன்
ஆனால்வருணரேநீர் அரனார்க்கெடுத்துரையும்
கோடிசரணம் கும்பிட்டேனென்றுசொல்லும் [னே
அச்சாடல்செய்வதேனோ அருச்சுனன்மேல்கோபமே
கடிகியேவந்தெனக்கு காட்சிதரச்சொல்லுமையா
போய்வாருமென்று பொட்டெனவேசரணமிட்டான்
வாயுவேகமாகவே வருணராஜன்வந்துவிட்டான்
ஆதிசிவனுக்கு அடிவணங்கித்தெண்டனிட்டான்
அருச்சுனனைஜெயிக்க ஆராலுமுடியாது
உம்பர்பிரானாரே உம்மாலேமுடியாது
அத்தனைக்கும்வல்லபிரானானபினாலிங்குவந்தான்
சோசிணவைரத்தைநீர் கொடுத்தனுப்பும்ஈஸ்வரரே
என்றதுகேட்டு ஈசுரனார்கோபமானார்
வாள்விஜயன்தன்னுடைய மனமுறிக்கழிக்கிறேன்பார்
கழுதைநேர்கூளிகளும் கடிகியேஉண்டுபண்ணார் [ர்
அருச்சுனன்மாங்கிஷத்தை அடங்கலுமுண்ணுமென்று
கவ்விப்பிடுங்கியே கடிகியேயுண்ணுமென்றார்
இமையோர்பிரானும் இன்னமேதுண்டுபண்ணார்
கருவாண்டுசெவ்வாண்டு கணக்கில்லாதுண்டுபண்ணார்
கொட்டுகின்றகுளவியை கோடியாவருண்டுபண்ணார்
சுரோத்திரன்மகனுடலைத் துளைபாய்த் துளைபாயுமென்றார்
அரைக்ஷணநாழிகையில் அருச்சுனனைக்கொல்லுமென

பகாதேவர்சிலவருள வருகுதுசேனைகள்தான்
குளிகளும் கூளிகளும் கூட்டமாய்வருதங்கே
கணகோசம்வருதென்று கரியமால்தானறிந்து
அருச்சுனராஜனுடை அரிராயரோடிவந்தார்
கணையுடயா அர்ச்சுனரே கழுகுகள்வருதுகடா
குளிகளுங்கழுகுகளும் கூளிகளும்வண்டுகளும்
அனேகம்வருகுது அங்கந் துளைபடுத்த
எச்சரிக்கையாகவே இருக்கணும் அருச்சுனரே
என்றதுகேட்டுஇந்திரன்மகனை துரைப்பான்
அடிபெறுமேலதாகும் ஐயர்பெருமானே
உன்வலிமையாலே உம்பர்புரம்வந்தேனே
எந்தவிதத்திலேயும் ஈடேறப்பாருமையா
வணங்கிச்சரணம்பண்ணினான் மாயன்பெருமானை
தரணியளந்தவரும் சந்தோஷப்பட்டாராம்
கழுகுகளும் கூளிகளும் கவ்விசதைகொண்டாளும்
அருச்சுனன்தேகத்துக்கு அழிவில்லாதேயிருக்க
என்றுவரமளித்து எம்பெருமான்போய்நடந்தார்
வந்துபிடுங்கிற்று வாள்விஜன்தேகமெல்லாம்
கல்லடைக்கண்போலே சமமாய்த்துளைப்படுத்தும்
எப்போதும்போலே வற்படுந்தேகமெல்லாம்
வைகள் நகம்பேர்த்து கடித்தபல்லுங்கூர்மழுங்கி
மூக்குகள் தானொடிந்து முண்டங்களாய்போகுது
ஆதிசிவனாரிடம் அடிபணிந்துதெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைந்து கழுகுகள்முறையிடும்
எங்களாலானமட்டும் எழில்விஜயன்தேகமதை
கல்லடைகண்களைப்போற் சதையைத்துளைக்கிடுவோம்
சதையைத்துளைக்கிடுவோம் வதையைப்பிடுங்கிடுவோம்
குப்பல்குப்பலாகவேதான் குவிப்போமமாங்கிஷத்தை
குவித்தவரை நாழிகைக்குள் கூடிவிடுந்தேகமதில்
துளைத்தவரை நாழிகைக்குள் கோணமுடன்முன்போல
பின்னுமந்தசதைகவ்விப் பிடுங்கியெறிந்திடுவோம்
அருச்சுனன்தேகமதை அழித்தோம் அழியவில்லை

கடித்தபல்லுங்கூர்மழுங்கி கைகள் நம்பேர்ந்துதையா
எங்களால்முடியாது இளவிஜயனைச்செயிக்க
ஆராலுமுடியாது அருச்சுனனைச்செயிக்க
கோரினவரத்தைக் கொடுத்துவிடும் ஆண்டவரே
அவ்வார்த்தைகேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
எத்தனைநாள் தவசிருந்தும் ஏனென்றுகேட்பேனே
உன்றபரமசிவன் இருந்தார்சிங்காதனத்தில்
கற்பூரமண்டபத்தில் கர்த்தர்கொலுவிருந்தார்
மாயன்பெருமாளும் மறுபடியுமோடிவந்தார்
அருச்சுனபார்த்திபா ஆதிசிவன்மோசஞ்செய்தார்
கற்பூரக்கொடிமுடியில் கர்த்தர்கொலுவிருந்தார்
கற்பூரக்கொடிமுடியைக் கனலாற்கொளுத்திவிட்டால்
கலகத்தைச்செய்துவிட்டால் காட்சிதரவந்திடுவார்
என்றுசொல்லி எம்பெருமான்போய்நடந்தார்
அப்போதருச்சுனனும் ஆனமுகனேதுசெய்வான்
வில்லைத்தாரிபூட்டி வில்லைக்குணந்தொளித்தான்
அக்கினிபாணமதை அருச்சுனன் உச்சரித்து [று
மந்திரத்தைஉச்சரித்து மண்டபத்தை கொளுத்துமென்
மார்புரளவாக்கியே தோள்புரளவிட்டுவிட்டான்
வந்தபாணம் மகாதேவர்மண்டபத்தில்
கற்பூரமண்டபத்தைக் கடுகிக்கொளுத்திடவே
மண்டபத்தானெரிய மகாதேவர்பார்த்துவிட்டார்
பாதகரோமாயவரே பார்த்திபன்தன்வலுமை
என் வீட்டைக்கொளுத்தியே வேணவரம்வாங்கவந்தான்
இப்படிச்செய்தவர்களெவர்களையும் நானறியேன்
சதுர்யுகமட்டும் தவசுகள்பண்ணாலும்
அருச்சுனன் தன்தமக்கு அரியவரந்தருவதில்லை
கற்பூரமண்டபத்தைக் கடுகியேவிட்டெழுந்து
சாம்பிராணிமண்டபத்தில் சாமிவந்துகொலுவிருந்தார்
சாம்பிராணிமண்டபத்தைக் கனலாய்கொளுத்துமென்றுர்
சொல்லிநடந்தாரே சுவாமிபெருமாளும்
மதுகாசருச்சுனனும் வசிவில்தனைந்துக்கொண்டு

அக்கினி அஸ்திரத்தை அருச்சுனன்முடுக்கி விட்டான்
சாம்பிராணிமண்டபத்தைத் தன்வாயுருக்கிடுது
கண்டார்மகாதேவர் கடுகியங்கேதுசொல்வார்
கண்டீர்களோதேவர்களே கண்டீபன் ஆண்மைகளை
என்பட்டைக்கொளுத்திடவே வேணவரம் வரங்கவந்தா
இந்த ஆண்மையுள்ளவனை எங்குமேநானறிபேன் [ன்
வெண்ணீறுமண்டபத்தில் விமலருப்போய்நடந்தார்
மாயன்பெருமாளும் மாயமாய்போடுவந்து
அருச்சுனும்பார்த்திபா அதிகமோசம்வந்ததடா
விபூதிமண்டபத்தில் வெந்தருப்வந்தமர்ந்தார்
அப்பெரியமண்டபத்தை அதமாக்கிப்போடுமென்றார்
அவ்வார்த்தைசொல்லி அரிராமர்போய்நடந்தார்
வில்வளைத்து நாரிபூட்டி வில்லெக்குணத்தொளித்தான்
வருணபகவான் வரமளித்த அஸ்திரத்தை
மந்திரானகமிட்டு வாங்கினன்மார்புரள
வந்துவிழுந்தது மயேஸ்பரனார்மண்டபத்தில்
வான்வண்ழுபோலாக வந்துபொழிந்திடுமாம்
வெண்ணீறுமண்டபமும் மெத்தக்கரைந்திடவே
கண்டார்மகாதேவர் கண்கொள்ளாக்கோபமுடன்
ஆயன்பெமானே அருச்சுனன் ஆண்மைதனை
கண்டீரோமாயவரே காண்டீபன் ஆண்மைதனை
எத்தனைமண்டபத்தை இடித்துத்தகர்த்துவிட்டான்
இப்படிப்பட்டவற்கு எப்படி வரமருள்வேன்
இங்கிருந்தோமானால் இப்படிக்குப்பண்ணுகிறான்
பாதாளமண்டபத்தில் பரசிவன்போகவென்று
எழுந்தார்மகாதேவர் எல்லாருங்கூடிவர
அந்தச்சமயத்தில் அரிராமரோடிவந்து
அருச்சுனும்பார்த்திபா அதிகமோசம்வந்ததடா
பாதாளமண்டபத்தில் பரமசிவன்போறார்காண்
போய்விட்டாராமானால் பிற்பாடுகாணொணாது
கணக்கிடைபாது கர்த்தருடசேவை
போகாமலேதடுத்தால் பெருமாளைக்கண்டிடலாம்

அந்தரமையத்தில் ஆதிசிவனெழுந்தார்
மெய்க்கமலையாள் வேடன்வடிவெடுத்தார்
பெண்மயிலைவந்தாளும் பெரியதொருவேடரானார்
விக்கினவிநாயகர் வேடர்வடிவெடுத்தார்
சூர்துரந்தவேலராந்த சுப்ரமண்யர்வேடரானார்
அமராபதிராஜனும் அங்கிரன்வேடரானார்
அறுபத்துமூவரும் அங்கேயொருவேடரானார்
அருக்கனையெல்லவென்று அனைவரும்வேடரானார்
கயிலையைத்தானடைத்து இப்போசமயமென்றார்
கயிலாசன்தன்னுடனே எழுபேர்வேடரானார்
வாரர்வடிவெடுத்து வள்ளிஜயன்தன்னருகே
காற்செருப்புத்தோற்குல்லாவும் கையில்துப்பாக்கிகளும்
மான்வலையுந்தில்லாக்கோல் மருந்துகெப்புண்டுகளும்
பெட்டை குண்டு துப்பாக்கிதேரிசம்தோளில்வைத்து
சின்னவேடன்பெரியவேடன் சிவனுங்கிழவேடரானார்
பொன்னேற்றாடிக்கடித்துப் புறப்பட்டாரவேடரெல்லாம்
மற்றுமுள்ளதேவதைகள் பயிரவனும்வடிவெடுத்தார்
கருநாயுஞ்செந்நாயும் கணக்கில்லாநாய்கள்வர
காட்டைவளைத்தார்கள் கருநாயைச்சுத்திவிட்டார்
அம்புவில்லாயுதமும் ஆண்டவனார்கைப்பிடித்து
வாரர்கள்வேடரெல்லாம் வளைத்துத்துரத்தியல்லோ
அத்தண்டவேடுவரும் அருச்சுனருகில்வந்து
ஆர்காணுஞ்சங்கமரே அறிவைப்படைத்தவரே
புதிதாயத்தவசுபண்ணிப் புத்திமெத்தக்கற்றவரே
நீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
ஏழைகண்டாய்வேடுவனென் எட்டுநாள்காத்திருந்தேன்
காத்திருந்தியேனமதை கணைபோட்டெய்துவிட்டேன்
காயப்பட்டேனமும் கடிதுயேவந்திங்கே
என்வந்தசாடையிது இப்போதடிப்பிடித்து
அடிபிடித்துவந்தோம்நாம் ஆனதொருசங்கமரே
தப்பக்குறடனே நீர் கட்டிவைத்தகாரியமேன்
பன்றியோடிருக்கிறேரும் பன்றிதனைவிட்டுவிடும்

34

பிள்ளையுங்குட்டிகளும் பெரும்பசியாய்ப்புலம்புகிறோம்
கட்டவிழ்த்துவிட்டுவிடும் கடுகப்புசித்திடுவோம்
என்றுசொல்லிக்கொண்டு ஈஸ்பரனார்தான்வரவே
சாண்டீபனர்ச்சுனனுங் கடிகியேவதுசொல்வான்
சிவத்தியானமாகவே சிலைவிஜயனேதுசொல்வான்
ஆரடாவேடுவனே அப்புறத்தேபோய்விடுங்காண்
அபயக்குரல்கேட்டால் ஆதரிப்பேனல்லாமல்
இனிமேல்விடுவேனென்று எண்ணாதேஉன்மனதில்
பன்றியைத்தின்றாலே பசியாறிப்போவாபோ [ண்
குழந்தைக்குழந்தனுக்குங் குலத்தார்க்கும்போதுமோகா
தன்னைப்போல்ஜீவன்களை தான்கொல்லஎண்ணுவரோ
சிவனாரைநோக்கியே செய்கிறேன்தவசுநிலை
எதிரிட்டுக்கொள்ளாதே இடையுங்கள்வேடுவரே
அரகரா அரனேயென்று அடித்தாரேஜெயகண்டிகை
சம்போசிவனேயென்று தொனித்தானேசங்குதனை
ஆதிசிவனும் அருச்சுனற்கேதுசொல்வார்
எத்தனைசொன்னாலும் இரங்கிலையோயுன்மனது
கருமம்நினைத்தாக்கால் சாமிவந்துதுணையாவார்
வயிறுபசிதீர்த்தாக்கால் மகாதேவர்துணையாவார்
உன்-தாயார்தகப்பனுக்குந் தமையற்குந்தம்பியற்கும்
ஒருகோடிமோட்சமுண்டு உச்சாகஞ்செய்யுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனரேதுசொல்வார்
ஒருக்காலுரைத்தேனே மறுக்காலுரைப்பேனோ
தவசுநிலைவேளையிலே சத்தங்கள்போடாதே
சந்திரசூரியர்கள் தவறிநிலைதப்பினாலும்
நாலாம்பிரண்டுகலியுகம்வந்தாலும்
சிக்கிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
பொய்யாறச்சொன்னசொல்லு மறந்துவிடப்போறதில்லை
ஆதரிப்பேனல்லாமல் அலையவிடப்போறதில்லை
மறுவார்த்தைபேசாதே வல்லுயிரைவாங்கிடுவேன்
எதிரேவரவேண்டாம் இடையதில்லுவேடுவரே
அரகரா அரனென்றன் அரன்மேலேதியானமாஞ்ன்

அரகரா அரனேயென்றான் அரன்மேலேதியானமானான்
அப்போதுபாமசின் அச்சுனற்குவதுசொல்வார்
தான்-வழையன்றோசங்கமரே என்னைமிரட்டுகிறாய்
என்னை துரத்திவிட்டேன் பன்றியைத்தின்னவென்றோ
என்னைமிரட்டுகிறாய் இவ்வார்த்தைதானறியேர்
நான்போவேனென்று எண்ணாதேஉன்மனதில்
ஆறுபோவேடுவர்கள் அருங்கிளியாள்வேடுவச்சி
உத்தமனே நீயொருவனாகந்துமேகூடியல்லோ
பன்றிதன்னைச்சுட்டு பங்கிட்டுக்கொள்ளுவோமவா
பங்குபோட்டுத்தின்று பசியாறிக்கொள்ளுமென்று
என்றதுகேட்டுபேது சொல்வார்சங்கமரும்
ஜாதிக்குதக்கபுத்தி தானிருக்கும்வேடருக்கு
என்றுசொல்லிவேடுவரு மேதுசொல்வாரப்போது
ஆண்டிப்பயலுக்கு அறிவுகிடையாது
பசிக்குதெனவேண்டி பன்றிமேலம்புதொட்டேன்
தப்பித்துவோடிவரக் கப்பமதிற்கட்டலாமோ
கீழேயிறங்கிவாடா கேடுகெட்டசங்கமனே
என்சமர்த்தும்உன்சயர்த்தும் இப்போதெரியுமடா
சண்டைக்குவாடா நீ சமர்த்துள்ளசங்கமனே
என்றவுடன்கம்பம்விட்டு இறங்கினான்வாள்விஜயன்
வாள்விஜயன்றன்முதுகில் மட்சரேகைபார்க்கவென்று
பரமசிவனும்வந்து பார்த்தனுடன்சண்டைபண்ணார்
ஆண்டவனென்றறியாமல் அடித்தான்காண்வில்லாலே
பரமருங்கீழ்விழுந்து பார்த்தனையெடுத்துக்கொண்டார்
பார்வதியாள்பார்த்தாளே பார்த்தனிடமட்சரேகை
பார்த்திபனென்று பார்வதியாள்பேர்கொடுத்தாள்
பாசுபதாஸ்திரம் பரமருந்தான்கொடுத்தார்
அநேகதாம்பெற்று அருச்சுனனுந்தானவாரான்
அண்ணனிடம்வந்து ஆசையுடனுரைத்தான்
பன்னிரண்டுவருஷமும் பாரவனந்திரிந்து
ஐவர்பஞ்சபாண்டவரே ஆரணியம்விட்டுநீங்கள்
அக்கியாதவாசம் அருந்தபசுசெல்மென்று

இச்சையுடனுரைத்து எம்பெருமாள்பயணமானர்
வட்டமாங்கருடனேறி மாயவருய்போகலுற்ருர்
துவாரகாபுரிநோக்கி சுவாமியவர்போகலுற்ருர்
அப்பால்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
பரமருடன் தயவால் பன்னிரண்டுவருஷஞ்சென்று
வனவாசமே திரிந்து வாரார்கள்பஞ்சவர்கள்
ஐயவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
நாடேவருகிருர் ராமருடதன்தயவால்
பாரிலுள்ள ஆடவரும் பாலகரும்மங்கையரும்
ஆசிரியரும்மற்ருேரும் யாவர்களும்தான்படிக்க
முன்னுளில்மூத்தோர் மொழிந்தவனவாசமதை
இன்னுளிற்போற்ற வெழுகாவெழுத்ததனுல்
அச்சுக்கூடத்ததிபரனேகரிதுவ்வரையில்
உச்சிதமாயச்சிலிதை யோங்கிப்பதிப்பித்தார்கள்
அட்டதிக்குப்புகழ அச்சிலிதைத்தானியற்றி
வருேருப்மற்ருேருங் களிப்பாய்ப்படிப்பதற்குச்
காற்குற்றமில்லாமல் சுத்தப்பிரதியதாய்
தப்பிதங்களைத்திருத்தி தன்னுலியன்றமட்டும்
பதிப்பித்தார் ராமாநுஜம் விலாசம்பிரஸ்தனில்
இந்தக்கதையிலே எழுத்துப்பிழையிருந்தால்
தப்புப்பிழைதிருத்தி தயவுபண்ணிஇரட்சிக்கவும்
ஆல்போல்தழைத்து அறுபோல் வேருன்றி
பால்போல்ருசிக்கப் பாரில் மிகத்தான்வாழி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல்தான்வாழி
ஓங்கியநால்வேத மூயிர்பலவுந்தான்வாழி

விருத்தம்

இப்பெருங் கதையை யுரைத்தவர் படித்தோ
ரெதிஞேர் பொருள்விரித் திசைத்தோர்
செப்பரு மன்பாற் கேட்டிடுளோ ரிதன்பேர்
செப்பினோர் தீமையிற் றீர்த்தே
எப்பெருஞ் சிறப்பு மைந்தரும் வாழ்வு
மிசைந்ததீர்க் காயுளு முளராய்
ஒப்பருங் கதியி னிலேபெற விளங்கி
யும்பரும் புகழவாழ் குவரே

பஞ்சபாண்டவர் வனவாசம் முற்றிற்று.

1925-ஆம் ஆரம்பம் 1927 ஆம் நவம்பர்மீ முடிவு